# THE

# RAMÁYANAM

BY

KAMBAN.



## AYODHYA KANDAM.

Specially edited for the use of Colleges and Schools,

*WITH ARGUMENTS TO THE CANTOS.*

**COPYRIGHT EDITION.**


MADRAS:

Published by the

MADRAS SCHOOL BOOK AND VERNACULAR LITERATURE SOCIETY,

AND SOLD AT THEIR DEPOSITORY, OLD COLLEGE.

1883.

கடவுள் துணை.

# கம்பராமாயணம்.

இரண்டாவது:

## அயோத்தியாகாண்டம்.

இஃது

வித்தியாசாலைகளின் உபயோகத்துக்காக

பிழையறப் பரிசோதிப்பித்து,

சென்னை ராஜதானிப் பாடசாலைப்

புத்தகச்சங்கத்தாரது 12 மே

உத்தரவுக்கிணங்க

பாடலக்கதைகளின் சுருக்கத்துடன்

சென்னை:

ஸி. க. அ. சங்கத்தாரது அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

௧௮௮௬.

# அட்டவணை.



# கம்பராமாயணம்.

## இரண்டாவது: அயோத்தியாகாண்டம்.

### 1—வது. மந்திரப்படலம்.

ஒருநாள் தசரதமகாராஜா சபாமண்டபத்தில் தனித்திருந்து தன் மந்திரிமாரை வரவழைக்க, மகா புத்திசாலிகளும் தாக்ஷிணியமின்றி அரசர்க்கு நீதியுரைப்பவருமாகிய அந்த மந்திரிகள்வந்து கூடியபின் அம்மகாராஜா அவர்களைநோக்கி, நான் எமதுகுலத்துப் பெரியோர் காத்துவந்தபடி இதுவரையிலும் உங்கள் சகாயம்பெற்று இயன்றமட்டும் பூமியைக்காத்து ஜனங்களுக்கு நன்மைசெய்தேனேயல்லது என் ஆத்துமாவுக்கு நன்மைதேடினேனில்லை; இப்போது அறிவைமழுக்கும்படியான மூப்பு எனக்கு வந்துவிட்டதனால் இனி அந்தப்பாரத்தை என் குமாரனாகிய இராமனிடத்து இறக்கி இளைப்பாறுவதுமன்றி, அவ்விராமனுக்குத் திருமகள்விவாகம் கண்டதுபோல் நிலமகள்விவாகத்தையுங் கண்டுவந்து பெரியோர்கள் பழியாதிருக்கும்படி ஆத்துமலாபத்திற்குரிய தவநிட்டைபெற விரும்புகின்றேன். நீங்கள் இம்மையாட்சிக்கு இதுவரையிலும் துணைப்பட்டதுபோல் மறுமையாட்சிக்கும் துணைப்படவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன் என்றனர். இதைக்கேட்ட மந்திரிமுதலாயினோர் தசரதமகாராஜனைப் பிரியநேர்ந்ததேயென்கிற விசனமும், ஸ்ரீராமனை அரசனாகப்பெற்றோமென்கிற சந்தோஷமும் கலந்தசிந்தையராய் இரண்டுகன்றுகளுக்கு இரங்குகின்ற பசுவைப்போல் சற்றுச் சும்மாவிருக்க, வசிட்டமாமுனிவர் அரசனைநோக்கி, ஓ மகாராஜனே, ஆளுகையில் உம்பெரியோரோடு நீர் ஒத்தவராயினும் சகல குண பூரணரான இராமசந்திரனைப் பெற்றதனால் அவர்களினும் நீர் மேம்பட்டிருக்கிறீர்; உமது துரைத்தனமில்லையென்கிற குறையில்லாமல் ஜனங்களெல்லாம் விசேஷமாய்க் களிக்கும்படி உம்முடைய குமாரர் நிர்வகிக்க வல்லவர்; ஆதலால் நீர் எண்ணிய எண்ணம் தகுந்ததே என்றுசொல்ல, சுமந்திரரும் அதையே ஆமோதித்து அரசனைநோக்கி விண்ணப்பஞ்செய்தார். இவைகளைக்கேட்ட மகாராஜா மகனைப்பெற்றநாளினும் மிகுந்த ஆனந்தத்தையடைந்து சுமந்திரரையே இராமபத்திரனை அழைத்துவரும்படி கட்டளையிட்டார். அப்படியே சுமந்திரர்சென்று சொல்லியதைக்கேட்டதும் ஸ்ரீராமமூர்த்தி லக்ஷ்மணரோடு தேர்மேலேறித் தன் தாதைசன்னிதானஞ்சென்று பணிந்[illegible]தை மகனைக் கட்டியணைத்து, அப்பா! நம்முன்னோர் அனு[illegible]படி நான் இதுவரையிலும் இராச்சி

யபரிபாலனஞ்செய்து இனி அதனை உன்பாரமாக்கி நான் வீடுபெறத் தக்க முயற்சிசெய்ய விரும்புகின்றேன். இதனை நீ மறுக்காமல் ஏற்றுக் கொண்டு என்னைக் காப்பாற்றவேண்டுமென்றுசொல்ல, இராமரும் அது தனக்குப் பிரியமல்லதாயினும் பிதாபணித்ததைச் செய்துதீரவேண்டு மென்னுங் கடமையால் அங்கீகரித்தனர். அங்கீகரித்ததும் சக்கரவர்த்தி மிக்ககளிப்போடு தன் மாளிகைக்குச்சென்று தன்மகற்கு முடிசூட் டுஞ்செய்தியை அறிவிக்க முறைமுறையே யாவருங்கேட்டுத் தந்தமக்கே அவ்வரசுநேர்ந்ததுபோல் உடம்புதெரியாமல் ஆனந்தபரவசராயிருந்தனர். அதுகண்டு அரசன் இதென்னஆச்சரியம்! நீங்கள் இப்படிக் களிக் கக் காரணம்யாது என்றுவினவ, அவர்கள், அவரிடமுள்ள நற்குணங் கள் இப்படிக் களிப்பிக்கின்றன; ஊரினிடத்து யாவர்க்கும் உபயோகமான குளம் நிறைவதையும், அப்படிப்பட்ட கனிமரம் பழுப்பதையும், மேகம் வந்து பொழிவதையும், ஆற்றுநீர் கழனிமேல் பாய்வதையுங்கண்டு சந்தோ ஷியாமலுமிருப்பார்களோ குடிகள் என்று விண்ணப்பஞ்செய்யக்கேட்டுச் சோதிடம் வல்லோரையழைத்துப் பட்டாபிஷேகத்துக்கு நாளேற்படுத்திக் கொண்டிருந்தனர். இப்படியிருக்கையில் நால்வர் பெண்பிள்ளைகள் கோ சலையினிடம் சென்று இச்செய்தியை அறிவிக்க அவள், இனி அரசன் துறப்பான் என்கிற விசனமொருபுறம் இருக்கவும் மங்களச்செய்தி சொன் னவர்க்கு வெகுமதியளித்து பிராமணர்க்குப் பலதானங்கள்கொடுத்து ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் ஆலயத்துக்குச்சென்று அவர் திருவடிவணங் கித் தன் மகற்கு நன்மைகள்பெருகும்படி பலநோன்புகள் நோற்கத்தொ டங்கினள் என்பது இப்படலத்தின் கதை.

---

1 வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூ தத்தின் வைப்பெங்கும்
ஊனு முயிரு முணர்வும்போ லுள்ளும் புறனு முளனென்ப
கூனுஞ் சிறிய கோத்தாயுங் கொடுமை யிழைப்பக் கோற்றுறந்து
கானுங் கடலுங் கடந்திமையோ ரிடுக்கண் டீர்த்த கழல்வேந்தை.

வேறு.

2 மண்ணுறு முரசின மழைபி னார்ப்புறப்
பண்ணுறு படர்சினப் பருமயானையான்
கண்ணுறு கவரியங் கற்றை சுற்றுற
எண்ணுறு சூழ்ச்சியி னிருக்கை யெய்தினன்.

3 புக்கபி னிருபரும் பொருவில் சுற்றமும்
பக்கமும் பெயர்கெனப் பரிவி னீக்கினன்
ஒக்க நின்றுலகளித் தியோகி னெய்திய
சக்கரத் தவனைத் தமிய னாயினன்.

4 சந்திரற் குவமைசெய் தாள வெண்குடை
அந்தரத் தளவுநின் றளிக்கு மாணையான்
இந்திரற் கிமையவர் குருவை யேய்ந்ததன்
மந்திரக் கிழவனை வருகென் றேவினான்.

5 பூவரு பொலன்கழற் பொருவின் மன்னவன்
காவலி னாணையின் கடவு ளாமெனத்
தேவரு முனிவரு முணருந் தேவர்கண்
மூவரி னல்வரா முனிவந் தெய்தினான்.

6 குலமுதற் றொன்மையுங் கலையின் குப்பையும்
பலமுதற் கேள்வியும் பலனு மெய்தினார்
நலமுத னலியினு நடுவு நோக்குவார்
சலமுத லறுத்தருந் தருமந் தாங்கினார்.

வேறு.

7 உற்றது கொண்டு மேல்வந் துறுபொரு ளுணருங் கோளார்
மற்றது வினையின் வந்த தாயினு மாற்ற லாற்றும்
பெற்றியர் பிறப்பின் மேன்மைப் பெரியவ ரரிய நூலுங்
கற்றவர் மானம் நோக்கிற் கவரிமா வனைய நீரார்.

8 காலமு மிடனு மேற்ற கருவியுந் தெரியக் கற்ற
நூலுற நோக்கித் தெய்வந் துணித்தறந் துணித்த மேலோர்
சீலமும் புகழ்க்கு வேண்டுஞ் செய்கையுந் தெரிந்து கொண்டு
பால்வரு முறுதி யாவுந் தலைவற்குப் பயக்கு நீரார்.

9 தம்முயிர்க் குறுதி யெண்ணார் தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கும் வீரர்
செம்மையிற் றிறம்பல் செல்லாத் தேற்றத்தர் தெரியுங் கால
மும்மையு முணர வல்லா ரொருமையே மொழியு நீரார்.

வேறு.

10 நல்லவுந் தீயவு நாடி நாயகற்
கெல்லையின் மருத்துவ னியல்பி னெண்ணுவர்
ஒல்லைவந் துறுவன வுற்ற பெற்றியின்
தொல்லைநல் வினையென வுதவுஞ் சூழ்ச்சியார்

11 அறுபதி னாயிர ரென்ன வாண்டகைக்
குறுதியி லொன்றிவற் குணர்வென் றுன்னலாம்
பெறலருஞ் சூழ்ச்சியர் திருவின் பெட்பினர்
மறிதிரைக் கடலென வந்து சுற்றினார்.

12 முறைமையி னெய்தினர் முந்தி யந்தமில்
அறிவனை வணங்கித்த மாசைக் கைதொழு
திறையிடை வரன்முறை யேத்தி யேற்றசொற்
றுறையறி பெருமையா னருளுஞ் சூடினார்.

13 அன்னவ ரருளமைந் திருந்த வாண்டையின்
மன்னவ னவர்முக மரபி னோக்கினான்
உன்னிய தரும்பெற லுறுதி யொன்றுள
தென்னுணர் வனையநீ ரினிது கேட்கென.

14 வெய்யவன் குலமுதல் வேந்தர் மேலவர்
செய்கையி னொருமுறை திறம்ப லின்றியே
வையமியா னாண்டவாண் டுங்கண் மாட்சியால்
ஐயமி லறுபதி னாயிரம் மரோ.

15 கன்னியர்க் கமைவருங் கற்பின் மாநிலந்
தன்னையித் தகைதரத் தருமங் கைதர
மன்னுயிர்க் குறுவதே செய்து வைகினேன்
என்னுயிர்க் குறுவதுஞ் செய்ய வெண்ணினேன்.

16 விரும்பிய மூப்பெனும் வீடு கண்டயான்
இரும்பிய லனந்தனு மிசைந்த யானையும்
பெரும்பெயர்க் கிரிகளும் பெயரத் தாங்கிய
அரும்பொறை யினிச்சிறி தாற்ற வாற்றலேன்.

17 நங்குலக் குரவர்க ளவையி னீங்கினார்
தங்குலப் புதல்வரே தரணி தாங்கப்போய்
வெங்குலப் புலன்கெட வீடு நண்ணினார்
எங்குலப் புறுவரொன் றெண்ணி நோக்குவேன்.

18 வெள்ளநீ ருலகினின் விண்ணி னாகரின்
தள்ளரும் பகையெலாந் தவிர்த்து நின்றயான்
கள்ளரிற் கரந்துறை காம மாதியாம்
உள்ளுறை பகைஞருக் கொதுங்கி வாழ்வனோ.

19 பஞ்சின்மென் றளிரடிப் பாவை கோல்கொள
வெஞ்சினத் தவுணர்தேர் பத்தும் வென்றுளேற்
கெஞ்சலின் மனமெனு மிழுதை யேறிய
அஞ்சுதேர் வெல்லுமீ தருமை யாவதோ.

20 ஒட்டிய பகைஞர்வந் துருத்த போரிடைப்
பட்டவ ரல்லரேற் பரம ஞானம்போய்த்
தெட்டவ ரல்லரேற் செல்வ மீண்டென
விட்டவ ரல்லரேல் யாவர் வீடுளார்.

21 இறப்பெனு மெய்ம்மையை யிம்மை யாவர்க்கு
மறப்பெனு மதனின்மேற் கேடு மற்றுண்டோ
துறப்பெனுந் தெப்பமே துணைசெ யாவிடிற்
பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்க லாகுமோ.

22 அருஞ்சிறப் பமைவருந் துறவு மவ்வழித்
தெரிஞ்சுற வெனமிகுந் தெளிவு மாய்வரும்
பெருஞ்சிறை யுளவெனிற் பிறவி யென்னுமிவ்
விருஞ்சிறை கடத்தலி னினிய தியாவதோ.

23 இனியது போலுமிவ் வரசை யெண்ணுமோ
துனிவரு நலனெனத் தொடர்ந்து தோற்கலா
நனிவரும் பெரும்பகை நவையி னீங்கியத்
தனியர சாட்சியிற் றாழு முள்ளமே.

24 உம்மையா னுடைமையி னுலக மியாவையுஞ்
செம்மையி னோம்பிநல் லறமுஞ் செய்தனன்
இம்மையி னுதவிநல் லிசைந டாயநீர்
அம்மையு முதவுதற் கமைய வேண்டுமால்.

25 இழைத்ததீ வினையையுங் கடக்க வெண்ணுதல்
தழைத்தபே ரருளுடைத் தவத்தி னுருமேல்
குழைத்ததோ ரமுதுடைக் கோர நீக்கிவே
றழைத்ததீ விடத்தினை யருந்த லாகுமோ.

26 கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப்
பிச்சமுங் கவிகையும் பெய்யு மின்னிழல்
நிச்சய மன்றெனி னெடிது நாளுண்ட
எச்சிலை நுகருவ தின்ப மாகுமோ.

27 மைந்தனை யின்மையின் வரம்பில் காலமும்
நொந்தன னிராமனென் னுளைவை நீக்குவான்
வந்தன னினியவன் வருந்த யான்பிழைத்
துய்ந்தனன் போவதோ ருறுதி யெண்ணினேன்.

28 இறந்திலன் செருக்களத் திராமன் றாதைதான்
அறந்தலை நிரம்பமூப் படைந்த பின்னரும்
துறந்தில னென்பதோர் சொல்லுண் டானபின்
பிறந்தில னென்பதிற் பிறிதுண் டாகுமோ.

29 பெருமக னென்வயிற் பிறக்கச் சீதையாந்
திருமகண் மணவினை தெரியக் கண்டயான்
அருமக னிறைகுணத் தவனி மாதெனு
மொருமகண் மணமுங்கண் டுவப்ப தாயினேன்.

30 நிவப்புறு நிலனெனு நிரம்பு நங்கையும்
சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும்
உவப்புறு கணவனை யுயிரி னெய்திய
தவப்பய னிழப்பது தரும மன்றரோ.

31 ஆதலா லிராமனுக் கரசை நல்கிப்
பேதைமை தாய்வரு பிறப்பை நீக்குற
மாதவந் தொடங்குவான் வனத்தை நண்ணுவேற்
கியாதுநின் கருத்தென வினைய கூறினான்.

வேறு.

32 திரண்ட தோளின னிப்படி செப்பலுஞ் சிந்தை
புரண்டு மீதிடப் பொங்கிய வுவகைய ராங்கே
வெருண்டு மன்னவன் பிரிவெனும் விம்முறு நிலையால்
இரண்டு கன்றினுக் கிரங்குமோ ராவென விருந்தார்.

33 அன்ன ராயினு மரசனுக் கதுவல துறுதி
பின்ன ரில்லெனக் கருதியும் பெருநில வரைப்பின்
மன்னு மன்னுயிர்க் கிராமனின் மன்னவ ரில்லை
யென்ன வுன்னியும் விதியது வலியினு மிசைந்தார்.

34 இருந்த மந்திரக் கிழவர தெண்ணமு மகன்பாற்
பரிந்த சிந்தைய மன்னவன் கருதிய பயனும்
பொருந்து மன்னுயிர்க் குறுதியும் பொதுவுற நோக்கித்
தெரிந்து நான்மறைத் திசைமுகன் மகனிவை செப்பும்

35 நிருப நின்குல மன்னவர் நேமிபண் டுருட்டிப்
பெருமை யெய்தின ரியாவரே யிராமனைப் பெற்றார்
கரும மேயிது கற்றுணர்ந் தோய்க்கினிக் கடவ
தருமமும் மிது தக்கதே யுரைத்தனை தகவோய்.

36 புண்ணி யந்தொடர் வேள்விக ளியாவையும் புரிந்த
அண்ண லேயினி யருந்தவ மியற்றவு மடுக்கும்
வண்ண மேகலை நிலமகண் மற்றுனைப் பிரிந்து
கண்ணி மூந்தில ளெனச்செயும் நீதந்த கழலோன்.

37 புறத்து நாமொரு பொருளினிப் புகல்கின்ற தெவனோ
அறத்தின் மூர்த்திவந் தவதரித் தானென்ப தல்லால்
பிறத்த லியாவையுங் காத்தவை பின்னின்று துடைக்கு
திறத்து மூவருந் திருத்திய திருத்துமத் திறலோன்.

38 பொன்னு யிர்த்தபூ மடந்தையும் புவியெனுந் திருவும்
இன்னு யிர்த்துணை யிவனென நினைக்கின்ற விராமன்
தன்னு யிர்க்கென்கை புல்லிது தற்பயந் தெடுத்த
மன்னு யிர்க்கென நல்லன்மன் னுயிர்க்கெலா முரவோ

39 வார மென்னினிப் பகர்வது வைகலு மனையான்
பேரி னல்வரு மிடையுறு பெயர்கின்ற பயத்தால்
வீர நின்குல மைந்தனை வேதியர் முதலோ
ரியாரு மியாஞ்செய்த நல்லறப் பயனென விருப்பார்.

40 மண்ணி னுநல்லள் மலர்மகள் கலைமகள் கலையூர்
பெண்ணி னுநல்லள் பெரும்புகழ்ச் சனகியு நல்லள்
கண்ணி னுநல்லன் கற்றவர் கற்றிலா தவரு
முண்ணு நீரினு முயிரினு மவனையே யுவப்பார்.

41 மனிதர் வானவர் மற்றுளா ரறங்கள்காத் தளிப்போர்
இனியிம் மன்னுயிர்க் கிராமனிற் சிறந்தவ ரில்லை
அனைய தாதலி னரசறிற் குறுபொரு ளறியிற்
புனித மாதவ மல்லதொன் றில்லெனப் புகன்றான்.

42 மற்ற வன்சொன்ன வாசகங் கேட்டலு மகனைப்
பெற்ற வன்றினும் பிஞ்ஞகன் பிடித்தவப் பெருவில்
இற்ற வன்றினு மறியெழு வாளவ னிழுக்கம்
உற்ற வன்றினும் பெரியதோ ருவகைய னானான்.

43 அனைய தாகிய வுவகையன் கண்கணீ ரரும்ப
முனிவன் மாமலர்ப் பாதங்கண் முறைமையி னிறைஞ்சி
இனிய சொல்லினை யெம்பெரு மானருள் விழியின்
தனிய னானிலந் தாங்கிய தவற்கிது தகாதோ.

44 எந்தை நீயுவந் திதஞ்சொல வெங்குலத் தரசர்
அந்த மில்லரும் பெரும்புக ழுவனியி னிறுவி
முந்து வேள்வியு முடித்துத்த மிருவினை முடித்தார்
வந்த தவ்வரு ளெனக்குமென் றுரைசெய்து மகிழ்ந்தான்.

45 பழுதின் மாதவன் பின்னொன்றும் பணித்தில னிருந்தான்
முழுது மெண்ணுறு மந்திரக் கிழவர்தம் முகத்தால்
எழுதி நீட்டிய விங்கித மிறைமகற் கேட்கத்
தொழுத கையினன் சுமந்திரன் முன்னின்று சொல்லும்.

46 உறத்த கும்மா சிராமற்கென் றுவக்கின்ற மனத்தைத்
துறத்தி நீயெனுஞ் சொற்சுடும் நின்குலத் தொல்லோர்
மறத்தல் செய்கிலாத் தருமத்தை மறப்பது வழக்கன்
றறத்தி னூங்கினிக் கொடிதென லாவதொன் றியாதே.

47 புடைசை மாக்கரி நிருபர்க்கும் புறத்துறை யோர்க்கும்
உரைசெய் மந்திரக் கிழவர்க்கு முனிவர்க்கு மகிழ்வாய்
முரச மார்ப்பநின் முதன்மணிப் புதல்வனை முறையால்
அரச ராக்கிப்பின் னப்புறத் தடுத்தது புரியாய்.

48 என்ற வாசகஞ் சுமந்திர னியம்பலு மிறைவன்
நன்று சொல்லினை நம்பியை நளிர்முடி சூட்டி
நின்று நின்றது செய்வது விரைவினி னீயே
சென்று கொண்டணை திருமகள் கொழுநனை யென்றான்.

49 அலங்கன் மன்னனை யடிதொழு தவன்மன மனையான்
விலங்கன் மாளிகை வீதியின் விரைவொடு சென்றான்
தலங்க ளியாவையும் பெற்றன னாமெனத் தளிர்ப்பான்
பொலன்கொ டேரொடு மிராகவன் றிருமனை புக்கான்.

50 பெண்ணி னின்னுயிர் தன்னவ டன்னொடும் பிரியா
வண்ண வெஞ்சிலைக் குரிசிலு மருங்கினி திருப்ப
அண்ண லாண்டிருந் தானழ கருநற வெனத்தன்
கண்ணு முள்ளமும் வண்டெனக் களிப்புறக் கண்டான்.

51 கண்டு கைதொழு தையவிக் கடலுடைக் கிழவன்
உண்டொர் காரியம் வருகென வுரைத்தன னெனலும்
புண்ட ரீகக்கட் புரவலன் பொருக்கென வெழுந்தான் [ன்.
கொண்டல் போல்பவன் கொடிநெடுந் தேர்மிசைக் கொண்டா

52 முறையின் மொய்ம்முகி லெனமுர சார்த்திட மடவார்
இறைக மூன்றசங் கார்த்திட விமையவ ரெங்கள்
குறைமு டிந்ததென் றார்த்திடக் குஞ்சியைச் சூழ்ந்த
நறைய லங்கல்வண் டார்த்திடத் தேர்மிசை நடந்தான்

53 நீளை முத்தொடர் வாயிலிற் குழையொடு நெகிழ்ந்த
வாள கத்தினோ டாமியத் தலத்தினு மலர்ந்த
வாள ரத்தவேல் வண்டொடு கெண்டைகண் மறுகச்
சாள ரத்தினும் பூத்தன தாமரை மலர்கள்.

54 மண்ட லந்தரு மதிகெழு மழைமுகி லனைய
அண்டர் நாயகன் மலைபுரை யகலத்து ளலங்கற்
றெண்டை வாய்ச்சியர் நிறையொடு நாணொடுந் தொடர்ந்த
கெண்டை யும்முள கிளைபயில் வண்டொடுங் கிடந்த!

* * *

55 ஆய தவ்வழி நிகழ்தர வாடவ ரெல்லாம்
தாயை முன்னிய கன்றென நின்றுயிர் தளிர்ப்பத்
தூய தம்பியுந் தானுமச் சுமந்திரன் றேர்மேற்
போய கங்குளிர் புரவல னிருந்துழிப் புக்கான்.

56 மாத வன்றனை வரன்முறை வணங்கிவா ளுழவன்
பாத பங்கயம் பணிந்தனன் பணிதலு மனையான்
காதல் பொங்கிடக் கண்பனி யுகுத்திடக் கனிவாய்ச்
சீதை கொண்கனைத் திருவுறை மார்பகஞ் சேர்த்தான்.

57 நலங்கொண் மைந்தனைத் தழுவின னென்பதென் னளிநீர்
நிலங்க டாங்குறு நிலையினை நிலையிட நினைந்தான்
விலங்க லன்னதிண் டோளையு மெய்த்திரு விருக்கு
மலங்கன் மார்பையுந் தனதுதோண் மார்புகொண் டளந்தான்.

58 ஆண்டு தன்மருங் கிருத்தியங் கன்புற நோக்கிப்
பூண்ட போர்மழு வுடையவன் பெரும்புகழ் குறுக
நீண்ட தோளைய நிற்பயந் தெடுத்தநா னின்னை
வேண்டி யெய்திட விழைவதொன் றுண்டென விளம்பும்.

59 அய்ய சாலவு மலசின னரும்பெரு மூப்பும்
வெய்ய தாயது வியனிடம் பெரும்பரம் விசித்துத்
தொய்யன் மாநிலஞ் சுமையுறு சிறைதுறந் தினியா
னுய்ய லாவதோர் நெறிபுக வுதவிட வேண்டும்.

60 உரிமை மைந்தரைப் பெறுகின்ற துறுதுயர் நீங்கி
யிருமையும் பெறற் கென்பது முன்பினோ ரியற்கை
தருமமன்னநிற் றந்தயான் றளர்வது தகவோ
கருமமென்வயிற் செய்பிலென் கட்டுரை கோடி.

61 மைந்த நங்குல மரபினின் மணிமுடி வேந்தர்
தந்த மக்களே கடைமுறை நெடுநிலந் தாங்க
ஐந்தொ டாறு முப்பகை மருங்கற வகற்றி
உய்ந்து போயின ரூழிநின் றெண்ணினு முலவார்.

62 முன்னை யூழ்வினைப் பயத்தினு முற்றிய வேள்விப்
பின்னை யெய்திய நலத்தினு மரிதினிற் பெற்றேன்
இன்னும் யானிந்த வரசிய லிடும்பையே னென்றால்
நின்னை யீன்றுள பயத்தினி னிரம்புவ தியாதோ.

63 ஒருத்த லைப்பாரத் தொருத்தலைப் பங்குவி னூர்தி
எருத்தி னீங்குநின் றியல்வரக் குழைந்திட ருழக்கும்
வருத்த நீங்கியவ் வரம்பறு திருவினை மருவும்
அருத்தி யுண்டெனக் கையவீ தருளிட வேண்டும்.

64 ஆளு நன்னெறிக் கமைவரு மமைவின னாகி
நாளு நங்குல நாயக னறைவிரி கமலத்
தாளி னல்கிய கங்கையைத் தந்து தந்தையரை
மீள்வி லாவுல கேற்றின னொருமகன் மேனாள்.

65 மன்னர் வானவ ரல்லர்மேல் வானவர்க் கரசாம்
பொன்னின் வார்கழற் புரந்தரன் போலிய ரல்லாற்
பின்னு மாதவந் தொடங்கினோர் பிழைத்தவர் பிறரார்
சொன்ம ருமகற் பெற்றவ ரருந்துயர் துறந்தார்.

66 அனைய தாதவி னருந்துயர்ப் பெரும்பர மரசன்
வினையி னென்வயின் வைத்தன னெனக்கொளல் வேண்டா
புனையு மாமுடி புனைந்திந்த நல்லறம் புரக்க
நினைய வேண்டுரா னின்வயிற் பெறுவதீ தென்றான்.

67 தாதை யப்பரி சுரைசெயத் தாமரைக் கண்ணன்
காத லித்தில னிகழ்ந்திலன் கடனிதென் றுணர்ந்து
யாது கொற்றவ னேவின னதுசெய லன்றோ
நீதி யெற்கென நினைந்துதன் பணிதலை நின்றான்.

68 குரிசில் சிந்தையை மனக்கொண்ட கொற்றவெண் குடையான்
தருதி யிவ்வர மெனச்சொல்லி யுயிருறத் தழுவிச்
சுருதி யன்னதன் மந்திரச் சுற்றமுஞ் சுற்றப்
பொருவின் மேருவும் பொருவருங் கோயில்போய்ப் புக்கான்.

69 நிவந்த வந்தணர் நெடுந்தகை மன்னவர் நகரத்
துவந்த மைந்தர்கண் மடந்தைய ருழையர்பின் றொடரச்
சுமந்தி ரன்றடந் தேர்மிசைச் சுந்தரத் தடந்தோ
ளமைந்த மைந்தனுந் தன்பெருங் கோயில்சென் றடைந்தான்.

70 வென்றி வேந்தனை வருகவென் றுவணம்வீற் றிருந்து
பொன்றி ணிந்ததோட் டரும்பெற லிலச்சினை போக்கி
நன்று சித்திர நளிர்முடி கவித்தற்கு நல்லோய்
சென்று வேண்டுவ விதிமுறை யமைக்கெனச் செப்ப.

71 உரிய மாதவ னுள்ளிதென் றியம்பினன் வியந்தான்
பொருவில் தேர்மிசை யந்தணர் குழாத்தொடும் போக
நிருபர் கேண்மின்க ளிராமற்கு நெறிமுறை மையினால்
திருவும் பூமியுஞ் சிந்தையிற் சிறந்தன வென்றான்.

72 இறைவன் சொல்லெனு மின்னற வருந்தினர் யாரு
முறையி னின்றிலர் முகந்துறு களிப்பிடை மூழ்கி
நிறையு நெஞ்சிடை யுவகைபோய் மயிர்வழி நிமிர
உறையும் விண்ணக முடலொடு மெய்தின ரொத்தார்.

73 ஒத்த சிந்தையி னுவகையி னொருவரி னொருவர்
தத்தமக் குற்ற வரசெனத் தழைக்கின்ற மனத்தோர்
முத்த வெண்குடை மன்னனை முறைமுறை தொழுதார்,
அத்த நன்றென வன்பினோ டுறிவிப்ப தானார்.

வேறு.

74 மூவெழு முறைமையெங் குலங்கண் முற்றுறப்
பூவெழு மழுவினாற் பொருது போக்கிய
சேவகன் சேவகஞ் செகுத்த சேவகற்
காவலின் வுலகமீ தறனென் றாரரோ.

75 வேறெலா மன்னரும் விரும்பி யின்னது
கூறினா ரதுமனங் கொண்ட கொற்றவன்
ஊறிய வுவகையை யொளிக்குஞ் சிந்தையான்
மாறுமோ ரளவைசால் வாய்மை கூறினான்.

76 மகன்வயி னன்பினான் மயங்கி யானிது
புகலநீர் புகன்றவிப் பொம்மல் வாசகம்
முகனமைவின் மொழிந்ததோ வுள்ள நோக்கியோ
தகவென நினைந்ததைத் தன்மை யாலென்றான்.

77 இவ்வகை யுரைசெய விருந்த வேந்தர்கள்
செவ்வியோய் நின்றிரு மகற்குத் தேயத்துள்
அவ்வவர்க் கவ்வவ ராற்ற வாற்றறும்
எவ்வமில் லன்பினை யினிது கேளென்னா.

78 தானமுந் தருமமுந் தகவுந் தன்மைசேர்
ஞானமும் நல்லவர்ப் பேணு நன்மையும்
மானவ வையநின் மகற்கு வைகலும்
ஈனமில் செல்வம்வந் தியைக வென்னவே.

79 ஊருணி நிறையவு முதவு மாடியர்
பார்கெழு பழுமரம் பழுத்த தாகவும்
கார்மழை பொழியவுங் கழனி பாய்நதி
வார்புனல் பெருகவு மறுக்கின் றார்களியார்.

80 பனையவா நெடுங்கரப் பருமயானையாய்
நினையவாந் தன்மையை நினைந்த மன்னுயிர்க்
கினையவா றன்பின னிராம னீண்டவற்
கனையவா றன்பின வவையு மென்றனார்.

81 மொழிந்தது கேட்டலு மொய்த்து நெஞ்சினிற்
பொழிந்தபே ருவகையான் பொங்கு காதலான்
கழிந்தபே ரிடரினன் களிக்குஞ் சிந்தையான்
வழிந்தகண் ணீரினன் மன்னனன் கூறுவான்.

82 செம்மையிற் றருமத்திற் செயலிற் றீங்கின்பால்
வெம்மையி னொழுக்கத்தின் மெய்ம்மை மேயநீர்
என்மக னென்பதென் னெறியி னீங்கிவன்
நும்மகன் கையடை நோக்கு மூங்கென்றான்.

83 அரசனை விடுத்தபி னாணை மன்னவன்
புரைதபு நாளொடு பொழுது போக்குவான்
உரைதெரி கணிதரை யொருங்கு கொண்டொரு
வரைபொரு மண்டப மருங்கு மேயினான்.

வேறு.

*  *  *

84 ஆடு கின்றனர் பண்ணடை யின்றியே
பாடு கின்றனர் பார்த்தவர்க் கேகாஞ்
சூடு கின்றனர் சொல்லுவ தோர்கிலர்
மாடு சென்றனர் மங்கையர் நால்வரே.

85 கண்ட மாதரைக் காதலி னோக்கினள்
கொண்டல் வண்ணனை நல்கிய கோசலை
உண்டுபே ருவகைப் பொருள ன்னது
தொண்டை வாயினிர் சொல்லுமி னீண்டென்றாள்.

86 மன்னனெ டுங்கழல் வந்து வணங்கிடப்
பன்னெ டும்பகற் பாரளிப் பாயென
நின்னெ டும்புதல் வன்றனை நேமியான்
றொன்னெ டும்முடி சூட்டுகின் றானென்றார்.

87 சிறக்குஞ் செல்வ மகற்கெனச் சிந்தையிற்
பிறக்கும் பேருவ கைக்கடல் பெட்பற
வறக்கு மாவட வைக்கன லானதால்
துறக்கு மன்னவ னென்னுந் துணுக்கமே.

88 அன்ன ளாயு மரும்பெற லாரமும்
நன்னி திக்குவை யும்பல நல்கித்தன்
துன்னு காதற் சுமித்திரை யோடும்போய்
மின்னு நேமியன் மேவிட மேயினாள்.

89 மேவி மென்மல ராணில மாதெனுந்
தேவி மாரொடுந் தேவர்கள் யாவர்க்கும்
ஆவி யும்மறி வும்முத லாயவன்
வாவி மாமலர்ப் பாதம் வணங்கினாள்.

90 என்வ யிற்றரு மைந்தற் கினியருள்
உன்வ யத்ததென் றுரைநல கியாவையும்
மன்வ யிற்றின டக்கிய மாயனைத்
தன்வ யிற்றி னடக்குந் தவத்தினாள்.

91, என்றி றைஞ்சியவ் விந்திரை கேள்வனுக்
கொன்று நான்மறை யோதிய பூசனை
நன்றி ழைத்தவ னல்ல தவர்க்கெலாம்
கன்று டைப்பசு வின்கட னல்கினாள்.

92 பொன்னு மாமணி யும்புனை சாந்தமும்
கன்னி மாரொடு காசினி யீட்டமும்
இன்ன யாவையு மீந்தன ளந்தணர்க்
கன்ன தானமு மாடையு நல்கினாள்.

93 நல்கி நாயக னுண்மலர்ப் பாதங்கள்
புல்லிப் போற்றி வணங்கிப் புனையிலா
மல்லன் மாளிகைக் கோயில் வலங்கொளாத்
தொல்லை நோன்புகள் யாவுந் தொடங்கினாள்.

1-வது. மந்திரப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 97ல்-93.



## 2-வது. மந்தரை சூழ்ச்சிப்படலம்.



தசரதமகாராஜன், நாளைப் பட்டாபிஷேகத்துக்கு நல்லநாளென்று சோதிடர் சொன்னதனால், இராமற்குச் செய்யவேண்டுவனவற்றைச் செய்யும்படி வசிட்டரோடு சொல்ல, அப்படியே அவர் இராமனிடஞ்சென்று நாளைப் பட்டாபிஷேகமென்பதை அறிவித்து, அந்தணர்மாட்டு அடங்கி நிற்கவும், சூதாடன்முதலியன செய்யாதிருக்கவும், எல்லா ஆத்துமாக்களுக்கும் ஓர் உயிர்போனின்று தீதகற்றி நன்மைபயக்கவும் வேண்டும் எனப் பல நீதிகள்போதித்து ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் கோயிலிற்சென்று அவர்க்குத் திருமஞ்சனமுதலிய செய்வித்து இராமற்குக் காப்புகட்டிச் சடங்கைநிறைவேற்றித் தசரதருக்கு அறிவிக்க, அவர், ஜனங்களுக்குத் தெரிவித்து நகரத்தை அலங்கரிப்பித்தார். இப்படியிருக்கக் கூனியொருத்தி, இராமன் பாலியத்திலே தன் கூனின்மீது வில்லாலுண்டை எய்ததை நினைத்துக் கோவம்பொங்கக் கைகேயியினிடஞ்சென்று துயின்றுகொண்டிருந்த அவளை எழுப்பி, உனக்குப் பெருங்குறைநேர்ந்திருக்க நீ துயின்றுகொண்டிருப்பது தகுமோஎன, அவளும் இராமனை மகனாகப்பெற்ற எனக்கும் குறையுண்டாமோ என்று உரைக்கக்கேட்டு, கூனியானவள்: அடியே தாய்! நாளை இராமற்கு முடிசூட்ட நின்கணவன் நிச்சயித்திருக்கின்றான் எனக்கேட்டு, நல்லதோராபரணத்தைக் கைகேயி கூனிக்கு வெகுமதிகொடுக்க அதை அவள் பெருமற்கழற்றிப்போட்டுக் கைகேயியைநோக்கி: அடிமுழுப்பேதாய்! அங்ஙனமமையின் நின்மகனாகிய பரதன் இராமற்கு ஆட்செய்யவும், நீ கோசலைக்கு ஆட்செய்யவுமமையுமே. அப்போது கோசலையின் தாதிமார்க்கல்லவோ நானாட்செய்யவேண்டும். இதனை எப்படிபொறுப்பேனென்று அழுதுகொண்டு பலவுஞ்சொல்லி அவள் புத்தியைக் கலக்கவும் அவள் கலங்காமல், மநுகாலமுதல் நடந்துவருமுறையை அழிக்கப்பார்க்கிறையோ புத்திகெட்டவளே! என்முன்நிற்காமல் எழுந்துபோவென்று அவளை இகழ்ந்துரைத்தாள். அதற்கு அவள் பின்னிடாமல் கைகேயி பாதங்களைப் பிடித்துக்கொண்டு, நீ விடமுண்ண எத்தனஞ்செய்தால் அதைத் தவிர்க்காமல் நான் புறத்துப்போகேனென்று அவள்மனம் மாறும்படி பலபல பேச்சுகளைப்பேச, அவளும் முன்னிருந்த மனநிலைகெட்டுக் கூனியைநோக்கி: நீ சொல்வதே தக்கது, அதற்கு உபாயம் என்னென்றுவினவ, முன்னே சம்பராசுரனை உன் கணவன் வெல்லச்சென்றபோது நீ தேர்கடத்தினதற்கு உவந்து இரண்டு வரமளித்திருக்கின்றனே, அவற்றுள் ஒன்றினால் உன் மகன் அரசுபெறவும் மற்றொன்றினால் பதினான்குவருடம் இராமன் காட்டுக்குச்செல்லவும் பணிக்கக்கடவை எனக்கேட்டு மிகமகிழ்ந்து கேகயன்மகள் அவளுக்குப் பல வெகுமதியளித்துத் தன் பணிகளைக் களைந்தெறிந்து தரையிற் கூந்தல்புரள அலங்கோலமாய் அழுதுகொண்டுகிடந்தனள் என்பது இப்படலத்தின் கதை.

1 கடிகமழ் தாரினான் கணித மாக்களை
முடிவுற நோக்கியோர் முதன்மை கூறிப்பின்
வடிமழு வாளவற் கடந்த மைந்தற்கு
முடிபுனை கடிகைநாண் மொழிமி னென்றனன்.

2 பொருந்துநா ணுணைநின் புதல்வற் கென்றனர்
திருந்தினு ரன்னசொற் கேட்ட செய்கழற்
பெருந்திண்மா லியானையான் பிழைப்பில் செய்தவம்
வருந்தினுன் வருகென வசிட்ட னெய்தினுன்.

3 நல்லியன் மங்கல நாளு நாளையவ்
வில்லிய ரூளவற் கீண்டு வேண்டுவ
வொல்லையி னியற்றிநல் லுறுதி *வாய்மையுஞ்
சொல்லுதி பெரிதெனத் தொழுது சொல்லினுன்.

4 முனிவனு முவகையுந் தானு முந்துவான்
மனுகுல நாயகன் வாயின் முன்னினுன்
அனையவன் வரவுகேட் †டலங்கன் மார்பனும்
இனிதெதிர் கொண்டுதன் னிருக்கை யெய்தினுன்.

வேறு.

5 ஒல்க லில்தவத் துத்தம ஞேதுநூல்
மல்கு கேள்வியவ் வள்ளலை நோக்கினுன்
புல்கு காதற் புரவலன் போர்வலாய்
நல்கு நானில நாளை நினக்கென்றான்.

6 என்று பின்னுமி ராமனை நோக்கினுன்
ஒன்று கூறுவ துண்டு றுதிப்பொருள்
நன்று கேட்டுக் கடைப்பிடி நன்றெனத்
துன்று தாரவற் சொல்லுதன் மேயினுன்.

* வார்த்தை என்வும் பாடம்.
† அலங்கல் வீரனும் எனவும் பாடம்.

7 கரிய மாலினுங் கண்ணுத லானினு
முரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமொ ரைந்தினு மெய்யினும்
பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால்.

8 அந்த ணாளர் முனியவு மாங்கவர்
சிந்தை யாலருள் செய்யவுந் தேவரில்
நொந்து ளாரையு நொய்துயர்ந் தாரையும்
மைந்த வெண்ண வரம்புமுண் டாங்கொலோ.

9 அனைய ராதலி னையவிவ் வெய்யதீ
வினையி னீங்கிய மேலவர் தாளினைப்
புனையுஞ் சென்னியை யாய்ப்புகழ்ந் தேத்துதி
இனிய கூறிநின் றேயின செய்தியால்.

10 ஆவ தற்கு மழிவதற் கும்மவர்
மேவ நிற்கும் விதியுமென் றுன்னினி
யாவ தெப்பொரு ளிம்மையு மம்மையுந்
தேவ ரைப்பா வுந்துணை சீர்த்ததே.

11 உருளு நேமியு மொண்கவ ரெஃகமும்
மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்குந்
தெருளு நல்லற மும்மனச் செம்மையும்
அருளு நீத்தபின் னாவதுண் டாகுமோ.

12 சூது முந்துறச் சொல்லிய மாத்துயர்
நீதி மைந்த நினக்கிலை யாயினும்
ஓத மென்பன யாவையு மெய்துதற்
கோது மூல மவையென வோர்தியே.

13 யாரொ டும்பகை கொள்ளில னென்றபின்
போரொ டுங்கும் புகழொடுங் காதுதன்
தாரொ டுங்கல் செல்லாதது தந்தபின்
வேரொ டுங்கெடல் வேண்டலுண் டாகுமோ.

14 கோளு மைம்பொறி யுங்குறை யப்பொருள்
நாளுங் கண்டு நடுவுறு நோன்மையின்
ஆளு மவ்வர சேயர சன்னது
வாளின் மேல்வரு மாதவ மைந்தனே.

15 உமைக்கு நாதற்கு மோங்குபுள் ளூர்திக்கும்
இமைப்பில் நாட்டமோ ரெட்டுடை யானுக்கும்
சமைத்த தோள்வலி தாங்கின ராயினும்
அமைச்சர் சொல்வழி யாற்றுத லாற்றலே.

16 என்பு தோலுடை யார்க்குமி லார்க்குந்தம்
வன்ப கைப்புலன் மாசற மாய்ப்பதென்
முன்பு பின்பின்றி மூவுல கத்தினும்
அன்பி னல்லதோ ராக்கமுண் டாகுமோ.

17 வைய மன்னுயி ராகவம் மன்னுயிர்
உய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்
கைய மின்றி யறங்கட வாதருள்
மெய்யி னின்றபின் வேள்வியும் வேண்டுமோ.

18 இனிய சொல்லின னீகைய னெண்ணினன்
வினையன் றூயன் விழுமியன் வென்றியன்
நினையு நீதி நெறிகட வானெனின்
அனைய மன்னற் கழிவுமுண் டாங்கொலோ.

19 சீல மல்லன நீக்கிச்செம் பொற்றுலைத்
தால மன்ன தனிநிலை தாங்கிய
ஞால மன்னற்கு நல்லவர் நோக்கிய
கால மல்லது கண்ணுமுண் டாகுமோ.

20 ஓர்வி னல்வினை யூற்றத்தி னுருளை
பேர்வில் தொல்விதி பெற்றுள தென்பரோ
தீர்வி லன்பு செலுத்தலிற் செவ்வியோர்
ஆர்வ மன்னவற் காயுத மாவதே.

21 ஏனை நீதி யினியன வையகப்
போன கற்கு விளம்பிப் புலன்கொளீஇ
ஆன வன்றொடு மாயிர மௌலியான்
தான நண்ணினன் றத்துய நண்ணினான்.

22 நண்ணி நாகணை வள்ளலை நான்மறைப்
புண்ணி யப்புன லாட்டிப் புலமையோர்
எண்ணு நல்வினை முற்றுவித் தேற்றினான்
வெண்ணி றத்த தருப்பை விரித்தரோ.

வேறு.

23 ஏற்றிட வாண்டகை யினிதி ருந்துழி
நூற்றட மார்பனு நொய்தி னெய்தப்போய்
ஆற்றல்சா லரசனுக் கறிவித் தானவன்
சாற்றுக நகரணி சமைக்க வென்றனன்.

24 ஏவின வள்ளுவ ரிராம னாளையே
பூமகள் கொழுனனாய்ப் புனையு மௌலியிக்
கோனக ரணிகெனக் கொட்டும் பேரியத்
தேவரும் களிகொளத் திரிந்து சாற்றினார்.

25 கவியமை கீர்த்தியக் காளை நாளையே
புவியமை மணிமுடி புனையு மென்றசொல்
செவியமை நுகர்ச்சிய வெனினுந் தேவர்தம்
அவியமு தன்னவந் நகரு ளார்க்கெலாம்.

26 ஆர்த்தனர் களித்தன ராடிப் பாடினர்
வேர்த்தனர் தடித்தனர் சிலிர்த்து மெய்ம்மயிர்
போர்த்தனர் மன்னனைப் புகழ்ந்து வாழ்த்தினார்
தூர்த்தனர் நீணிதி சொல்லி னார்க்கெலாம்.

27 திணிசுட ரிரவியைத் திருத்து மாறுமப்
பணியிடைப் பள்ளியான் பார்த்த மார்பிடை
மணியினை வேகடம் வகுக்கு மாறும்போல்
அணிநக ரணிந்தன ரருத்தி மாக்களே.

28 வெள்ளிய கரியன செய்ய வேறுள
கொள்ளைவான் கொடிநிரைக் குழாங்கள் தோன்றுவ
கள்ளவிழ் கோதையாள் செல்வங் காணிய
புள்ளெலாந் திருநகர் புகுந்த போன்றவே.

* * *

29 முதிரொளி யுயிர்த்தன முடுகிக் காலையிற்
கதிரவன் வேறொரு கவின்கொண் டானென
மதிதொட நிவந்தன மகர தோரணம்
புதியன வலர்ந்தன புதவ ராசியே.

30 துனியறு செம்மணித் தூண நீறுதோய்
வனிதையோர் கூற்றினன் வடிவு காட்டின
புனைதுகி லுறைதொறும் பொதிந்து தோன்றின
பனிபொதி கதிரெனப் பவளத் தூண்களே.

31 முத்தினின் முழுநில வெறிப்ப மொய்ம்மணிப்
பத்தியி னிளவெயில் பரப்ப நீலத்தின்
தொத்தின மிருள்வரத் தூண்டச் சோதிட
வித்தகர் விரித்தநா ளொத்த வீதியே.

32 ஆடன்மான் றேர்க்குழா மவனி காணிய
வீடெனு முலகின்வீழ் விமானம் போன்றன
ஓடமாக் கடகளி றுதய மால்வரை
தேடருங் கதிரொடேர் திரிவ போன்றவே.

33 வளங்கெழு திருநகர் வைகும் வைகலும்
பளிங்குடை நெடுஞ்சுவ ரடுத்த பத்தியிற்
கிளர்ந்தெரி சுடர்மணி யிருளைக் கீறலால்
வளர்ந்தில பிரிந்தில செக்கர் வானமே.

34 பூமழை புனன்மழை புதுமென் சுண்ணத்தின்
தூமழை தானத்தின் றொழில் வெண்மழை
தாமழை சொரிதலிற் றகர்ந்த பொன்மழை
மாமழை நிகர்த்தன மாட வீதியே.

35 காரொடு தொடர்மதக் களிறு சென்றன
வாரொடு தொடர்கழன் மைந்த ராமெனத்
தாரொடு நடந்தன பிடிகள் தாழ்கலைத்
தேரொடு நடக்குமத் தெரிவை மாரினே.

36 ஏய்ந்தெழு செல்வமு மழகு மின்பமும்
தேய்ந்தில வணியது தெரிகி லாமையால்
ஆய்ந்தனர் பெருகவு மமர ரிம்பரிற்
போந்தவர் போந்தில மென்னும் புந்தியால்.

37 அந்நக ரணிவுறு மமலை வானவர்
பொன்னக ரியல்பெனப் பொலியு மெல்லையில்
இன்னல்செ யிராவண னிழைத்த தீமைபோல்
துன்னருங் கொடுமனக் கூனி தோன்றினாள்.

38 தோன்றிய கூனியுந் துடிக்கு நெஞ்சினாள்
ஊன்றிய வெகுளியா னுலைக்கு முள்ளத்தாள்
கான்றெரி நயனத்தாள் கதிக்குஞ் சொல்லினாள்
மூன்றுல கினுக்குமோ ரிடுக்கண் மூட்டுவாள்.

39 தொண்டைவாய்க் கேகயன் தோகை கோயின்மேன்
மண்டினாள் வெகுளியின் மடித்த வாயினாள்
பண்டைநா ளிராகவன் பாணி வில்லுமிழ்
உண்டையுண் டதனைத்தன் னுள்ளத் துள்ளுவாள்.

40 நாற்கடற் படுமணி நளினம் பூத்ததோர்
பாற்கடற் படுதிரைப் பவள வல்லியே
போற்கடைக் கண்ணளி பொழியப் பொங்கணை
மேற்கிடந் தாளை விரைவி னெய்தினாள்.

41 எய்தியக் கேகயன் மடந்தை யேடவிழ்
நொய்தலர் தாமரை நோற்ற நோன்பினால்
செய்தபே றுவமைசால் செம்பொற் சீறடி
கைகளிற் றீண்டினாள் காலக் கோளனாள்.

42 தீண்டலு முணர்ந்தவத் தெய்வக் கற்பினுள்
நீண்டகண் ணனந்தரு நீங்கு கிற்றிலள்
மூண்டெழு பெரும்பழி முடிக்கும் வெவ்வினை
தூண்டிடக் கட்டுரை சொல்லன் மேயினுள்.

43 அணங்குவாள் விடவரா வணுகு மெல்லையுங்
குணங்கெடா தொளிவிரி குளிர்வெண் டிங்கள்போல்
பிணங்குவான் பேரிடர் பிணிக்க நண்ணவும்
உணங்குவா யல்லைநீ யுறங்கு வாயென்றாள்.

44 வெவ்விட மனையவள் விளம்ப வேற்கணாள்
தெவ்வடு சிலைக்கையென் சிறுவர் செவ்வியர்
அவ்வவர் துறைதொறு மறந்தி றம்பலர்
எவ்விட ரெனக்குவந் தடுப்ப தீண்டென்றாள்.

45 பாராவரும் புதல்வனைப் பயக்க யாவரும்
ஊராவருந் துயரைவிட் டுறுதி சான்பரால்
விராவரும் புவிக்கெலாம் வேத மேயன
இராமனைப் பயந்தவெற் கிடருண் டோவென்றாள்.

46 ஆழ்ந்தபே ரன்பினு ளனைய கூறலும்
சூழ்ந்ததீ வினைநிகர் கூனி சொல்லுவாள்
வீழ்ந்தது நின்னலந் திருவும் வீந்தது
வாழ்ந்தனள் கோசலை மதியி னுலென்றாள்.

47 அன்னவ ளவ்வுரை யுரைப்ப வாயிழை
மன்னவர் மன்னனேற் கணவன் மைந்தனேற்
பன்னரும் பெரும்புகழ்ப் பரதன் பார்தனில்
என்னிதன் மேலவட் கெய்தும் வாழ்வென்றாள்

48 ஆடவர் நகையுற வாண்மை மாசுறத்
தாடகை யெனும்பெயர்த் தைய லாள்படக்
கோடிய வரிசிலை ராமன் கோமுடி
சூடுவ னாளைவாழ் விதெனச் சொல்லினாள்.

49 மாற்றமஃ துரைசெய மங்கை யுள்ளமும்
ஆற்றல்சால் கோசலை யறிவு மொத்ததால்
வேற்றுமை யுற்றிலள் வீரன் றாதைபுக்
கேற்றுவ ளிருதயத் திருக்க வேகொலாம்.

50 ஆயபே ரன்பெனு மளக்க ரார்த்தெழத்
தேய்விலா முகமதி விளங்கித் தேசுறத்
தூயவ ளுவகைபோன் மிகச்சு டர்க்கெலாம்
நாயக மனையதோர் மாலை நல்கினாள்.

51 தெழித்தன ளுரப்பினள் சிறுகண் டீயுக
விழித்தனள் வைதனள் வெய்து யிர்த்தனள்
அழித்தன ளழுதன ளம்பொன் மாலையாற்
குழித்தனள் நிலத்தையக் கொடிய கூனியே.

52 வேதனைக் கூனிபின் வெகுண்டு நோக்கியப்
பேதையைப் பித்திநிற் பிறந்த சேயொடும்
நீதுயர் படுகநா னெடிதுன் மாற்றவள்
தாதியர்க் காட்செயத் தரிக்கி லேனென்றாள்.

53 சிவந்தவாய்ச் சீதையுங் கரிய செம்மலும்
நிவந்தவா சனத்தினி திருப்ப நின்மகன்
அவந்தனாய் வெறுநிலத் திருக்க லானபோ
துவந்தவா றென்னிதற் குறுதி யாதென்றாள்.

54 மறந்திலள் கோசலை யுறுதி மைந்தனும்
சிறந்தனன் *திருவினிற் றிருவி னீங்கினான்
இறந்தில னிருந்தன னென்செய் தாற்றுவான்
பிறந்திலன் பரதனீ பெற்ற தாலென்றாள்.

55 சாதமிப் புவியெலாந் தம்பி யோடுமிவ்
வாதனை காக்குமேல் வரம்பில் காலமும்
பரதனு மிளவலும் பதியி னீங்கிப்போய்
விரதமா தவஞ்செய்து விடுத னன்றென்றாள்.

* திருவெய்தினான் என்பதும் பாடம்.

56 பண்ணுறு கடகரிப் பரதன் பார்மகள்
கண்ணுறு கவினரா யினிது காத்தவம்
மண்ணுறு முரசுடை மன்னர் மாலையில்
எண்ணுறப் பிறந்தில னிறத்த னன்றென்றாள்.

57 பாக்கியம் புரிந்திலாப் பரதன் றன்னைப்பண்
டாக்கிய பொலன்கழ லரச னாணையால்
தேக்குயர் கல்லதர் கடிது சேணிடைப்
போக்கிய பொருளெனக் கின்று போந்ததால்.

58 மந்தரை பின்னரும் வகைந்து கூறுவாள்
அந்தரந் தீர்ந்தில களிக்கு நீரினால்
தந்தையுங் கொடியனற் றாயுந் தீயளால்
எந்தையே பரதனே யென்செய் வாயென்றாள்.

59 அரசரிற் பிறந்துபின் னரச ரில்வளர்ந்
தரசரிற் புகுந்துபே ரரசி யானநீ
கரைசெயற் கருந்துயர்க் கடலில் வீழ்கின்றாய்
உரைசெயக் கேட்கிலை யுணர்தி யோவென்றாள்.

60 கல்வியு மிளமையுங் கணக்கி லாற்றலும்
வில்வினை யுரிமையு மழகும் வீரமும்
எல்லையில் குணங்களும் பரதற் கெய்திய
புல்லிடை யுகுத்தமு தேயும் போலென்றாள்.

வேறு.

வாய்க யப்புற மந்தரை வழங்கிய வெஞ்சொல்
காய்க னற்றலை நெய்சொரிந் தெனக்கதங் கனற்றக்
கேகை யர்க்கிறை திருமகள் கிளரிள வரிகள்
தோய்க யற்கண்கள் சிவப்புற நோக்கினள் சொல்லும்.

வெயின்மு றைக்குலக் கதிரவன் முதலிய மேலோர்
உயிர்மு தற்பொரு டிறம்பினுந் துறைதிறம் பாதோர்
மயின்மு றைக்குலத் துரிமையை மனுமுதல் மரபைச்
செயிரு றப்புலச் சிந்தையா லென்சொனாய் தீயோய்.

63 எனக்கு நல்லையு மல்லைநீ யென்மகன் பரதன்
றனக்கு நல்லையு மல்லையத் தருமமே நோக்கின்
உனக்கு நல்லையு மல்லவந் தூழ்வினை தூண்ட
மனக்கு நல்லன சொல்லினை மதியிலா மனத்தாய்.

64 பிறந்தி றந்துபோய்ப் பெறுவது மிழப்பதும் புகழேன்
நிறந்தி றம்பினு நியாயமே திறம்பினு நெறியின்
திறந்தி றம்பினுஞ் செய்தவந் திறம்பினுஞ் செயிர்தீர்
மறந்தி றம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ.

65 போதி யென்னெதிர் நின்றுநின் புன்பொறி நாவைச்
சேதி யாதிது பொறுத்தனன் புறஞ்சில றறியின்
நீதி யல்லவு நெறிமுறை யல்லவு நினைந்தாய்
ஆதி யாதலி னறிவிலி யடங்குதி யென்றாள்.

66 அஞ்சி மந்தரை யகன்றில ளம்மொழி கேட்டு
நஞ்சு தீர்க்கினுந் தீர்க்கிலா ததுநலிந் தென்னத்
தஞ்ச மேயுனக் குறுபொரு ளுணர்த்துகை தவிரேன்
வஞ்சி போலியென் றடிமிசை வீழ்ந்துரை வழங்கும்.

67 மூத்த வற்குரித் தரசெனு முறைமையி னுலகங்
காத்த மன்னனி வினையனன் றேகடல் வண்ணன்
ஏத்து நீண்முடி புனைவதற் கிசைந்தன னென்றால்
மீத்தருஞ் செல்வம் பரதனை விலக்குமா றெவனோ.

68 அறநி ரம்பிய வருளுடை யருந்தவர்க் கேனும்
பெறல ருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்
மறநி னைந்துமை வலிகில ராயினு மனத்தால்
இறலு றும்படி யியற்றுவ ரிடையறு வின்னல்.

69 புரியுந் தன்மக னரசெனிற் பூதல மெல்லாம்
விரியுஞ் சிந்தனைக் கோசலைக் குடைமையா மென்றால்
பரியு நின்குலப் புதல்வற்கு முனக்குமிப் பார்மேல்
உரிய தென்னவ ருதவிய வொருபொரு ளெல்லாம்.

70 தூண்டு மின்னலும் வறுமையுந் தொடர்தாத் துயரால்
ஈண்டு வந்துனை யிரந்தவர்க் கிருநிதி யவனோ
வேண்டி யீதியோ வெள்குதி யோவிம்ம ஞேயான்
மாண்டு போதியோ மழுத்தியோ வெங்ஙனம் வாழ்தி.

71 சிந்தை செய்கையிற் றிகைத்தனை யினிச்சில நாளில்
தந்த மின்மையு மெளிமையு நிற்கொண்டு தவிர்க்க
உந்தை யுன்னையுன் கிளைஞர்மற் றுன்குலத் துள்ளோர்
வந்து காண்பதுன் மாற்றவள் செல்வமோ மதியாய்.

72 காத லுன்பெருங் கணவனை யஞ்சியக் கனிவாய்ச்
சீதை தந்தையுன் றந்தையைத் தெறுகில னிராமன்
மாது லன்னவ னுந்தைக்கு வாழ்வினி யுண்டோ
பேதை யுன்றனை யாருளர் பழிபடப் பிறந்தார்.

73 மற்று நுந்தைக்கு வான்பகை பெரிதுள மறத்தார்
செற்ற போதிவர் சென்றுத வாரெனிற் செருவில்
கொற்ற மென்பதொன் றெவ்வழி யுண்டது கூறாய்
சுற்றமுங் கெடச் சுடுதுயர்க் கடல்விழத் துணிந்தாய்.

74 கெடுத்தொ ழிந்தனை யுனக்கரும் புதல்வனைக் கிளர்நீர்
உடுத்த பாரக முடையவ னொருமகற் கெனவே
கொடுத்த போர சவன்குலக் கோமைந்தர் தமக்கும்
அடுத்த தம்பிக்கு மாம்பிறர்க் காகுமோ வென்றாள்.

75 தீய மந்தரை யிவ்வுரை செப்பலுந் தேவி
தூய சிந்தையுந் திரிந்தது சூழ்ச்சியி னிமையோர்
மாயை யும்மவர் பெற்றநல் வரவுண்மை யாலும்
ஆய வந்தண ரியற்றிய வருந்தவத் தாலும்.

76 அரக்கர் பாவமு மல்லவரி யற்றிய வறமும்
துரக்க நல்லருள் துறந்தனள் தூய்மொழி மடமான்
இரக்க மின்மையன் றோவின்றிவ் வுலகங்க ளிராமன்
பரக்குந் தொல்புக ழமுதினைப் பருகுகின் றதுவே.

77 அனைய தன்மைய ளாகிய கைகய னன்னம்
வினைநி ரம்பிய கூனியை விரும்பின ணோக்கி
எனையு வந்தனை யினியையென் மகனுக்கு மனையான்
புனையு நீண்முடி பெறும்படி புகலுதி யென்றாள்.

78 மாழை யுண்கணி யுரைசெயக் கேட்டமந் தரையென்
தோழி வல்லளென் றுணைவல்ல ளென்றடி தொழுதாள்
தாழு மன்னிலை யென்னுரை தலைநிற்பி னுலகம்
ஏழு மேழுமுன் னொருமகற் காக்குவே னென்றாள்.

79 நாடி யொன்றுனக் குரைசெய்வெ னளிர்மணி நகையாய்
தோடி வர்ந்ததார்ச் சம்பரன் றொலைவுற்ற வேலை
ஆடல் வென்றியா னருளிய வரமவை யிரண்டும்
கோடி யென்றன ளுள்ளமுங் கோடிய கொடியாள்.

80 இருவ ரத்தினி லொன்றினு லரசுகொண் டிராமன்
பெருவ னத்திடை யேழிரு பருவங்கள் பெயர்ந்து
திரிதரச் செய்தி யொன்றினால் செழுநில மெல்லாம்
ஒருவ ழிப்படு முன்மகற் குபாயமீ தென்றாள்.

81 உரைத்த கூனியை யுவந்தன ளுயிருறத் தழுவி
நிரைத்த மாமணி யாரமு நிதியமு நீட்டி
இரைத்த வேலைசூ ழுலகமென் னொருமகற் கீந்தாய்
தனைக்கு நாயகன் றாயினி நீயெனத் தணியா.

82 நன்று சொல்லினை நம்பியை நளிர்முடி சூட்டல்
துன்று கானத்தி லிராமனைத் துரத்தலிவ் விரண்டும்
அன்ற தாமெனி லரசன்முன் னுருயிர் துறந்து
பொன்றி நீங்குதல் புரிவென்யான் போதிநீ யென்றாள்.

83 கூனி போனபின் குலமலர்க் குப்பைநின் றிழிந்தாள்
சோனை வார்குழற் கற்றையிற் சொருகிய மாலை
வான வார்மழை நுழைதரு மதிபிதிர்ப் பயாள்போல்
தேன வாவுறு வண்டின மலமரச் சிதைத்தாள்.

84 விளையுந் தன்புகழ் வல்லியை வேறுத் தென்னக்
கிளைகொண் மேகலை சிந்தினள் கிண்கிணி யோடும்
வளைது றந்தனள் மதியினின் மறுத்துடைப் பாள்போல்
அளக வாணுத லரும்பெறற் றிலகமு மழித்தாள்.

85 தாவின் மாமணிக் கலன்மற்றுந் தனித்தனிச் சிதறி
நாவி நன்குழ லுனிலந் தைவரப் பரப்பிக்
காவி யுண்கண்க ளஞ்சனங் கான்றிடக் கலுழாப்
பூவு திர்ந்ததோர் கொம்பெனப் புவிமிசைப் புரண்டாள்.

86 நவ்வி வீழ்ந்தென நாடக மயிறுயின் றென்னக்
கவ்வை கூர்தரச் சனகியாங் கடிகமழ் கமலத்
தவ்வை நீங்குமென் றயோத்திவந் தடைந்தவம் மடந்தை
தவ்வை யாமெனக் கிடந்தனள் கைகயன் றனையை.

2-வது. மந்தரை சூழ்ச்சிப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 88ல்-86.

# 3-வது. கைகேசி சூழ்வினைப்படலம்.

அன்றிரவில் தசரதமகாராஜன் கைகேயிமாளிகைக்குச் சென்று அவள் அலங்கோலமாய் வீழ்ந்திருப்பதைக்கண்டு அவளை எடுக்கப்போக, அவள் அந்தக் கைகளை நீக்கிவிட்டுப் பேசாமலிருந்ததனுல், பெண்ணே! யாருனக்குத் தீங்கிழைத்தனர் சொல்லெனா: அக்கைகேசி, மன்னவனே! உமக்கு என்மேல் இவ்வளவு சருணையிருந்தால் முன் எனக்குக் கொடுத்தவரம் இரண்டும் தரவேண்டும் என்றாள். அவளது வஞ்சமறியாத அரசன் சிரித்து, சொல் இப்போதே கொடுக்கிறேன், இராமன்மேலாணை—என்றான். பின்பு அவள் என்மகனுகிய பரதன் அரசாள்வது ஒருவரம்; இராமன் காட்டுக்குப்போவது இரண்டாம்வரம் என்றாள். அதுகேட்டு அரசன் காட்டுத் தீயில் வெதும்பின யானைபோல வேகமடங்கிவீழ்ந்து கொல்லன் உலைத் துருத்திபோல் பெருமூச்செறிந்து நாவறண்டு உதிரவேர்வைவிட்டுச் சொல்லக்கூடாதமிகுந்த துயரத்தை அடைந்து தரையிற்கிடக்கவும் அவள் கிஞ்சித்தும் தளராமையைக்கண்டு, கைகேசி: "இப்போது நீயென்ன நினைத்துப்பேசுகிறையா உனக்கு யாராயினும் துர்ப்போதனைசெய்தார்களா என்று வினவ, எனக்குத் திகைப்புமில்லை துர்ப்போதனையுமில்லை என்று சொல்லி, கைகேசி ஒரேபிடியாயிருந்தாள். அப்போது அம்மகாராஜன், அவளையும் துத்தியத்தையும் மிகவெறுத்துக்கொண்டே, "என்னசெய்வோம்;

இவளை வேண்டுவதே மேலானதென்று எழுந்து அவளை மிகவணங்கி கேகயன்மானே! இவ்விராஜ்யத்தைப் பரதன் கொள்ளமாட்டான்; கொண்டாலும் உலகத்தார் இஷ்டப்படமாட்டார்கள். யாரும் இஷ்டப்படாமல் இராமனோடு செல்ல நீ யாரை வைத்துக்கொண்டு உலகம் ஆள்வாய். ஆதலால் நீயே இசைந்தால் உனக்கு நல்ல புகழுண்டு; வீண்பழி ஏன் படைக்கிறாய். இராமனே உன் மகனுக்கு ராஜ்யம்கொடுப்பான். நீ விரோதமான பேச்சுப் பேசாதே. அல்லவென்றால் உன் மகன் அரசாளட்டும். இராமன் காட்டுக்குப்போகாதிருக்கும்படியாகிலும் கிருபைபண்ணு. பேயும் வணங்கி ஒன்று இரந்தால் கொடாதிராதே. என் உயிர்போன்ற இராமன் என் கண்ணுக்கு எதிரிலிராமற்போனால் என் உயிர் நில்லாது. ஆதலால் நீ அபயந்தந்து என்னை ரக்ஷிக்கவேண்டும் என்று இப்படிப் பலவகை சொல்லி வேண்டவும் அவள் மனமிரங்காமல், மகாராஜாவே! நீர் முந்தி வரம்கொடுத்து மறுபடி மறுத்தால் உம்மைப்போல் சத்தியவான் யாரிருக்கிறார் என்றுகூற, மறுபடி அரசன்: அடிபாவி! உனக்குத் தயையும் தாக்ஷிண்யமுமில்லையே, நீ பழிபாவங்களையும் எண்ணுவதில்லையே. என் உயிர் துடிக்கின்றதே, கடைசியில் நான் ஒரு பெண்ணாலே உயிர்விடும்படியாயிற்றே, இந்த அவமானத்துக்கு என்னசெய்வேன் என்று அவளைப் பலவகை தூஷித்து மகா வேதனையோடு தரையிற் புரண்டுகொண்டிருந்தான். அக்கைகேசி கொஞ்சமும் இளகாமல் அரசனே! நீ கொடுத்தவரத்தைத் தவிர்வையானால் இதோ உன் எதிரில் உயிர்விடுகிறேன் என்று துணிந்திருந்தாள். இப்படியிருக்க பொழுது விடிந்தது. பறவைமுதலியவும் ஸ்ரீராமபட்டாபிஷேகங்காணக் குதூகலித்தனபோல எழுந்துலாவ, இவ்விரவு எப்போ விடியுமோ என்று எதிர்பார்த்திருந்த ஆண்பிள்ளைகளும் பெண்பிள்ளைகளும் எழுந்து அலங்காரஞ்செய்துகொண்டு தெருக்களில் நிறைந்து போங்கள் போங்கள் என்று ஒருவரையொருவர் நெருக்கினதேயன்றி போனவர்களுமில்லாமல் நின்றவர்களுமில்லாமல் கடல்போலக் கூவிக்கொண்டிருந்தார்கள். அநேகராஜாக்கள் வெண்குடை வெண்சாமரைகள் விளங்கவும், கிரீடமுதலிய காந்திகள் தேவர்கண்ணையுமறைக்கவும் பட்டாபிஷேக மண்டபத்துக்கு வந்து சேர்ந்தார்கள். வசிட்டமாமுனிவர் மற்றுமுள்ள முனிவரோடும் பிராமணரோடும் அங்குவந்து பட்டாபிஷேகத்துக்குவேண்டிய பொருள்களையும் புண்ணியதீர்த்தங்களையும் சித்தஞ்செய்து சிங்காதனமுதலியவும் திருத்திவைத்திருந்தார். இவ்வகையிருக்க, அரசன் கைகேயிமாளிகைக்குச் சென்றிருப்பதுதெரிந்து சுமந்திரன் அங்குச்செல்ல, கேகயன்மகள், இராமனை இங்கு இட்டுக்கொண்டுவா என்று சொல்ல, அதைக்கேட்டுச் சுமந்திரன் இராமனுக்கு இச்செய்தி அறிவிக்க, அவரும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை வணங்கி அரசர் சூழவும் பல வாத்தியங்கள் முழங்கவும், தேரேறி வீதிகளில்நின்ற பெண்கள் மொய்த்து நோக்கும் குவளைப்பூக் காட்டினிடையில் அவர்கள் பற்பலவிதமாய்ப் புகழ்ந்துபேச விபவமாய் வீதிகளைக்கடந்து கைகேயிமனைபுட்சென்று தந்தையிருக்குமிடம் தேடிக்கொண்டிருக்கையில் அந்தக் கைகேயி எதிரில்வந்து தன் பாதங்களைக் கும்பிட்டு வணங்கிநிற்கிற இராமனோடு, அப்பா! உன் தந்தை சொன்னசெய்தி ஒன்று உனக்குச் சொல்வேன் என்றாள். இராமமூர்த்தி, தாயே அவர் சொன்னாலென்ன, நீ சொன்னாலென்ன, கட்டளைப்படி நடக்கக் காத்திருக்கிறேன் என்றதைக்கேட்டு, உன் தம்பி பரதன் இந்நா

டாளவும், நீ தவவேடத்தோடு பதினன்குவருடம் காட்டிற்செல்லவும் மகாராஜா பணித்தார் என்றாள். அதுகேட்டு முன்னினும் அதிக சந்தோஷமாய் அன்றலர்ந்த செந்தாமரை மலரொத்தமுகத்தோடு ஸ்ரீராமர், அம்மா என் தம்பி பெறுஞ்செல்வம் என்செல்வமேயன்றோ இதோ காட்டிற்குச் செல்கின்றேன் என்று அங்கீகரித்தார் என்பது இப்படலத்தின் கதை.

---

1 நாழிகை கங்குலி னள்ள டைந்த பின்றை
யாழிசை யஞ்சிய வஞ்சொ லேழை கோயில்
வாழிய வென்றயின் மன்னர் துன்ன வந்தான்
ஆழி நெடுங்கை மடங்க லாளி யன்னான்.

2 வாயலின் மன்னர் வணங்கி நிற்ப வந்தாங்
கேயின செய்யு மடந்தை மாரோ டேகி
பாயறு றந்த படைத்த டங்கண் மென்றோள்
ஆயிழை தன்னை யடைந்த வாழி மன்னன்.

3 அணைந்தவ ணோக்கி யரந்தை யென்கொல் வந்து
தொடர்ந்த தெனத்துயர் கொண்டு சோரு நெஞ்சன்
மடந்தையை மானை யெடுக்கு மானை யேபோல்
தடங்கைகள் கொண்டு தழீஇ யெடுக்க லுற்றான்.

4 நின்று தொடர்ந்த நெடுங்கை தம்மை நீக்கி
மின்றுவள் கின்றது போல மண்ணில் வீழ்ந்தாள்
ஒன்று மியம்பல ணீடு யிர்க்க லுற்றாள்
மன்றல ருந்தொடை மன்ன னாவி யன்னாள்.

5 அன்னது கண்ட வலங்கன் மன்ன னஞ்சி
என்னை நிகழ்ந்ததி ஞால மேழில் வாழ்வார்
உன்னை யிகழ்ந்தவர் மாள்வ ருற்ற தெல்லாம்
சொன்னபி னென்செயல் காண்டி சொல்லி டென்றான்.

6 வண்டுளர் தாரவன் வாய்மை கேட்ட மங்கை
கொண்ட னெடுங்கணி னாவி கொங்கை கோப்ப
உண்டுகொ லீமரு ளென்க னுன்க ணெக்கில்
பண்டைய வின்று பரிந்த ளித்தி யென்றாள்.

7 கள்ளவிழ் கோதை கருத்து ணர்ந்த மன்னன்
வெள்ள நெடுஞ்சுடர் மின்னின் மின்ன நக்கான்
உள்ள முவந்துள செய்வ னொன்றும் லோபேன்
வள்ளலி ராமனுன் மைந்த னாணை யென்றான்.

8 ஆன்றவ னவ்வுரை கூற வைய மில்லாள்
தோன்றிய பேரவ லந்து டைத்த துண்டேல்
சான்றிமை யோர்குல மாக மன்ன நீயன்
றேன்ற வரங்க ளிரண்டு மீதி யென்றாள்.

9 வரங்கொள வித்துணை மன்னு மல்ல லெய்தி
இரங்கிட வேண்டுவ தீவ னேகொ லென்பால்
பரங்கெட விப்பொழு தேப கர்ந்தி டென்றான்
உரங்கொண் மனத்தவள் வஞ்ச மோர்கி லாதான்.

10 ஏய வரங்க ளிரண்டி னொன்றி னாலென்
சேயர சாள்வது சீதை கேள்வ னொன்றால்
போய்வன மாள்வ தெனப்பு கன்று நின்றாள்
தீயவை யாவையி னுஞ்சி றந்த தீயாள்.

11 நாக மெனுங்கொடி யாட னாவி னீய்ந்த
சோக விடந்தொட ரத்து னுக்க மெய்தா
ஆக மடங்கலும் வெந்த ழிந்த ராவின்
வேக மடங்கிய வேழ மென்ன வீழ்ந்தான்.

12 பூதல முற்றத னிற்பு ரண்ட மன்னன்
மாதுய ரத்தினை யாவர் சொல்ல வல்லார்
வேதனை முற்றிட வெந்து வெந்து கொல்லன்
ஊதுலை யிற்கன லென்ன வெய்து யிர்த்தான்.

13 உலர்ந்தது நாவுயி ரோட லுற்ற துள்ளம்
புலர்ந்தது கண்கள் பொடித்த பொங்கு சோரி
சலந்தலை மிக்கது தக்க தென்கொ லென்றேன்
றலந்தலை யுற்ற வரும்பு லன்க ளைந்தும்.

14 மேவி நிலத்தி விருக்கு நிற்கும் வீழும்
ஓவிய மொப்ப வுயிர்ப்ப டங்கி யோயும்
பாவியை யுற்றெதிர் பற்றி யெற்ற வெண்ணும்
ஆவி பதைப்ப வலக்க ணெய்து கின்றான்.

15 பெண்ணெனை வுற்ற பெரும்ப ழிக்கு நாணும்
உண்ணிறை வெப்பொ டுயிர்த்து யிர்த்து லாவும்
கண்ணினி னோக்கு மயர்க்கு மிக்க கைவேல்
புண்ணுழை தைக்க வுழைக்கு மானை போல்வான்.

16 கம்ப நெடுங்களி யானை யன்ன மன்னன்
வெம்பி விழுந்தெழும் விம்மல் கண்டு வெய்துற்
றும்பர் நடுங்கின ரூழி பேர்வ தொத்த
தம்பன கண்ணவ ளுள்ள மன்ன தேயால்.

17 அஞ்சல னையன தல்லல் கண்டு முள்ளம்
நஞ்சில ளாணில ளென்ன நாண மாமால்
வஞ்சனை பண்டு மடந்தை வேட மென்றே
தஞ்சென மாதரை யுள்ள லார்கள் தக்கோர்.

18 இந்நிலை நின்றவ டன்னை யெய்த நோக்கி
நெய்ந்நிலை வேலவ னீதி சைந்த துண்டோ
பொய்ந்நிலை யோர்கள் புணர்ந்த வஞ்ச முண்டோ
அந்நிலை சொல்லென தானை யுண்மை யென்றான்.

19 திசைத்தது மில்லை யெனக்கு வந்து தீயோர்
இசைத்தது மில்லை முனிந்த திவ்வ ரங்கள்
குசைப்பரி யோய்தரி னின்று கொள்வெ னன்றேல்
வசைத்திற நின்வயின் வைத்து மாள்வெ னென்றாள்.

20 இந்த நெடுஞ்சொலவ் வேழை கூறு முன்னே
வெந்த கொடும்புணில் வேலு ழைந்த தொப்ப
சிந்தை திரிந்து திகைத்த யர்ந்து வீழ்ந்தான்.
மைந்த னலாதுயிர் வேறி லாத மன்னன்.

21 ஆகொடி யாயெனு மாவி கா்லு மந்தோ
ஓகொடி தேயற மென்னு முண்மை யொன்றும்
சாக வெனுவெழு மெய்த ளாடி வீழும்
மாகமு நாகமு மண்ணும் வென்ற வீளான்.

22 நாரிய ரில்லையிஞ் ஞால மேழு மென்னக்
கூரிய வாள்கொடு கொன்று நீக்கி யானும்
பூரிய ரெண்ணிடை வீழ்வ னென்று பொங்கும்
வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான்.

23 கையொடு கையை புடைக்கும் வாய்க டிக்கும்
பொய்யுரை குற்ற மெனப்பு ழுங்கி வாடும்
நெய்யெரி யுற்றென நெஞ்ச ழிந்து சோரும்
வையக முற்று நடந்த வாய்மை மன்னன்.

24 ஒறுப்பினு மந்தா முண்மை யொன்று மோவா
மறுப்பினு மந்தா மென்று வாய்மை மன்னன்
பொறுப்பினு மிந்நிலை போகி லாளை வாளால்
இறுப்பினு மாவ திரப்ப தென்றெ ழுந்தான்.

வேறு.

25 கோன்மேற் கொண்டுங் குற்ற மகற்றிக் குறிகொண்டார்
போன்மே லுற்ற துண்டெனி னன்றும் பொறையென்னு
கான்மேல் வீழ்ந்தான் கந்துகொல் யானைக் களிமன்னர்
மென்மேல் வந்து முந்தி வணங்கி மிடைதாளான்.

26 கொள்ளா னின்சே யிவ்வா சன்னுன் கொண்டாலும்
நள்ளா திந்த நானிலம் ஞாலந் தனிலென்றும்
உள்ளா ரெல்லா மோத வுவக்கும் புகழ்கொள்ளாய்
எள்ளா நிற்கும் வன்பழி கொண்டென் பயனென்றான்.

27 வானோர் கொள்ளார் மண்ணவ ருய்யா ரினிமற்றென்
ஏனோர் செய்கை யாரொடு நீயிவ் வரசாள்வாய்
யானே சொல்லக் கொள்ள விசைந்தான் முறையாலே
தானே நல்கு மூன்மக னுக்குந் தரையென்றான்.

28 கண்ணே வேண்டு மென்னினு மீயக் கடவேனென்
உண்ணே ராவி வேண்டினு மின்றே யுனதன்றோ
பெண்ணே வண்மைக் கைகயன் மானே பெறுவாயேல்
மண்ணே கொண்ணீ மற்றைய தொன்று மறவென்றான்.

29 வாய்தந் தேனென் றேனினி யானோ வதுமாற்றேன்
நோய்தந் தென்னை நோவன செய்து நுவலாதே
தாய்தந் தென்னத் தன்னை யிரந்தாற் றழல்வெங்கட்
பேய்தந் தீயு நீயிது தந்தாற் பிழையாமோ.

30 இன்னே யின்னே பன்னி யிரந்தா னிகல்வேந்தன்
தன்னே ரில்லாத் தீயவ ளுள்ளந் தடுமாறாள்
முன்னே தந்தா யிவ்வர நல்காய் முனிவாயேல்
என்னே மன்னா யாருளர் வாய்மைக் கினியென்றாள்.

31 அச்சொற் கேளா வாவி புழுங்கா வயர்கின்றான்
பொய்ச்சொற் கேளா வாய்மொழி மன்னன் பொறைகூர
நச்சுத் தீயே பெண்ணுரு வன்றோ வெனநாணு
மூச்சற் றார்போற் பின்னு மிருந்தே மொழிகின்றான்.

32 நின்மக னாள்வா னீயினி தாள்வாய் நிலமெல்லாம்
உன்வய மாமே யாளுதி தந்தே னுரைகுன்றேன்
என்மக னென்கண் ணென்னுயி ரெல்லா வுயிர்கட்கும்
நன்மக னிந்த நாடிற வாமை நயவென்றான்.

33 மெய்யே யென்றன் வேற நூறும் வினைநோக்கி
நையா நின்றே னாவு முலர்ந்தே னளினம்போல்
ஐயா னின்றென் கண்ணெதிர் நின்றுங் கழிவானேல்
உய்யே னங்கா யுன்னப யம்மென் னுயிரென்றான்.

34 இரந்தான் சொல்லு மின்னுரை கொள்ளாள் முனிவெஞ்சாள்
மரந்தா னென்னு நெஞ்சின ளாணாள் வசைபாராள்
சரந்தா வில்லாந் தந்த வரத்தைத் தவிர்கென்றல்
உரந்தா னல்லா னல்லற மாமோ வுரையென்றாள்.

35 கொடியா ளின்ன கூறினள் கூறக் குலவேந்தன்
முடிசூ டாமற் காத்தலு மொய்கா னிடைமெய்யே
நெடியா னீங்க நீங்குமெ னாவி யினியென்னா
இடியே றுண்ட மால்வரை போன்மண் ணிடைவீழ்ந்தான்.

36 வீழ்ந்தான் வீழா வெந்துய ரத்தின் கடல்வெள்ளத்
தாழ்ந்தா னாழா வக்கட லுக்கோர் கரைகாணான்
சூழ்ந்தா னன்பஞ் சொற்கொடி யாள்சொற் கொடுநெஞ்சம்
போழ்ந்தா னுள்ளப் புன்மையை நோக்கிப் புலர்கின்றான்.

37 ஒன்றா நின்ற வாருயி ரோடு முயிர்கேள்வர்
பொன்றா முன்னம் பொன்றின ரென்னும் புகழல்லால்
இன்றோர் காறு மெல்வளை யார்தம் மிறையோரைக்
கொன்றா ரில்லை கொல்லுதி யோநீ கொடியாளே.

38 ஏவம் பாரா யின்முறை நோக்கா யறமெண்ணாய்
ஆவென் பாயோ வல்லை மனத்தா லருள்கொன்றாய்
நாவம் பாலென் னாருயி ருண்டா யினிஞாலம்
பாவம் பாரா தின்னுயிர் கொள்ளப் படுகின்றாய்.

39 ஏண்பா லோவா நாண்மட மச்ச மிவையேதம்
பூண்பா லாகக் காண்பவர் நல்லார் புகழ்பேணி
நாண்பா லோரா நங்கையர் தம்பா னணுகாரே
ஆண்பா லாரே பெண்பா லாரோ டடைவம்மா.

40 மண்ணா ளின்றா ராகி வலத்தான் மதியால்வைத்
தெண்ணா நின்றார் யாரையு மெல்லா விகலாலும்
விண்ணோர் காறும் வென்ற வெனக்கென் மனைவாழும்
பெண்ணால் வந்த தந்தா மென்னப் பெறுவேனோ.

41 என்றென் றுன்னும் பன்னி யிரக்கு மிடர்தோயும்
ஒன்றான் றெவ்வா வின்ன லுழக்கு முயிருண்டோ
இன்றின் றென்னும் வண்ண மயங்கு மிடியும்பொன்
குன்றொன் றொன்றோ டொன்றிய தென்னக் குலைதோளான்.

42 ஆழிப் பொற்றேர் மன்னவ னிவ்வா றயர்வெய்திப்
பூழிப் பொற்றோண் முற்று மடங்கப் புரள்போழ்தில்
ஊழிற் பொய்த்தா லென்னுரை யின்றே யுயிர்மாய்வென்
பாழிப் பெழுற்றார் மன்னவ வென்றாள் பஞ்சையற்றாள்.

43 அரிந்தான் முன்னோர் மன்னவ னன்றே யருமேனி
வரிந்தார் வில்லாய் வாய்மை வளர்ப்பான் வரநல்கி
பரிந்தா லென்னு மென்றனள் பாயுங் கனலேபோல்
எரிந்தே றாதே யின்னுயி ருண்ணு மெரியன்னாள்.

44 வீய்ந்தா ளேயிவ் வெய்யவ ளென்னு மிடல்வேந்தன்
ஈந்தே னீந்தே னிவ்வர மென்சேய் வனமாள
மாய்ந்தே நான்போய் வானுல காள்வென் வசைவெள்ளம்
நீந்தாய் நீந்தாய் நின்மக னோடு நெடிதென்றான்.

45 கூறா முன்னங் கூறு படுக்குங் கொலைவாளின்
வேறா மென்னும் வன்றுய ராகத் திடைமூழ்க
தேறா னாகிச் செய்கை மறந்தான் செயன்முற்றி
ஊறா நின்ற சிந்தையி னாளுந் துயில்வுற்றாள்.

வேறு.

46 சேணு லாவிய நாளெ லாமுயி ரொன்று போல்வன செய்துபின்
ஏணு லாவிய தோளி னானிட ரெய்த வொன்று மிரங்கிலா
வாணி லாநகை மாத ராள்செயல் கண்டு மைந்தர் முனிற்கவும்
நாணி னாளென வேகி னாளிர் கங்கு லாகிய நங்கையே.

47 எண்ட ருங்கடை சென்ற யாம மியம்பு கின்றன வேழையால்
வண்டு தங்கிய தொங்கன் மார்பன் மயங்கி விம்மிய வாறெலாம்
கண்டு நெஞ்சு கலங்கி யஞ்சிறை யான காமர் துணைக்கரம்
கொண்டு தம்வயி றெற்றியெற்றி விளிப்பபோன்றன கோழியே.

48 தோய்க யத்து மரத்து மென்சிறை துள்ளி மீதெழு புள்ளெலாம்
தேய்கை யொத்த மருங்குன் மாதர் சிலம்பி னின்று சிலம்புவ
கேகய த்தா சன்ப யந்த விடத்தை யின்னதொர் கேடுசூழ்
மாக யத்தியை யுட்கொ திக்கு மனத்து வைவன போன்றவே.

49 சேம மென்பன பற்றி யன்பு திருந்த வின்றுயில் செய்தபின்
வாம மேகலை மங்கை யோடு வனத்துள் யாரு மறக்கிலா
நாம நம்பி நடக்கு மென்று நடுங்கு கின்ற மனத்தவாய்
யாமு மிம்ம ணிறத்து மென்பன போலெழுந்தன யானையே.

50 சிரித்த பங்கய மொத்த செங்க ணிராம னைத்திரு மாலையக்
கரிக்க ரம்பொரு கைத்த லத்துயர் காப்பு நாணணி தற்குமுன்
வரித்த தண்கதிர் முத்த தாகியிம் மண்ண னைத்து நிழற்றமேல்
விரித்த பந்தர் பிரித்த தாமென மீனொ ளித்தன வானமே.

51 நாம விற்கை யிராம னைத்தொழு நாள டைந்த நமக்கெலாம்
காம விற்குடை கங்குன் மாலை கழிந்த தென்பது கற்பியா
தாமொ லித்தன பேரி யவ்வொலி சாரன் மாரி தழங்கலா
மாம யிற்குல மென்ன முன்ன மலர்ந்தெ ழுந்தனர் மாதரே.

* * *

52 சாய டங்க நலங்க லந்து தயங்கு தன்குல நன்மையும்
போய டங்க நெடுங்கொ டும்வழி கொண்ட ரும்புகழ் சிந்தமத்
தீய டங்கிய சிந்தை யாள்செயல் கண்டு சீரிய நங்கைமார்
வாய டங்கின வென்ன வந்து குவிந்த வண்குமு தங்களே.

* * *

53 ஆழி யான்முடி சூடு நாளிடை யான பாவி யிதோரிரா
ஊழி யாயின வாறெ னுவுயர் போதின் மேலுறை பேதையும்
ஏழுலோகமு மெண்ட வஞ்செய்த கண்ணு மெங்கள்மனங்களும்
வாழு நாளி தெனுவெ ழுந்தனர் மஞ்சு தோய்புய மஞ்சரே.

54 ஐயு றுஞ்சுடர் மேனி யானெழில் காண மூளு மவாவினால்
கொய்யு றுங்குல மாம லர்க்குவை நின்றெ ழுந்தனர் கூர்மைகூர்
செய்யு றுஞ்சுடர் வேனெ டுங்கண் முகிழ்த்து நெஞ்சி னினைப்
[பொடும்
பொய்யுறங்குமடந்தைமார்குழல்வண்டு பொம்மென விம்மவே.

55 ஆட கந்தரு பூண்மு யங்கிட வஞ்சி யஞ்சி யனங்கரால்
ஏட கம்பொதி தார்பொ ருந்திட யாம பேரி யிசைத்தலால்
சேடகம்புனை கோதைமங்கையர் சிந்தையின்செறிதிண்மையால்
ஊடல் கண்டவர் கூடல் கண்டிலர் நையு மைந்தர்க ளுய்யவே.

56 வைய மேழு மொரேழு மாருயி ரோடு கூட வழங்குமம்
மெய்யன் வீரருள் வீரன் மாமகன் மேல்வி ளைந்ததொர் காதலால்
ஐய ஐய நலம்பு லன்க ளவிந்த டங்கி நடுங்குவான்
தெய்வ மேனி படைத்த சேயொளி போன்ம ழுங்கின தீபமே.

57 வங்கி யம்பல தேன்வி ளம்பின வாணி முந்தின பாணியின்
பங்கி யம்பர மெங்கும் விம்மின பம்பை பம்பின பல்வகைப்
பொங்கி யம்பல வுங்க றங்கின நூபு ரங்கள் புலம்பவெண்
சங்கி யம்பின கொம்ப லம்பின சாம கீத நிரம்பவே.

58 தூப முற்றிய கார்இ ருட்பகை துள்ளி யோடிட வுள்ளெழும்
தீப முற்றவு நீர்த்த கன்றென சேய தாருயிர் தேய்தலால்
பாப முற்றிய பேதை செய்த பகைத்தி றத்தினில் வெய்யவன்
கோப முற்றி மிகச்சி வந்தன னொத்த னன்குணக் குன்றிலே.

59 மூவ ராய்முத லாகி மூலம தாகி ஞாலமு மாகி யத்
தேவ தேவர் பிடித்த போர்வி லொடித்த சேவகர் சேணிலம்
காவன் மாமுடி சூடு பேரெழில் காண லாமெனு மாசைகூர்
பாவை மார்முக மென்ன முன்ன மலர்ந்த பங்கய ராசியே.

60 இன்ன வேலையி னேழு வேலையு மொத்த போல வினைத்தெழுந்
தன்ன மாநகர் மைந்தன் மாமுடி சூடும் வைக லிதாமெனு
துன்னு காதல்துரப்ப வந்தவை சொல்லலாம்வகை யெம்மனோர்க்
குன்ன லாவன வல்ல வென்னினு முற்ற பெற்றி யுணர்த்துவாம்.

வேறு.

61 குஞ்சர மனையார் சிந்தைகொ ளிளையார்
பஞ்சினை யணிவார் பால்வளை தெரிவார்
அஞ்சன மெனவா ளம்புக ளிடையே
நஞ்சினை யிடுவார் நாண்மலர் புனைவார்.

வேறு.

*

62 மாதர்கள் கற்பின் மிக்கார் கோசலை மனத்தை யொத்தார்
வேதியர் வசிட்ட னொத்தார் வேறுள மகளி ரெல்லாம்
சீதையை யொத்தா ரன்று டருசினை யொத்தா ளவ்வூர்
சூதுகை மாந்த ரெல்லாந் தயரதன் றன்னை யொத்தார்.

63 வேந்தரே பெரிதென் பாரும் வீரரே பெரிதென் பாரும்
மாந்தரே பெரிதென் பாரு மகளிரே பெரிதென் பாரும்
போந்ததே பெரிதென் பாரும் புகுவதே பெரிதென் பாரும்
தேர்ந்ததே தேரி னல்லால் யாவரே தெரியக் கண்டார்.

64 குவளையி னெழிலும் வேலின் கொடுமையுங் குழைத்துக் கூட்டி
இவளுமஞ் சனமென் றேய்ந்த நஞ்சினைத் தெரியத் தீட்டி
தவளவொண் மதியுள் வைத்த தன்மைசால் தடங்க ணல்லார்
துவளுறுண் ணிடையாராடுந் தோகையங் குழாத்திற் றொக்கார்.

65 நலங்கிளர் பூமி யென்னு நங்கையை நறுந்து ழாயின்
அலங்கலான் புணருஞ் செல்வங் காணவந் தடைந்தி லாதார்
இலங்கையி னிருத ரேயிவ் வேழுல கத்து வாழும்
விலங்கலு மாசை நின்ற விடாமத விலங்க லேயால்.

66 சந்திரர் கோடி யென்னத் தரளவெண் கவிகை யோங்க
அந்தரத் தன்ன மெல்லா மார்ந்தெனக் கவரி துன்ன
இந்திரற் குவமை சாலு மிருநிலக் கிழவ ரெல்லாம்
வந்தனர் மௌலி சூட்டு மண்டப மாபிற் புக்கார்.

67 முற்பயந் தெடுத்த காதற் புதல்வனை முறையி னோடும்
இற்பயன் சிறப்பி ப்பாரி னீண்டிய வுவகை தூண்ட
அற்புதன் றிருவைச் சேரு மருமணங் காணப் புக்கார்
நற்பயன் றவத்தி னுய்க்கு நான்மறைக் கிழவ ரெல்லாம்.

68 விண்ணவர் விசும்பு தூர்த்தார் விரிதிரை யுடுத்த கோல
மண்ணவர் திசைக ரேர்த்தார் மங்கல மிசைக்குஞ் சங்கம்
கண்ணகன் முரசி னோதை கண்டவர் செவிக ரேர்த்த
எண்ணிருங் கனக மாரி யெழுதிரைக் கடல்க ரேர்த்த.

69 விளக்கொளி மறைத்த மன்னர் மின்னொளி மகுட கோடி
துளக்கொளி விசும்பி னூருஞ் சுடரையு மறைத்த சூழ்ந்த
அளக்கர்வாய் முத்த மூரல் முறுவலா ரணியின் சோதி
வளைக்கலா மென்றவ் வானோர் கண்ணையு மறைத்த வன்றே.

70 ஆயதோ ரமைதி யின்க ணையனை மகுடஞ் சூட்டற்
கேயுமங் கலங்க ளான யாவையு மியையக் கொண்டு
தூயநான் மறைகள் வேத பாரகர் சொல்லத், தொல்லை
வாயில்க ணெருக்க நீங்க மாதவக் கிழவன் வந்தான்.

71 கங்கையே முதல வாய கன்னியீ றான தீர்த்த
மங்கலப் புனலு நாலு வாரியி னீரும் பூரித்
தங்கியின் வினையிற் கேற்ற யாவையு மமைத்து வீரச்
சிங்கவா தனமும் வைத்துச் செய்வன பிறவுஞ் செய்தான்.

72 கணிதநூ லுணர்ந்த மாந்தர் காலம்வந் தடுத்த தென்னப்
பிணியற நோற்று நின்ற பெரியவன் விரைவி னேகி
மணிமுடி வேந்தன் றன்னை வல்லையிற் கொணர்தி யென்னப்
பணிதலை நின்ற காதற் சுமந்திரன் பரிவிற் சென்றான்.

73 விண்டொட நிவந்த கோயில் வேந்தர்தம் வேந்தன் றன்னைக்
கண்டிலன் வினவக் கேட்டான் கைகயன் கோயி னண்ணித்
தொண்டைவாய் மடந்தை மாரிற் சொல்ல மற்றவருஞ் சொல்ல
பெண்டிரிற் கூற்ற மன்னாள் பிள்ளையைக் கொணர்க வென்றாள்.

74 என்றன ளென்னக் கேட்டா னெழுந்தபே ருவகை பொங்க
பொன்றிணி மாட வீதி பொருக்கென நீங்கிப் புக்கான்
தன்றிரு வுள்ளத் துள்ளே தன்னையே நினையு மற்றக்
குன்றிவர் தோளி னானைத் தொழுதுவாய் புதைத்துக் கூறும்.

75 கொற்றவர் முனிவர் மற்றுங் குவலயத் துள்ளா ருன்னைப்
பெற்றவன் றன்னைப் போலப் பெரும்பரி வியற்றி நின்றார்
சிற்றவை தானு மாங்கே கொணர்கெனச் செப்பி னாளப்
பொற்றட மகுடஞ் சூடப் போதுதி விரைவி னென்றான்.

76 ஐயனு மச்சொற் கேளா வாயிர மௌலி யானைக்
கைதொழு தாக வெள்ளங் கடலெனத் தொடர்ந்து சுற்றத்
தெய்வ கீதங்கள் பாடத் தேவரு மகிழ்ந்து வாழ்த்தத்
தையலா ரிரைத்து நோக்கத் தாரணி தேரிற் சென்றான்.

77 திருமணி மகுடஞ் சூடச் சேவகன் செல்கின் றானென்
றொருவரி னொருவர் முந்தக் காதலோ டுவகை யுந்த
இருகையு மிரைத்து மொய்த்தா ரின்னுயிர் யார்க்கு மொன்றாய்
பொருவருந் தேரிற் செல்லப் புறத்திடைக் கண்டார் போல்வார்.

78 துண்ணெனுஞ் சொல்லாள் சொல்லச் சுடர்முடி துறந்து தூய
மண்ணெனுந் திருவை நீங்கி வழிக்கொளா முன்னம் வள்ளல்
பண்ணெனுஞ் சொல்லி னார்தந் தோளெனும் பணைத்த வேயும்
கண்ணெனுங் கால வேலு மிடைநெடுங் கானம் புக்கான்.

* * *

79 அங்கணா னவனி காத்தற் காமிவ னென்ன லாமோ
நங்கணான் பிலனென் றுள்ளந் தள்ளுற நடுங்கி நைவார்
செங்கணுங் கரிய கோல மேனியுந் தேரு மாகி
எங்கணுந் தோன்று கின்றா ரெனைவரோ விராம னென்பார்.

80 இனையரா மகளி ரெல்லா மிரைத்தனர் நிரைத்து மொய்த்தார்
முனைவரு நகர மூதூர் முதிஞரு மிளைஞர் தாமும்
அனையவன் மேனி கண்டா ரன்பினுக் கெல்லை காணார்
நினைவினர் மனத்தால் வாயால் நிகழ்ந்தது நிகழ்ந்த தன்றாம்.

81 உய்ந்ததிவ் வுலக மென்பா ரூழிகாண் கிற்பா யென்பார்
மைந்தநீ கோடி யெங்கள் வாழ்க்கைநாள் யாவு மென்பார்
ஐந்தவித் தரிதிற் செய்த தவமுனக் காக வென்பார்
பைந்துழாய்த் தெரிய லாய்க்கே நல்வினை பயக்க வென்பார்.

82 உயாரு ளொண்க ணொக்குந் தாமரை நிறத்தை யொக்கும்
புயல்பொழி மேக மென்ன புண்ணியஞ் செய்த வென்பார்
செயலருந் தவங்கள் செய்திச் செம்மலைத் தந்த செல்வத்
தயரதற் கென்ன கைம்மா றுடையம்யாந் தக்க தென்பார்.

83 வாரண மாற்ற வந்து காராவுயிர் மாற்று நேமி
நாரண னுக்கு மிந்த நம்பிதன் கருணை யென்பார்
ஆரண மறிதல் தேற்றா வையனை யனுகி நோக்கிக்
காரண மின்றி யேயுங் கண்கணீர் கலுழ நிற்பார்.

84 நீலமா முகில னன்ற னிறையினே டறிவு நிற்க
சீலமார்க் குண்டு கெட்டேன் றேவரி னடங்கு வானே
காலமாக் கணிக்கு நுண்மை கணக்கையுங் கடந்து நின்ற
மூலமாய் முடிவிலாத மூர்த்தியிம் முன்ப னென்பார்.

85 ஆர்கலி யகழ்ந்தோர் கங்கை யவனியிற் கொணர்ந்தோர் முந்தை
போர்கெழு புலவர்க் காகி யசுரரைப் பொருது வென்றோர்
பேர்கெழு சிறப்பின் வந்த பெரும்புகழ் நிற்ப வையன்
நீர்செழு திரடோ டந்த புகழினைத் தழுவி யென்பார்.

வேறு.

86 சந்தமிவை தாவில்மணி யாரமிவை யாவும்
சிந்துரமு மிங்கிவை செறிந்தமத வேழப்
பந்திகள் வயப்பரி பசும்பொனின் வெறுக்கை
மைந்தவறி யோர்கொள வழங்கென நிரைப்பார்.

87 மின்பொருவு தேரின்மிசை வீரன்வரு போழ்தில்
தன்பொருவில் கன்றுதனி தாவிவரல் கண்டாங்
கன்புருகு சிந்தையொடு மாவுருகு மாபோல்
என்புருகி நெஞ்சுருகி நஞ்சுருகி நிற்பார்.

88 சத்திர நிழற்றநிமிர் தானையொடு நானு
அத்திர நிழற்றவரு ளோடவணி யாள்வார்
புத்திர ரினிப்பெறுதல் புல்லிதென நல்லோர்
சித்திர மெனத்தனி திகைத்துருகி நிற்பார்.

89 கார்மினெ டுலாயதென நூல்கஞலு மார்பன்
தேர்மிசைநம் வாயில்கடி தேகுதல் செய்வானே
கூர்கனக ராசியொடு கோடிமணி யாலும்
தூர்மினெடு வீதியினை யென்றுசொரி வாரும்.

90 தாய்கையில் வளர்ந்திலன் வளர்த்தது தவத்தால்
கேகயன் மடந்தைகிளர் ஞாலமிவ னுள
ஈகையிது வந்தவவ்வி யற்கையிது வென்றால்
நோகையிவள் பேருவகை சொல்லலரி தென்பார்.

91 பாவமு மருந்துயரும் வேர்பறியு மென்பார்
பூவலய மின்றுதனி யன்றுபொது வென்பார்
தேவர்பகை யுள்ளனவிவ் வள்ளறெறு மென்பார்
ஏவல்செயு மன்னர்தவம் யாவதுகொ லென்பார்.

92 ஆண்டினைய ராயினைய கூறவடல் வீரன்
தூண்டுபுர விப்பொருவில் சுந்த ரமணித்தேர்
நீண்டகொடி மாடநிரை வீதிநிறை யப்போய்
பூண்டபுகழ் மன்னனுறை கோயில்புக லோடும்.

வேறு.

93 ஆங்குவந் தடைந்த வண்ண லாசையின் கவரி வீசப்
பூங்குழன் மகளி ருள்ளம் புதுக்களி யாட நோக்கி
வீங்கிருங் காதல் காட்டி விரிமுகக் கமல பீடத்
தோங்கிய மகுடஞ் சூடி யுவகைவீற் றிருப்பக் காணான்.

94 வேத்தவை முனிவ ரோடு விருப்பொடு களிக்கு மெய்மை
ஏத்தவை யிசைக்குஞ் செம்பொன் மண்டபமினிதி னெய்தான்
ஓத்தவை யுலகத் தெங்கு முள்ளவை யுணர்ந்தா ருள்ளம்
பூத்தவை வடிவை யொப்பான் சிற்றவை கோயில் புக்கான்.

95 புக்கவன் றன்னை நோக்கிப் புரவலர் முனிவர் யாரும்
தக்கதே நினைந்தான் தாதை தாமரைச் சரணஞ் சூடி
திக்கினை நிமிர்த்த கோலச் செல்வனே செம்பொற் சோதி
மிக்குயர் மகுடஞ் சூட்டச் சூடுதல் விழுமி தென்றார்.

96 ஆயன நிகழும் வேலை யண்ணலு மயர்ந்து தேருத்
தூயவ னிருந்த சூழற் றுருவினன் வருத னோக்கி
நாயக னுரையான் வாயா னினிது பகர்வெ னென்னு
தாயென நினைவான் முன்னே கூற்றெனத் தமியள் வந்தாள்.

97 வந்தவ டன்னைச் சென்னி மண்ணுற வணங்கி வாய்த்த
சிந்துரப் பவளச் செவ்வாய் செங்கையிற் புதைத்து மற்றைச்
சுந்தரத் தடக்கை தானை மடக்குறத் துவண்டு நின்றான்
அந்திவந் தடைந்த தாயைக் கண்டவான் கன்றி னன்னான்.

98 நின்றவன் றன்னை நோக்கி யிரும்பினா லியைந்த நெஞ்சிற்
கொன்றுழல் கூற்றமென்னும் பெயரினிற் கொடுமைபூண்டாள்
இன்றெனக் குணர்த்த லாவ தேயதே யென்னி னாகும்
ஒன்றுனக் குந்தை மைந்த வுரைப்பதோ ருரையுண்டென்றாள்.

99 எந்தையே யேவ நீரே யுரைசெய வியைவ துண்டேல்
உய்ந்தனெ னடியே னென்னிற் பிறந்தவ ருளரோ வாழி
வந்ததென் தவத்தி னாய வருபயன் மற்றொன் றுண்டோ
தந்தையுந் தாயு நீரே தலைநின்றேன் பணிமி னென்றான்.

100 ஆழிசூ ழுலக மெல்லாம் பரதனே யாள நீபோய்த்
தாழிருஞ் சடைக டாங்கித் தாங்கருந் தவமேற் கொண்டு
பூழிவெங் கான நண்ணிப் புண்ணியத் துறைக ளாடி
ஏழிரண் டாண்டின் வாவென் றியம்பின னரச னென்றாள்.

101 இப்பொழு தெம்ம னோரா லியம்புதற் கெளிதே யாரும்
செப்பருங் குணத்தி ராமன் றிருமுகச் செவ்வி நோக்கில்
ஒப்பதே முன்பு பின்பவ் வாசக முணரக் கேட்ட
அப்பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா.

102 தெருளுடை மனத்து மன்ன னேவலிற் றிறம்ப வஞ்சி
இருளுடை யுலகந் தாங்கு மின்னலுக் கியைந்து நின்றான்
உருளுடைச் சகடம் பூண்ட வுடையவ னுய்த்த காரே
றருளுடை யொருவ னீக்க வப்பிணி யவிழ்ந்த தொத்தான்.

103 மன்னவன் பணியன் றாகி னும்பணி மறுப்ப னோவென்
பின்னவன் பெற்ற செல்வ மடியனேன் பெற்ற தன்றோ
என்னினி யுறுதி யப்பா லிப்பணி தலைமேற் கொண்டேன்
மின்னொளிர் கான மின்றே போகின்றேன் விடையுங் கொண்
[டேன்.

3-வது. கைகேசி சூழ்வினைப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 110ல்-103.



## 4-வது. நகர்நீங்குபடலம்.

இப்படலத்தின் கதையாவது:—இவ்வாறு கைகேசி கட்டளையிட்ட பிறகு ஸ்ரீராமர் கோசலையின் மாளிகையிற்சென்று தெண்டனிட்டுநிற்க, அவள், அப்பா முடிசூட ஏதாகிலும் இடையூறுண்டோவென்று வினாவ, அவர் என் தம்பி முடிசூடும்படி மகாராஜா கைகேசிக்கு வரந்தந்தார் என்றார். அதுகேட்டுக் கோசலாதேவி, முறைபிறழ்வு என்பதொன்றேயன்றிப் [illegible]ன் உன்னிலும் மேலான நற்குணமுடையவன் என்று சந்தோஷித்தாள். பின்பு தன்னைக் காட்டுக்குப் போம்படி அரசன்கொடுத்த வரத்தையும் அறிவிக்க அவள் வேரற்ற கொடிபோல் வீழ்ந்து புலம்பி, மகனே அப்படியாகில் என்னையுங்கூட இட்டுக்கொண்டுபோ என்ன, இராமர், அம்மா என் பிரிவினாலே வருந்துகிற மகாராஜாவுக்கு ஆறுதல்சொல்லிக்கொண்டு அவர் அரசைவிட்டுத் தவஞ்செய்யப்போம்போது நீயும் கூடப்போய் நோன்புகளைச்செய்தல் நியாயமேயன்றி இப்போது வருவது நியாயமன்று. இந்தப் பதினான்குவருடங்களும் பதினான்குநாழிகையாகக் கழித்து முனிவர் முதலானோர் ஆசீர்வாதங்களையும் பெற்று மேன்மையோடுவருகிறேன். விசுவாமித்திரமுனிவராலே முன்பெற்ற அஸ்திரமுதலியவை எனக்குத் துணையிருக்கின்றனவேயென்று சொல்லியதைக்கேட்டுக் கோசலையானவள், இவனைக் காட்டுக்குச் செல்லாதிருக்கும்படி அரசனைவேண்டித் தடுப்பேனென்று கைகேசிமாளிகைக்குச்சென்று அரசன்கிடக்கிற நிலையினாலே இறந்ததாக நினைத்துக் கோவென்று கதறிப்புலம்ப, இந்தக் கூக்குரலைச் சபாமண்டபத்திற்கூடியிருந்த அரசர் அந்தணர் முதலியோர் செவியுற்று அதை அறிந்துவரும்படி ஒரு முனிவரை அனுப்பினார்கள். அவர் அங்குச்சென்று அரசனை உற்றுப்பார்த்து மூர்ச்சையடைந்ததாகத் தெரிந்துகொண்டு இதென்னகாரணமென்று கைகேசியை வினவ, அவள் நடந்ததையெல்லாம் சொல்லினாள். பின்பு அம்முனிவர், மகாராஜாவே கவலைப்படவேண்டாம்; ஸ்ரீராமருக்குக் கைகேசியே அரசுகொடுப்பாள் என்றுசொல்லிச் சீதவுபசாரங்கள்செய்ததனால் அரசனும் கண்திறந்து விசனப்பட, முனிவர் கைகேசியைநோக்கிப் பலவகையில் புத்திசொல்லியும் கேளாமல் ஒரேபிடியாய், ராஜா பேச்சுத்தவறினால் நான் உயிர்விடுவேனென்று கூறினாள். ராஜா பலவகையில் அவளைத் தூஷித்துக் கோசலை வந்திருப்பதையும் தன் பிரிவுக்காக அவள் துயரப்படுவதையும் கண்டு அதிக விசனமுற்று முன்னொருகாலத்தில் தான் வேட்டைக்குச்சென்று ஒரு தடாகத்தில் முனிகுமாரனொருவன் குடத்தில் தண்ணீர்மொள்ள அவ்வோசையானது யானை தண்ணீர்உறிஞ்சுவதுபோலத் தோன்றினதனால் இருட்டில் தெரியாமல் அம்பை எய்ய, அக்குமாரன் அது பட்டுக் கதறித் தரையில் விழுந்ததும் தான் அங்கே ஓடிப்பார்த்து அவன் வரலாற்றையறிந்து இரண்டுகண்ணுமில்லாத அவன் தாய்தந்தையரிடஞ் சென்று செய்தியை அறிவிக்க அவர்கள் அளவில்லாத் துக்கத்தோடு, நீயும் மகனைப்பிரிந்து உயிர்விடக்கடவாயென்று சபித்ததையுஞ்சொல்லி, ஆதலால் இராமன் வனஞ்செல்லாதிரான்; நானும் உயிரோடிரேன், என்று

கூற, கோசலை முதலியவர்கள்கேட்டுத் திகைத்துநின்றார்கள். சபையிலிருந்துவந்த முனிவனும் இவைகளையெல்லாம் தெரிந்துகொண்டு சபையினிடம்சென்று அறிவிக்க அங்கிருந்தவர்களெல்லாம் தசரதமகாராஜனைப் போலவே சோகமுற்றுப் புலம்பினார்கள். இச்செய்தி முறைமுறையாய் எங்கும் பரவ நகரத்திலுள்ளோரெல்லாம் ராஜாவையும் கைகேயியையும் தருமத்தையும் நிந்தித்துக்கொண்டே தேம்பியழ, கிளி முதலிய பறவைகளும் யானை குதிரை முதலான மிருகங்களும் அழுதன. கூனியும் கைகேசியுமே அழாதிருந்தவர். இப்படியிருக்க இச்செய்திகேட்ட லக்ஷ்மணர் மிகக் கோவங்கொண்டு கவசம்பூண்டு வாள்முதலியவற்றை வசித்துக் கட்டிக்கொண்டு அம்புப்புட்டிலையும் புறத்தில்தாங்கி கையில் வில்லிலை நாணேற்றிக்கொண்டு, தேவர்களாயினும் தயித்தியர் முதலியோராயினும் மும்மூர்த்திகளாயினும் வரட்டும் நான் யாவரையும் புறங்கொடுத்தோட விட்டு ஸ்ரீராமபிரானுக்கு முடிகவிக்க நிற்கிறேனென்று உலகம் நடுங்கும்படி அங்கேவந்தார். இராமபிரான் அவரையும் அவர் கொண்ட கோபாவேசத்தையும் பார்த்துப் புன்னகைகொண்டு "அப்பா இதேன் இத்தனை கோபம்? குற்றம் மகாராஜாமேலுமில்லை, சிற்றன்னைமேலுமில்லை; என் மேலுமில்லை. தெய்வசங்கல்பம் இப்படியிருந்தால் யார் என்னசெய்யலாம்? தந்தையை அசத்தியவாதியாக்கி ராஜ்யம்பெற எனக்கு விருப்பமில்லை. எனக்கு விருப்பமில்லாதது உனக்கு எப்படி விருப்பமாம், ஆதலின் கோபந்தணி" என்று பலநியாயங்களைச்சொல்லித் தம்பியைச் சாந்தப்படுத்தி அவனோடு சுமித்திரையின் திருமாளிகைக்குப் போனார். அங்கே இக்குமாரரிருவரும் வரக்கண்ட சுமித்திராதேவி, கரையில்லாத் துக்கக் கடலிலாழ்ந்து வீழ்ந்துபுரள, அவளையெடுத்து அவள் என்னசொன்னாலும் கேளாமல், "அம்மா இவ்வுலகம் கீழ்மேலானாலும் தந்தையைப் பொய்யனாக் காமல் வனம்போய்த்திருவேன்" என்று உறுதியாய்ச்சொன்னார். இப்படியிருக்கையில் கைகேசி அனுப்பின சேடிமார்கள் மரவுரியைக் கொண்டுவந்து நிற்க லக்ஷ்மணர், நாட்டையிழக்கச்செய்தவர் என்னசொன்னாலும் கேட்கவேண்டுவதுதான் என்றுசொல்லி அவைகளை வாங்கி இராமனுக்குங்கொடுத்துத் தானும் உடுத்திக்கொண்டு இனி நிமிஷமும் இங்கிருப்பது நியாயமல்லாமையால் நான் வனம்போய் வருவேனென்றுசொல்லிச் சுமித்திரையைப் பணிந்துநிற்க, அவள் தன் மகனைநோக்கி, குழந்தாய் இராமனிருக்குமிடமே அயோத்திநகர், அவரே உன் பிதாவாகிய மகாராஜா, சீதையே நான் ஆதலால் சுகமாய்ப் போய்வா என்று ஆசிர்வதித்து, மகனே இன்னொன்று கேள், நீ இராமனுக்குத் தம்பி என்னும்படியிராமல் ஏவலாளாயிருந்து அவன் திரும்பிவருகையில் இங்குவா, அப்படியில்லாமற்போனால் அவற்குமுன் உயிர்துறந்துவிடு என்றுசொன்னாள். இராமசந்திரன் தம்பியும் மரவுரியுடுத்துத் தன்னோடு கூடவர முயல்வதைக்கண்டு, தம்பி, நான் சொல்வதைக்கேள், கோசலை முதலான தாய்மாரையும் தந்தையையும் தேற்றிக்கொண்டு எனக்குப் பிரதிநிதியாக நீ இங்கே இருக்கவேண்டுமென்ன: அதைக் கேளாமல் அவர் கண்ணீர்விட்டழ, ஸ்ரீராமர் அவரும் கூடவரச் சம்மதித்து அவரோடுகூட முன்பு பட்டாபிஷேகத்துக்கு உரிய கோலத்தோடு யாவரும் கண்களிக்கச்சென்ற வீதிகளிலேயே மரவுரியோடு எல்லாரும் பார்த்துத் தாரைதாரையாகக் கண்களில் நீரொழுகவும் விலங்குகளும் இமையெடாமற் கதறவும் அயோத்தியாபுரி இருளீங்கினதுபோல்

காணப்படவும் நடந்துவருகையில், வசிட்டமாமுனிவர் வந்து வனஞ் செல்லாதிருக்கும்படி சில வார்த்தைகள் சொல்லக்கேளாமல் அதற்குத் தக்க நியாயங்களைச்சொல்லி மறுத்துவிட்டுச் சீதாபிராட்டி திருமனைக்குச்சென்றார். தாய்மாரும் அரசர் அந்தணர் முதலியோரும் அழுது கொண்டு கூடவர மரவுரியுடுத்து வருகின்ற தன் நாயகனைக்கண்டு மனங் கலங்கி சீதாதேவி இதென்னவென்று தன் கணவனை வினவ, அவர் நேர்ந்ததைத் தெரிவித்து, பெண்ணே நான் காட்டுக்குப்போய் வருகிறேன், நீ வருந்தாமலிரு என்றார். அதுகேட்டு அவள் இதென்ன புதுமை. என்னைப் பிரிந்துபோகவுந் துணிந்தீரோ என்ன, ராமமூர்த்தி, கல்லுமுள்ளுமிருந்து கடினமானகாட்டுக்குவர உன் திருமேனி ஒவ்வாதே; தீப்போற்காயும் வெய்யிலிலே அக்காடு மிகச்சுடுமே என்றதைக்கேட்டு சீதை, உம்மைப் பிரிவதினும் அது சுடுமோ என்றுசொல்லிச் சரேலென்று உள்ளேபோய் மரவுரியுடுத்திக்கொண்டு அவர் பக்கத்தில் வந்து அவர் கையைப்பிடித்துக் கொண்டுநின்றாள். அதுகண்டு அங்கிருந்தயாவரும் பட்டவிசனத்தை என்ன சொல்லலாம். இப்படி தம்பியும் பிராட்டியும் தானும் தந்தையிருக்குமிடஞ் சென்று அவரையும் மற்றவரையுங் கும்பிட்டுத் தொடர்ந்தயாவரையும் மெல்ல நிறுத்திவிட்டுச் சுமந்திரர்கொண்டுவந்த தேரின்மேல் ஏறிப் புறப்பட்டார் என்பதாம்.

---

இங்கே வால்மீக ராமாயணத்தோடு மாறியிருக்கின்றது. சீதை மரவுரி உடுத்திக் கொள்ளவில்லை; சுமித்திரை மாளிகையில் சேடிமார் மரவுரிகொணர்ந்ததுமில்லை; சீதையையுமிட்டுக்கொண்டு மறுபடி கைகேயிவீட்டுக்குப்போனபோது கைகேயியே நேராக மரவுரிகொடுத்தாள். சீதைக்குக்கொடுக்கவந்ததை அங்கிருந்தவர் தடுத்தார்கள். இப்படியே சிலசில பேதங்கள் அங்கங்கேயிருக்கின்றன. இதின்காரணம் தெரியாது.

---

1 என்றுகொண் டினைய கூறி யடியிணை யிறைஞ்சி மீட்டும்
தன்றுணைத் தாதை பாத மத்திசை நோக்கித் தாழ்ந்து
பொன்றிணி போதி னாளும் பூமியும் புலம்பி னையக்
குன்றினு முயர்ந்த தோளான் கோசலை கோயில் புக்கான்.

2 குழைக்கின்ற கவரி யின்றிக் கொற்றவெண் குடையு மின்றி
இழைக்கின்ற விதி முன் செல்லத் தருமம்பின் னிரங்கி யேக
மழைக்குன்ற மனையான் மௌலி கவித்தனன் வருமென் றென்று
தழைக்கின்ற வுள்ளத் தன்னாள் முன்னொரு தமியன் சென்றான்.

3 புனைந்திலன் மௌலி குஞ்சி மஞ்சனப் புனித நீரால்
நனைந்தில னென்கொ லென்னு மையத்தாள் நளின பாதம்
வனைந்தபொற் கழற்கால் வீரன் வணங்கலுங் குழைந்து வாழ்த்தி
நினைந்ததென் னிடையூ றுண்டோ நெடுமுடி புனைதற் கென்றாள்.

## வேறு.

4 மங்கை யம்மொழி கூறலு மானவன்
றெங்கை கூப்பிநின் காதற் றிருமகன்
பங்க மில்குணத் தெம்பி பரதனே
துங்க மாமுடி சூடுகின் றானென்றான்.

5 முறைமை யன்றென்ப தொன்றுண்டு மும்மையின்
நிறைகு ணத்தவ னின்னினு நல்லனால்
குறைவி லன்னெனக் கூறினள் நால்வர்க்கும்
மறுவி லன்பினில் வேற்றுமை மாற்றினாள்.

6 என்று பின்னரு மன்னவ னேவிய
தன்றெ னாமை மகனே யுனக்கறன்
நன்று நும்பிக்கு நானில நீகொடுத்
தொன்றி வாழுதி யூழி பலவென்றாள்.

7 தாயு ரைத்தசொற் கேட்டுத் தழைக்கின்ற
தூய சிந்தையத் தோமில் குணத்தினான்
நாய கன்னெனை நன்னெறி யுய்ப்பதற்
கேய துண்டோர் பணியென் றியம்பினான்.

8 ஈண்டு ரைத்த பணியென்னை யென்றவட்
காண்டொ ரேழினொ டேழகன் கானிடை
மாண்ட மாதவ ரோடுடன் வைகிப்பின்
மீண்டு நீவரல் வேண்டுமென் றானென்றான்.

9 ஆங்கவ் வாசக மென்னு மனல்குழை
தூங்கு தன்செவி யிற்றொட ராமுனம்
ஏங்கி னாளிளைத் தாடிகைத் தாண்மனம்
வீங்கி னாள்விம்மி னாள்விழுந் தாளரோ.

10 வஞ்ச மோமக னேயுனை மாநிலம்
தஞ்ச மாகநீ தாங்கென்ற வாசகம்
நஞ்ச மோவினி நானுயிர் வாழ்வெனோ
அஞ்சு மஞ்சு மென் னாருயி ரஞ்சுமால்.

11 கையைக் கையினெரிக் குந்தன் காதலன்
வைகு மாவிலை யன்ன வயிற்றினை
பெய்வளைத் தளி ராற் பிசை யும்புகை
வெய்து யிர்க்கும் விழுங்கும் புழுங்குமால்.

12 நன்று மன்னன் கருணை யெனுநகும்
நின்ற மைந்தனை நோக்கி *நெடுஞ்சுரத்
தென்று போவ தெனவெழு மின்னுயிர்
பொன்றும் போதுற்ற துற்றது போலுமே.

13 அன்பி ழைத்த மனத்தர சற்குநீ
என்பி ழைத்தனை யென்றுநின் றேங்குமால்
முன்பி ழைத்த வறுமையின் முற்றினோர்
பொன்பி ழைக்கப் பொதிந்தனர் போலவே.

14 அறமெனக் கிலையோ வென்னு மாவினைத்
திறவ டுத்ததென் றெய்வதங் காளெனும்
பிறவு ரைப்பதென் கன்று பிரிந்துழி
கறவை யொப்பக் கரைந்து கலங்கினாள்.

15 இத்தி றத்தினி டருறு வாடனைக்
கைத்த லத்தி னெடுத்தருங் கற்பினோய்
பொய்த் திறத்தின னுக்குதி யோபுகல்
மெய்த்தி றத்துநம் வேந்தனை நீயென்றான்.

16 பொற்பு றுத்தன மெய்ம்மை பொதிந்தன
சொற்பு றுத்தற் குரியன சொல்லினான்
கற்பு றுத்திய கற்புடை யாடனை
வற்பு றுத்தி மனங்கொளத் தேற்றுவான்.

17 சிறந்த தம்பி திருவுற வெந்தையை
மறந்தும் பொய்யில னாக்கி வனத்திடை
உறைந்து தீரு முறுதிபெற் றேனிற்
பிறந்து நான்பெறும் பேறென்ப தியாவதோ.

18 விண்ணு மண்ணுமிவ் வேலையு மற்றும்வே
றெண்ணும் பூதமெ லாமிறந் தேகினும்
அண்ண லேவன் மறுக்க வடியெனேற்
கொண்ணு மேவிதற் குள்ளாழி யேலென்றான்.

19 ஆகி லைய வரசன்ற னாணையால்
ஏக லென்பதி யானு முனைக்கிலேன்
சோக லாவுயிர் தாங்க வல்லேனையும்
போகி னின்னொடுங் கொண்டனை போகென்றாள்.

20 என்னை நீங்கி யிடர்க்கடல் வைகுறும்
மன்னர் மன்னனை வற்புறுத் தாதுடன்
துன்னு கானந் தொடரத் துணிவதோ
அன்னை யேயறம் பார்க்கிலை யாமென்றான்.

21 வீரிவி லெம்பியிம் மண்ணர சாயவற்
குரிமை மாநில முற்றபின் கொற்றவன்
திருவி னீங்கித் தவஞ்செயு நாளுடன்
அருமை நோன்புக ளாற்றுதி யாமன்றே.

22 சித்த நீதிகைக் கின்றதென் றேவரும்
ஒத்த மாதவஞ் செய்துயர்ந் தாரன்றே
எத்த னைக்குள வாண்டுக ளீண்டவை
பத்து நாளும் பகலல வோவென்றான்.

23 முன்னர்க் கோசிக னென்னு முனிவரன்
தன்ன ருட்டலை தாங்கிய விஞ்சையும்
பின்ன ரெய்திய பேறும் பிழைத்தவோ
இன்ன நன்றவர்க் கேயின செய்தலே.

24 மாத வர்க்கு வழிபா டிழைத்தரும்
போத முற்றிப் பொருவரு விஞ்சைகள்
ஏத மற்றன தாங்கி யிமையவர்
காதல் பெற்றனன் காவசக் காண்டியால்.

25 மகர வேலைமண் டொட்டவண் டாடுதார்ச்
சகரர் தாதை பணிதலை நின்றுதம்
புகரில் யாக்கையி னின்னுயிர் போக்கிய
நிகரின் மாப்புகழ் நின்றதன் றோவென்றான்.

26 மான்ம றிக்கரத் தான்மழு வேந்துவான்
தான்ம றுத்திலன் றாதைசொற் றாயையே
ஊன றக்குறைத் தானுர வோனருள்
யான்ம றுப்பதென் றெண்ணுவ தோவென்றான்.

27 இத்தி றத்த வெனைப்பல வாசகம்
உய்த்து ரைத்த மகனுரை யுட்கொளா
எத்தி றத்து மிறக்குமிந் நாடெனா
மெய்த்தி றத்து விளங்கிழை யுன்னுவாள்.

28 அவனி காவல் பரதன தாகுக
இவனிஞ் ஞால மிறந்திருங் கானிடைத்
தவனி லாவகை காப்பென் றகைவிலாப்
புவனி நாதற் றொழுதென்று போயினாள்.

29 போகின் றானைத் தொழுது புரவலன்
ஆக மற்றவ டன்னையு மாற்றியிச்
சோகந் தீர்ப்பவ ளென்று சுமித்திரை
மேகந் தோய்தனிக் கோயிலை மேயினான்.

30 நடந்த கோசலை கேகைய நாட்டிறை
மடந்தை கோயிலை யெய்தினள் மன்னவன்
கிடந்த பார்மிசை வீழ்ந்தனள் கெட்டுயிர்
உடைந்த போழ்தி னுடல்விழுந் தென்னவே.

வேறு.

31 பிறியார் பிறிவே தென்னும் பெரியோய் தகவோ வென்னும்
நெறியோ வடியே நிலைநீ நினையா நினைவே தென்னும்
வறியோர் தனமே யென்னுந் தமியேன் வலியே யென்னும்
அறிவோ வினையோ வென்னு மரசே யரசே யென்னும்.

32 இருளற் றிடவுற் றொளிரு மிரவிக் கெதிருந் திகிரி
உருளத் தனியுய்த் தொருகோ னடையிற் கடைகா ணுலகம்
பொருளற் றிடமுற் றுறுமப் பகலிற் புகுதற் கென்றோ
அருளக் கருதிற் றிதுவோ வரசர்க் கரசே யென்னும்.

33 திரையார் கடல்சூ ழுலகின் றவமே திருவின் றிருவே
நிரையார் கலையின் கடலே நெறியார் மறையின் னிலையே
நரையா வயர்வே னெனைநீ கருணா லயனே யெனினென்
றுரையா விதுதா னழகோ வுலகே ழுடையா யென்னும்.

34 மின்னின் றனைய மேனி வெறிதாய் விடநின் றதுபோல்
உன்னுந் தகைமைக் கடையா வுறுநோ யுறுகின் றுணரான்
இன்னென் றுரையா னென்னே யிதுதான் யாதென் றறியேன்
மன்னன் றகைமை காண வாராய் மகனே யென்னும்.

35 இவ்வா றழுவா ளிரியற் குரல்சென் றிசையா முன்னம்
ஒவ்வா தொல்லா தென்னா வொளிவா ணிருபர் முனிவர்
அவ்வா றறிவா யென்ன வந்தான் முனிவ னவனும்
வெவ்வா ளரச னிலைகண் டென்னாம் விளைவென் றுன்னா.

36 இறந்தா னல்ல னரசன் னிறவா தொழிவா னல்லன்
மறந்தா னுணர்வென் றுன்னா வன்கே கயர்கோன் மங்கை
துறந்தா டுயரந் தன்னைத் துறவா தொழிவா ளிவளே
பிறந்தார் பெயருந் தன்மை பிறரா லறிதற் கெளிதோ.

37 என்னா வுன்னா முனிவ னிடரா லழுவா டுயரம்
சொன்னா ளாகா ளெனமுன் றொழுகே கயர்கோன் மகளை
உன்னா துரையா யரச னயர்வா நிலையென் னென்னத்
தன்னா னிகழ்ந்த தன்மை தானே தெரியச் சொன்னாள்.

38 சொற்றாள் சொற்றா முன்னஞ் சுடர்வா ளரசர்க் கரசைப்
பொற்றா மரைபோற் கையாற் பொடிசூழ் படிநின் றெழுவிக்
கற்றாய யரோ லவனோ தருநின் காதற் கரசென்
றெற்றே செயலின் றொழிநீ யென்றென் றிரவா நின்றான்.

39 சீதப் பனிநீ ரளவித் திண்கா லூதவுந் தண்கால்
போதத் தளவே தவழ்வித் தின்சொற் புகலா நின்றான்
ஓதக் கடனஞ் சனையா ளுனாநஞ் சொருவா றவியக்
காதற் புதல்வன் பெயரே புகல்வா னுயிருங் கண்டான்.

40 காணு வையா வினிநீ யொழிவாய் கழிபே ரவலம்
ஆணு யகனே யினிநா டாள்வா னிடையூ றுளதோ
மாணு வுரையா டானே தருமா மழையே யனையான்
பூணு தொழிவா னெனில்யா முளமோ பொன்றே லென்றான்.

41 என்றம் முனிவன் றன்னை நினையா வினையே னினியான்
பொன்றும் மளவில் லவனைப் புனைமா மகுடம் புனைவித்
தொன்றும் வனமென் றுன்னு வண்ணஞ் செய்தென் னுரையும்
குன்றும் பழிபூ ணுமற் காவாய் கோவே யென்றான்.

42 முனியும் முனியுஞ் செய்கைக் கொடியாள் முகமே முன்னி
இனியுன் புதல்வற் கரசு மேனை யோர்க்கின் னுயிரும்
மனுவின் வழிநின் கணவற் குயிருமுதவி வசைதீர்
புனிதம் மருவும் புகழே புனையாய் பொன்னே யென்றான்.

43 மொய்ம்மாண் வினைவே றறவென் றொழிவான் மொழியா முன்
விம்மா வழுவா ளரசன் மெய்யிற் றிரிவா னென்னில் [னம்
இம்மா வுலகத் துயிரோ டினிவாழ் வுகவே னென்சொல்
பொய்ம்மா ணுமற் கின்றே பொன்று தொழியே னென்றாள்.

44 கொழுநன் றுஞ்சும் மெனவுங் கொள்ளா துலகம் மெனவும்
பழிநின் றுயரும் மெனவும் பாவம் முளதா மெனவும்
ஒழிகின் றிலையன் றியுமொன் றுணர்கின் றிலையா னினிமேல்
மொழிகின் றனவென் னென்னு முனியும் முறையன் றென்
[பான்.

45 கண்ணோ டாதே கணவ னுயிரோ டிடர்கா ணாதே
புண்ணோ டோடுங் கனலோ விடமோ வென்னைப் புகல்வாய்
பெண்ணோ தீயோ மாயாப் பேயோ கொடியாய் நீயிழ்
மண்ணோ டுன்னோ டென்னும் வசையோ வலிதே யென்றான்.

46 வாயான் மன்னன் மகனை வனமே கென்னா முன்னம்
நீயோ சொன்னா யவனே நிமிர்கா னிடைவெந் நெறியில்
போயோ புகலோ தவிரான் புகழோ டுயிரைச் சுடுவெந்
தீயோய் நின்போற் றீயா ருளரோ செயலென் னென்றான்.

47 தாவில் முனிவன் புகலத் தளரா நின்ற மன்னன்
நாவி னஞ்சம் முடைய நங்கை தன்னை நோக்கி
பாவி நீயே வெங்கான் படர்வா யென்றென் னுயிரை
ஏவி னாயோ வவனு மேகி னானோ வென்றான்.

*　　　*　　　*

48 விழிக்குங் கண்வே றில்லா வெங்கா னென்கான் முளையைச்
சுழிக்கும் வினையா லேகச் சூழ்வா யென்னைப் போழ்வாய்
பழிக்கு நாணாய் மாணாப் பாவி யினியென் பலவுன்
கழுத்தின் ஞாணுன் மகற்குக் காப்பின் ஞாணா மென்றான்.

49 இன்னே பலவும் பகர்வா னிரங்கா தாளை நோக்கிச்
சொன்னே னின்றே யிவளென் றார மல்ல டுறந்தேன்
மன்னே யாவான் வருமப் பரதன் றனையு மகனென்
றுன்னேன் முனிவா வவனு மாகா னுரிமைக் கென்றான்.

50 என்னைக் கண்டு மேகா வண்ண மிடையூ றுடையான்
உன்னைக் கண்டு மிலனே வென்றா னுயர்கோ சலையைப்
பின்னைக் கண்டா னனையான் பிரியக் கண்ட துயரம்
தன்னைக் கண்டே தவிர்வா டளர்வா னிலையிற் றளர்வான்.

51 மாற்றாள் செயலா மென்றும் கணவன் வரமீந் துள்ளம்
ஆற்றா தயர்ந்தா னென்று மறிந்தா ளவளு மவனைத்
தேற்றா நின்றாள் மகனைத் திரிவா னென்றா ளரசன்
தோற்றான் மெய்யென் றுலகஞ் சொல்லும் பழிக்குஞ் சோர்
[வாள்.

52 தள்ளா நிலைசால் மெய்ம்மை தழுவா வழுவா வகைநின்
றெள்ளா நிலைகூர் பெருமைக் கிழிவா மென்றா லுரவோய்
விள்ளா நிலைசே ரன்பால் மகன்மேல் மெலிவி னுலகம்
கொள்ளா தன்றோ வென்றாள் கணவன் குறையக் குறைவாள்.

53 போவா தொழியா னென்றாள் புதல்வன் றன்னைக் கணவன்
சாவா தொழியா னென்றென் றுள்ளந் தள்ளுற் றுயர்வாள்
காவா யென்றாள் மகனைக் கணவன் புகழுக் கழிவாள்
ஆவா வுயர்கோ சலையா மன்ன மென்னுற் றனளே.

54 உணர்வா னனையா ளுரையா லுயர்ந்தா னுரைசால் குமரன்
புணரா னிலமே வனமே போவா னையா மென்று
இணரார் தருதா ராச னிடரா லயர்வான் வினையேன்
துணைவா துணைவா வென்றான் தோன்றால் தோன்றா யென்றான்.

55 கண்ணா நீரா யுயிரு மொழுகக் கழியா நின்றேன்
எண்ணா நீர்நான் மறையோ ரெரிமு னின்மேற் சொரிய
மண்ணா நீராய் வந்த புனலை மகனே வினையேற்
குண்ணா நீரா யுதவி யுயர்கா னடைவா யென்றான்.

56 படைமா ணரசைப் பலகாற் பழுவாய் மழுவா லெறிவான்
மிடைமா வலிதா னனையான் வில்லா லடுமா வல்லாய்
உடைமா மகுடம் புனையென் றுரையா வுடனே கொடியேன்
சடைமா மகுடம் புனையத் தந்தே னந்தோ வென்றான்.

57 கறுத்தா யுருவ மனமுங் கண்ணுங் கையுஞ் செய்ய [ல்
பொறுத்தாய் பொறையே யிறைவன் புரமூன் றெரித்த போர்வி
இறுத்தாய் தமியே னென்று தென்னை யிம்மூப் பிடையே [ன்.
வெறுத்தா யினிநான் வாணாள் வேண்டேன் வேண்டே னென்று

58 பொன்னின் முன்ன மொளிரும் பொன்னே புகழின் புகழே
மின்னின் மின்னும் வரிவிற் குமரா மெய்யின் மெய்யே
என்னின் முன்னம் வனநீ யடைதற் கெளியே னல்லேன்
உன்னின் முன்னம் புகுவே னுயர்வா னகம்யா னென்றான்.

59 நெகுதற் கொத்த நெஞ்சு நேயத் தாலே யாவி
உகுதற் கொத்த வுடலு முடையே னுன்போ லல்லேன்
தகுதற் கொத்த சனகன் றையல் கையைப் பற்றிப்
புகுதற் கண்ட கண்ணாற் போகக் காணே னென்றான்.

60 எற்றே பகர்வே னினியா னென்னை யுன்னிற் பிரிய
வற்றே யுலக மெனினும் வானே வருந்தா தெனினும்
பொற்றே ராசே தமியேன் புகழே யுயிரே யுன்னைப்
பெற்றே னீருண்மை யறிவேன் பிழையென் பிழையே னென்றான்.

61 அள்ளற் பள்ளப் புனல்சூ ழகன்மா நிலமு மரசும்
கொள்ளக் குறையா நிதியின் குவையும் முதலா மெவையும்
கள்ளக் கைகே சிக்கே யுதவிப் புகழ்கைக் கொண்ட
வள்ளற் றனமென் னுயிரை மாய்க்கு மாய்க்கு மென்றான்.

62 ஒலியார் கடல்சூ ழுலகத் துயர்வா னிடைநா கரினும்
பொலியா நின்றா றுன்னைப் போல்வா ருளரோ பொன்னே
வலியா ருடையா ரென்றான் மழுவா ளுடையான் வரவும்
நலியா நிலையா யென்றாற் றவிர்வா ருளரோ வென்றான்.

63 கேட்டே யிருந்தே னெனினுங் கிளர்வா னின்றே யடைய
மாட்டே னாகி லன்றோ வன்க ணென்கண் மைந்தா
காட்டே யுறைவாய் நீயிக் கைகே சியையுங் கண்டிந்
நாட்டே யுறைவே னென்றா னன்றென் றன்மை யென்றான்.

64 மெய்யார் தவமே செய்துன் மிடன்மார் பரிதிற் பெற்ற
செய்யா ளென்னும் பொன்னும் நிலமா தென்னுந் திருவும்
உய்யா ருய்யார் கெடுவே னுன்னைப் பிரியின் வினையேன்
ஐயா கைகே சியைநே ராகே னோநா னென்றான்.

65 பூணா ரணியு முடியும் பொன்னா சனமுங் குடையும்
சேணார் மார்புந் திருவுந் தெரியக் காணத் திரிவேன்
மாணா மாவற் கலையு மானின் றோலு மவைநான்
காணா தொழிந்தே னென்றா னன்றாய்த் தன்றோ கருமம்.

66 என்றா வொன்றோன் றோவ்வா விசைதந் தாச னுயிரும்
சென்றா னின்றோ டென்னுந் தன்மை யெய்தித் தேய்ந்தான்
மென்றோள் மார்பின் முனிவன் வேந்தே யயலோ லவனை
இன்றே காத வண்ணந் தகைவே னுலகோ டென்னா.

67 முனிவன் செல்லு மளவின் முடியுங் கொல்லென் றரசன்
தனிநின் றுழல்தன் னுயிரைச் சிறிதே தகைவா னிந்தப்
புனிதன் போனா லிவனாற் போகா தொழிவா னென்னா
மனிதன் வடிவங் கொண்ட மனுவுந் தன்னை மறந்தான்.

68 மறந்தா னினைவு முயிரு மன்ன னென்னா மறுகா
இறந்தான் கொல்லோ வரச னென்னா விடருற் றழிவாள்
துறந்தாய் மகனே யுலகோ டைமையு மென்னத் துணையாம்
அறந்தா னிதுவோ வையா வரசர்க் கரசே யென்றாள்.

69 மெய்யின் மெய்யே யுலகின் வேந்தர்க் கெல்லாம் வேந்தே
உய்யும் வகைநின் னுயிரை யோம்பா திஞ்ஞான் றேம்பில்
வைய முழுதுந் துயரான் மறுகு முனிவன் னுடனம்
ஐயன் வரினும் வருமா லயரே லரசே யென்றாள்.

70 என்றென் றரசன் மெய்யு மிருதா ளிணையு முகமும்
தன்றன் செய்ய கையாற் றைவந் திடுகோ சலையை
ஒன்றுந் தெரியா மம்ம ருள்ளத் தரசன் மெள்ள
வன்றிண் சிலைநங் குரிசில் வருமே வருமே யென்றான்.

71 வன்மா யக்கை கேசி வாக்கா லென்ற னுயிரை
முன்மாய் விப்பத் துணிந்தா ளேனுங் கூனி மொழியால்
தன்மா மகனுந் தானுந் தரணி பெறுமா றன்றி
என்மா மகனைக் கானே கென்றா ளொன்றா ளென்றான்.

72 பொன்னார் தோளான் கானோ புகுதப் புகுத றவிரான்
என்னா ருயிரோ வகலா தொழியா திதுகோ சலைகேள்
முன்னா ளொருமா முனிவன் மொழியுஞ் சாப முள்தென்
றந்நா ளுற்ற தெல்லா மவளுக் கரச னறைவான்.

73 வெய்ய கானத் திடையே வேட்டை வேட்கை மிகவே
ஐய சென்று கரியோ டரிக டுருவித் திரிவேன்
கையார் சிலையுங் கணையுங் கொடுகார் மிருகம் வருமோர்
செய்ய நதியின் கரைவாய்ச் சென்றே மறைய நின்றேன்.

74 ஒருமா முனிவன் மனையோ டொளியொன் றிலவாய் நயனம்
திருமா மகனே துணையாய்த் தவமே புரிபோழ் தினின்வாய்
அருமா மகனே புனல்கொண் டகல்வான் வருமா றறியேன்
பொருமா கணைவிட் டிடலும் புவிமீ தலறிப் புரள.

75 புக்குப் பெருநீர் நுகரும் பொருபோ தகமென் றொலிமேல்
கைக்கட் கணைசென் றதனாற் கண்ணிற் றெரியக் காணேன்
அக்கைக் கரியின் குரலே யன்றீ தென்ன வெருவா
மக்கட் குரலென் றயர்வேன் மனமொந் தவன்வந் தனனால்.

76 கையுங் கடனு நெகிழக் கணையோ டுருள்வோற் காணா
மெய்யுந் தனுவு மனனும் வெறிதே கிடமேல் வீழா
ஐய நீதான் யாவ னந்தோ வருள்கென் றயராப்
பொய்யொன் றறியா மைந்தன் கேணீ யென்னப் புகல்வான்.

77 சேலா கியமா முதல்வன் றிருவுந் தியினீண் மலரின்
மேலா கியநான் முகனால் வேதங் களின்மா முறையின்
பாலா கியயோ னிகளின் பலவாம் வருணந் தருவான்
நாலா கியதாம் வருணந் தனின்முன் னெமைநல் கினனால்.

78 அந்நான் மறையோன் வழியி லருள்கா சிபனன் மைந்தன்
பின்னார் புரிநூன் மார்பன் விருத்தே சனன்மெய்ப் புதல்வன்
நன்னூன் மறைநூ றெரியு நாவான் சலபோ சனெனச்
சொன்னான் முனிவன் றருசு ரோசன னியா னென்றான்.

79 இருகண் களுமின் றியதாய் தந்தைக் குமிங் கவர்கள்
பருகும் புனல்கொண் டகல்வான் படர்ந்தேன் பழுதா யினதால்
இருகுன் றனைய புயத்தா யிபமென் றுணரா தெய்தாய்
உருகுந் துயரந் தவிர்நீ யூழின் செயலீ தென்றே.

80 உண்ணீர் வேட்கை மிகவே யுயங்கு மெந்தைக் கொருநீ
தண்ணீர் கொடுபோ யளித்தென் சாவு முரைத்தும் புதல்வன்
விண்மீ தடைவான் றொழுதா னென்வு மவர்பால்விளம்பென்
றெண்ணீர் மையினான் விண்ணோ ரெதிர்கொண் டிடவேகினனே

81 மைந்தன் வரவே நோக்கும் வளமா தவன்பால் மகவோ
டந்தண் புனல்கொண் டணுகா வையா விதுபோ தளவாய்
வந்திங் கணுகா தென்னே வந்த தென்றே நொந்தேம்
சந்தங் கமழுந் தோளாய் தழுவிக் கொளவா வெனவே.

82 ஐயா யானே ரரச னயோத்தி நகரத் துள்ளேன்
மையார் களபந் துருவி மறைந்தே வதிந்தே னிருள்வாய் [மேல்
பொய்யா வாய்மைப் புதல்வன் புனன்மொண் டிடுமோதையின்
கையார் கணைசென் றதனாற் கண்ணிற் றெரியக் காணேன்.

83 வீட்டுண் டலறுங் குரலால் வேழக் குரலன் றெனவே
ஓட்டந் தெதிரா நீயா ரெனவுற் றவெலா முனையா
வாட்டந் தருநெஞ் சினனாய் நின்றான் வணங்கா வானோர்
ஈட்ட மெதிர்வந் திடவே யிறந்தே கினன்விண் ணிடையே.

84 அறுத்தாய் கணையா லெனவே யடியேன் றன்னை யையா
கறுத்தே யருளா யானே கண்ணிற் கண்டே னல்லேன்
மறுத்தா னில்லான் வனமொண் டிடுமோ தையினெய் ததலால்
பொறுத்தே யருள்வா யென்னா விருதாள் சென்னி புனைந்தேன்.

85 வீழ்ந்தா ரயர்ந்தார் புரண்டார் விழிபோ யிற்றின் றென்றார்
ஆழ்ந்தார் துன்பக் கடலு ளையா வையா வென்றார்
போழ்ந்தாய் நெஞ்சை யென்றார் பொன்னா டதனிற் போய்நீ
வாழ்ந்தே யிருப்பத் தரியேம் வந்தேம் வந்தே மினியே.

86 என்றென் றயருந் தவரை யிருதாள் வணங்கி யானே
இன்றும் புதல்வ னினிநீ ரேவும் பணிசெய் திடுவேன்
ஒன்றுந் தளர்வுற் றயரீ ரொழிமி னிடரென் றிடலும் [தார்.
வன்றிண் சிலையாய் கேண்மோ வெனவே யொருசொல் வகுத்

87 கண்ணுண் மணிபோன் மகவை யிழந்து முயிர்கா தலியா
உண்ணு வெண்ணி யிருந்தா லுலகோ ரென்னேன் றுனையார்
விண்ணின் றலைசே ருதும்யா மெம்போல் விடலை பிரியப்
பண்ணும் பரிமா வுடையா யடைவாய் படர்வா யென்னு.

88 தாவா தொளிருங் குடையாய் தவறிங் கிதுநின் சரணம்
காவா யென்று யதனாற் கடிய சாபங் கருதேம்
ஏவா மகவைப் பிரிந்தின் றெம்போ லிடருற் றனைநீ
போவா யகல்வா னென்னாப் பொன்னாட் டிடைபோ யினரால்.

89 சிந்தை தளர்வுற் றயர்தல் சிறிது மிலனா யின்சொல்
மைந்த னுளனென் றதனான் மகிழ்வோ டிவண்வந் தனனால்
அந்த முனிசொற் றமையு மண்ணல் வனமே குதலும்
நின்ற னுயிர்வீ குதலு மிறையுந் தவறு வென்றான்.

90 இம்மா மொழிதந் தரச னிடருற் றிடுபோழ் தினிலச்
செம்மா மயில்கோ சலையுந் திகையா வுணர்வோய் வினளாய்
விம்மா நெறியின் விதியின் விளைவுந் தளர்வின் றொடர்வும்
அம்மா தவனும் விரைவோ டவலந் தருநெஞ் சினனாய்.

வேறு.

91 உணர்செய் பெருமை யுயர்தவத்தோ ரோங்கல்
புனைசெய் மதகளிற்றான் பொற்கோயின் முன்னர்
முரச முழங்க முடிசூட்ட மொய்த்தாண்
டரச ரினிதிருந்த நல்லவையி னானன்.

92 வந்த முனியை முகநோக்கி வாள்வேந்தர்
எந்தை புகுதற் கிடையூறுண் டாயதோ
அந்தமில் சோகந் தழுதகுரல் தானென்ன
சிந்தை தெளிந்தோய் தெரியெமக்கிவ் வென்றுரைத்தார்.

93 கொண்டாள் வரமிரண்டு கேகையர்கோன் கொம்பவட்குத்
தண்டாத செங்கோற் றயரதனுந் தானளித்தான்
ஒண்டார் முகிலே வனம்போகென் றொருப்படுத்தான்
எண்டானும் வேறில்லை யீதடுத்த வாறென்றான்.

94 வேந்தன் பணியினாற் கைகேசி மெய்ப்புதல்வன்
பாந்தண் மிசைக்கிடந்த பாரளிப்பா னாயினான்
ஏந்து தடந்தோ ளிராமன் றிருமடந்தை
சார்ந்த னொருமுறையே காடுறைவா னாயினான்.

95 வாரார் முலையாரு மற்றுள்ள மாந்தர்களும்
ஆராத காத லரசர்களு மந்தணரும்
போராத வாய்மைப் பெரியோ னுரைசெவியில்
சாராத முன்னந் தயரதனைப் போல்வீழ்ந்தனர்.

96 புண்ணுற்ற தீயிற் புகையுற் றுயிர்பதைப்ப
மண்ணுற் றயர்ந்து மறுகுற் றுடம்பெல்லாம்
கண்ணுற்ற வாரி கடலுற்ற தந்நிலையே
விண்ணுற்ற தெம்மருங்கும் விட்டழுத பேரோசை.

97 மாத ரருங்கலமு மங்கலமுஞ் சிந்தித்தம்
கோதை புடைபெயரக் கூற்றனைய கண்சிவப்பப்
பாத மலர்சிவப்பத் தாம்பதைத்துப் பார்சேர்ந்தார்
ஊதை யெறிய வொசிபூங் கொடியொப்பார்.

98 ஆவா வரச னருளிலனே யாமென்பார்
காவா வறத்தையினிக் கைவிடுவேம் யாமென்பார்
தாவாத மன்னர் தலைத்தலைவீழ்ந் தேங்கினார்
மாவாதஞ் சாய்த்த மராமரமே போல்கின்றார்.

99 கிள்ளையொடு பூவை யழுத கிளர்மாடத்
துள்ளுறையும் பூசை யழுத வுருவறியாப்
பிள்ளை யழுத பெரியோரை யென்சொல்ல
வள்ளல் வனம்புகுவா னென்றுரைத்த மாற்றத்தால்.

100 சேதாம்பற் போதனைய செங்கனிவாய் வெண்டளவப்
போதாம்பற் றோன்றப் புணர்முலைமேற் பூந்தாள
மாதாம்பற் றென்ன மழைக்கண்ணீ ராலியுக
நாதாம்பற் றுயபூலை நங்கைமா ரேங்கினார்.

101 ஆவு மழுதவதன் கன்றழுத வன்றலர்ந்த
பூவு மழுதபுனற் புள்ளழுத கள்ளொழுகும்
காவு மழுத களிறழுத கால்வயப்போர்
மாவு மழுதனவம் மன்னவனை மானவே.

102 ஞானியு முய்கலா னென்ஞதே நாயகனைக்
கானியு மென்றுரைத்த கைகேசி யுங்கொடிய
கூனியு மல்லாற் கொடியார் பிறருளரோ
மேனியு மின்றி வெழுநீரே யாயினர்.

103 தேரு தறிவழிந்தா ரெங்குலப்பார் தேரோட
நீருகிச் சுண்ண நிறைந்த தெருவெல்லாம்
ஆறுகி யோடின கண்ணீ ருருநெஞ்சம்
கூறுகி யோடாத வித்துணையே குற்றமே.

104 மண்செய்த பாவ முளதென்பார் மாமலர்மேற்
பெண்செய்த பாவ மதனிற் பெரிதென்பார்
புண்செய்த நெஞ்சை விதியென்பார் பூதலத்தோர்
கண்செய்த பாவங் கடலிற் பெரிதென்பார்.

105 ஆளான் பரத னரசென்பா ரய்யனினி
மீளா னமக்கு விதிகொடிது காணென்பார்
கோளாகி வந்தவா கொற்றமுடி தானென்பார்
மாளாத நம்மின் மனம்வலியா ராரென்பார்.

106 ஆதி யரச னருங்கே கயன்மகன்மேல்
காதன் முதிரக் கருத்தழிந்தா ளுமென்பார்
சீதை மணவாளன் றன்னோடுந் தீக்கானம்
போது மதுவன்றேற் புகுது மெரியென்பார்.

107 கையா னிலந்தடவிக் கண்ணீர் மெழுகுவார்
உய்யாள்போற் கோசலையென் ரேவாது வெய்துயிர்ப்பார்
அய்யா விளங்கோவே யாற்றுதியோ நீயென்பார்
நெய்யா ரழலுற்ற தற்றாரங் நீணகரார்.

108 தள்ளூறு வேறில்லை தன்மகற்குப் பார்கொள்வான்
எள்ளுறு றியகரும சேர்ந்தா ளிவ்வளென்று
கள்ளூறு செவ்வாய்க் கணிகைகாண் கைகேசி
கள்ளூறு காத லிலள்போலென் றுள்ளழிந்தார்.

109 நின்று தவமுயற்றித் தான்றீர நேர்ந்ததோ
அன்றிவ் வுலகத்து ளாருயிராய் வாழ்வானை
கொன்று களையக் குறித்த பொருளன்றோ
நன்று வரங்கொடுத்த நாயகற்கு நன்றென்பார்.

110 பெற்றுடைய மன்னவனுக் கீந்து பிறந்துலகம்
முற்றுடைய கோவைப் பிரியாது மொய்த்தீண்டி
உற்றுறைதும் யாரு முறையவே சின்னாளில்
புற்றுடைய காடெல்லா நாடாகிப் போமென்பார்.

111 என்னே நிருப ரியற்கை யிருந்தவா
தன்னே ரிலாத தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து முறைதிறம்பத் தம்பிக்குப்
பின்னே கொடுத்தாற் பிழையாதோ மெய்யென்பார்.

112 கோதை வரிவிற் குமரற் கொடுத்தநில
மாதை யொருவர் புணர்வரா வஞ்சித்த
பேதை சிறுவனைப் பின்பார்த்து நிற்குமா
சீதை பிரியினுந் தீராத் திருவென்பார்.

113 உந்தாது நெய்வார்த் துதவாது காலெறிய
நந்தா விளக்கி னடுங்குகின்ற நங்கைமார்
செந்தா மரைத்தடங்கட் செவ்வி யருணோக்கம்
அந்தோ பிரிதுமோ வாவிதியே யோவென்பார்.

வேறு.

114 கேட்டா னிளையோன் கிளர்ஞாலம் வரத்தி னாலே
மீட்டா ளளித்தாள் வனந்தம்முனின் வெம்மை முற்றித
தீட்டாத வேற்கட் சிறுதாயென யாவ ராலும்
மூட்டாத காலக் கடைத்தீ யெனமூண் டெழுந்தான்.

115 கண்ணிற் கடைத்தீ யுகநெற்றியிற் கற்றை நாற
விண்ணிற் சுடருஞ் சுடர்தோன்ற மெய்வேர் விரிப்ப
உண்ணிற்கு முயிர்ப்பெனு மூதை பிறக்க நின்ற
அண்ணற் பெரியோன் றனதாதியின் மூர்த்தி யொத்தான்.

116 சிங்கக் குருளைக் கிடுதீஞ்சுவை யூனை நாயின்
வெங்கட் கடுங்குட்டியை யூட்ட விரும்பி னாளே
நங்கைக் கறிவின்றிற நன்றிதுநன்றி தென்னாக்
கங்கைக் கிறைவன் கடுக்கை புடைத்து நக்கான்.

117 சுற்றார் மணியார் வடிவாள்புடை தோன்ற வார்த்து
விற்றாங்கி வாளிப் பெரும்புட்டில் புறத்து வீக்கிப்
பற்றார்ந்த செம்பொற் கவசம் பனிமேரு வாங்கோர்
புற்றாமென வோங்கிய தோளொடு மார்பு போர்க்க.

118 அடியிற் சுடர்பொற் கழலார்கலி நாண வார்ப்பப்
பொடியிற் றடவுஞ் சிறுநாண்பெரும் பூச லோசை
இடியிற் றொடராக் கடலேழு மடுத்திஞ் ஞாலம்
முடியிற் குமுறும் மழைமும்மையின் மேன்மு ழங்க.

119 வானுந் நிலனும் முதலீறில் வரம்பில் பூதம்
மேனின்று கீழ்காறும் விரிந்தன வீழ்வ போலத்
தானுந் தனதம்முனு மல்லது மும்மை ஞாலத்
தானும் முயிரும் முடையார்க ளுடைந் தொதுங்க.

120 புலிப்பாலை பாங்கெடப் போருவந் தோளை யெல்லாம்
அலிப்பானு மலித்தவ ராக்கையை யண்ட முற்றக்
குலிப்பானு மெனக்கொரு கோலினைக் கொற்ற மௌலி
கலிப்பானு நின்றே னிதுகாக்குநர் காமி னென்றான்.

121 விண்ணாட்டவர் மண்ணவர் விஞ்சையர் நாகர் மற்றும்
எண்ணாட்டவர் யாவரு நிற்கவோர் மூவ ராகி
மண்ணாட்டுநர் காட்டுநர் வீட்டுநர் வந்தபோதும்
பெண்ணாட்ட மொட்டே னினிப்பேருல கத்து ளென்றான்.

122 காலைக் கதிரோ னடுவுற்றதோர் வெம்மை காட்டி
ஞாலத்தவர் கோமக னந்நக ரத்து நாப்பண்
மூலைச் சிகரத் தனிமந்தர மேரு முந்தை
வேலைத் திரிகின் றதுபோற் றிரிகின்ற வேலை.

123 வேற்றுக் கொடியாள் விளைவித்த வினைக்கு விம்மித்
தேற்றத் தெளியா தயர்சிற் றவைபா விருந்தான்
ஆற்ற ற்றுணைத்தம்பிதன் விற்புய லண்ட கோளம்
கீற்றுத் துடையப் படுநாணுரு மேறு கேட்டான்.

124 வீறுக்கிய பொற்கலன் வில்விட வார மின்ன
மாறுத் தனிச்சொற் றுளிமாரி வழங்கி வந்தான்
காறுக்க நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கும்
ஆறுக் கனலாற்றுமொ ரஞ்சன மேக மென்ன.

125 மின்னொத்த சீற்றக் கனல்விட்டு விளங்க நின்ற
பொன்னொத்த மேனிப் புயலொத்த தடக்கை யானை
என்னத்த வென்னீ யிமையோரை முனிந்தி லாதாய்
சன்னத்த னாகித் தனுவேந்துதற் கேது வென்றான்.

126 மெய்யைச் சிதைவித்து நின்மெய்ம்முறை நீத்த நெஞ்ச
மையிற் கரியா ளெதிர்நின்னை நன்மௌலி சூட்டல்
செய்யக் கருதித் தடைசெய்குநர் தேவ ரேனும்
துய்யைச் சுடுவெங் கனலிற் சுடுவான் றுணிந்தேன்.

127 வலக்கார் முகமென் கையதாக வவ்வானு ளோரும்
விலக்கா ரவர்வந்து விலக்கினு மென்கை வாளிக்
கிலக்கா யெரிவித் துலகேழி னொடேழு மன்னர்
குலக்கா வலுமின் றுனக்கியான் றரக்கோடி யென்றான்.

128 இளையானிது கூற விராம னியைந்த நீதி
வளையாவரு நன்னெறி நின்னறி வாகு மன்றே
உளையாவறம் வற்றிட வூழ்வழு வுற்ற சீற்றம்
விளையாத நிலத்துனக் கெங்ஙன் விளைந்த தென்றான்.

129 நீண்டா னதுரைத்தலு நித்திலந் தோற்க நக்கு
சேண்டான் றொடர்மா நிலநின்னதென் றுன்னை செப்பப்
பூண்டாய் பகையா லிழந்தேவனம் போதி யென்றால்
யாண்டோ வடியேற் கினிச்சீற்ற மடுப்ப தென்றான்.

130 நின்கட் பரிவில்லவர் நீள்வனத் துன்னை நீக்கப்
புன்கட் பொறியாக்கை பொறுத்துயிர் போற்று கேனோ
என்கட் புலமுன் னுனக்கிந்துவைத் தில்லை யென்ற
வன்கட் புலந்தாங்கிய முன்னவன் காண்கோ லென்றான்.

131 பின்குற்ற மன்னும் பயக்கும் மாசென்றல் பேணான்
முன்கொற்ற மன்னன் முடிகொள்கெனக் கொள்ள மூண்ட
தென்குற்ற மன்றோ விகல்மன்னவன் குற்றம் யாதோ
மின்குற் றொளிரும் வெயிறீக்கொ டமைந்த வேலோய்.

132 நதியின் பிழையன்று நறும்புன லின்மை யற்றே
பதியின் பிழையன்று பயந்து நம்மைப் புரந்தாள்
மதியின் பிழையன்று மகன்பிழை யன்று மைந்த
விதியின் பிழைநீ யிதற்கென்னை வெகுண்ட தென்றான்.

133 உதிக்கு முலையு ளுறுதீயென வூதை பொங்கக்
கொதிக்கும் மனமெங்ஙன மாற்றுவென் கோளிழைத்தாள்
மதிக்கும் மதியா முதல்வானவர்க் கும்வ லீஇதாம்
விதிக்கும் விதியாகுமென் விற்றொழில் காண்டி யென்றான்.

134 ஆய்தந்தவ னவ்வுரை கூறலு மைய நின்றன்
வாய்தந்தன கூறுதி யோமறை தந்த நாவால்
நீதந்த தன்றே நெறியோர்க ணிலாத தீன்ற
தாய்தந்தை யென்று லவர்மேற் சலிக்கின்ற தென்னே.

135 நற்றா தையு நீதனி நாயக னீவயிற்றிற்
பெற்றாயு நீயே பிறரில்லை பிறர்க்கு நல்கக்
கிற்றா யிதுகா ணுதியின் றெனக்கை மறித்தான்
முற்றா மதியம் மிலைந்தான் முனிந்தானை யன்னான்.

136 வாதன் பகர்வான் வரம்பெற்றவ டானிவ் வையம்
சாதம் முடையா ளவளென்றனித் தாதை செப்பப்
பூதன் பெறுவா னினியான் படைக்கின்ற செல்வம்
விரும் பிதினல்லது வேறினி யாவ தென்றான்.

137 ஆன்றான் பகர்வான் பினுமைய விவ்வைய மையல்
தோன்று நெறிவாழ் துணைத்தம்பியைப் போர்தொ லைந்தோ
சான்றோர் புகழுந் தவத்தாதையை வாதை கொண்டோ
ஈன்றாளை வென்றோ வினியிக்கதந் தீர்வ தென்றான்.

138 சொல்லுஞ்சொல் வல்லா னெதிர்தம்பியுந் தெவ்வர் சொல்லும்
சொல்லுஞ் சுமந்தே னிருதோளெனச் சோம்பி யோங்கும்
கல்லுஞ் சுமந்தேன் கணைப்புட்டிலுங் கட்ட மைந்த
வில்லுஞ் சுமக்கப் பிறந்தேன்வெகுண் டென்னை யென்றான்.

139 நன்சொற்க டந்தாண் டெனைநாளும் வளர்த்த தாதை
தன்சொற் கடந்தெற் கரசாள்வது தக்க தன்றால்
என்சொற் கடந்தா லுனக்கியாதுள தீன மென்றான்
தென்சொற் கடந்தான் வடசொற்கலைக் கெல்லை தேர்ந்தான்.

140 சீற்றந் துறந்தா னெதிர்நின்று தெரிந்து செப்பும்
மாற்றந் துறந்தான் மறைநான்கென வாங்கல் செல்லா
நாற்றெண் டிசைவேலையி னம்பித ஞணை யாலே
ஏற்றந் தொடங்காக் கடலிற்றணி வெய்தி நின்றான்.

141 அன்னான்றனை யையனு மாதியொ டந்த மென்று
தன்னாலு மளப்பருந் தானுந்தன் பாங்கர் நின்ற
பொன்மா னுரியானுந் தழீஇ யெனப்புல்லிப் பின்னைச்
சொன்மாண் புடையன்னை சுமித்திரை கோயில் புக்கான்.

142 கண்டாள் மகனும் மகனுந் தனகண்கள் போல்வார்
தண்டா வனஞ்செல்வ தற்கே சமைந்தார்க டம்மைப்
புண்டாங்கு நெஞ்சத் தனளாய்ப் படிமேற் புரண்டாள்
உண்டாய துன்பக் கடற்கெல்லை யுணர்ந்தி லாதாள்.

143 சோர்வாளை யோடித் தொழுதேந்தினன் றுன்ப மென்னும்
ஈர்வாளை வாங்க மீனந்தேற்றுதற் கேற்ற செய்வான்
போர்வா ளரசர்க் கிறைபொய்த்தன னுக்க இல்லென்
கார்வா னெடுங்கா னிறைகண்டிநன் மீள்வ னென்றான்.

144 கான்புக் கிடினுங் கடல்புக் கிடினுங் கலிப்பேர்
வான்புக் கிடினு மெனக்கன்னவை மாண யோத்தி
யான்புக்க தொக்கு மெனையார் நலிகிற்கு மீட்டார்
ஊன்புக் குயிர்புக் குணர்புக் குலையற்க வென்றான்.

145 தாயாற்று கிலாடனை யாற்றுகின் றூர்க டம்பால்
தீயாற்று கிலார்தனிச் சிந்தையி னின்று செற்ற
நோயாற்ற கில்லா வுயிர்போல நடங்கி டையார்
மாயாப் பழியா டாவற்கலை யேந்தி வந்தார்.

146 கார்வான மொப்பான் றனைக்காண் டொறுங்காண் டொறும்
நீராயுகக் கண்ணினு நெஞ்சழி கின்ற நீரார் [போய்
போரா விடர்பட் டயலாருறு பீழை கண்டும்
தீரா மனத்தா டாவந்தன சீர மென்றார்.

147 வாணித்தில வெண்ணகை யார்தர வள்ள நம்பி
யாணர்த் திருநா டிழப்பித்தவ ரீந்த வெல்லாம்
பூணப் பிறந்தானு நின்று னவைபோர்வி லோடும்
காணப் பிறந்தேனு நின்றேனவை காட்டு மென்றான்.

148 அன்னு னவர்தந்தன வாதரத் தோடு மேந்த
இன்னு விடர்தீர்ந் துடனே கெனவெம் பிராட்டி
சொன்னு லதுவே துணையா மெனத் தூயநங்கை
பொன்னு ரடிமேற் பணிந்தா னவளும் புகன்றாள்.

149 ஆகா ததன்று லுனக்கவ் வனமிவ் வயோத்தி
மாகாத விராம னம்மன்னவன் வைய மீந்தும்
போகாவுயிர்த் தாயர்நம் பூங்குழற் சீதையென்றே
ஏகா யினியிவ் வயினிற்றலு மேத மென்றாள்.

150 பின்னும் பகர்வாண் மகனே யிவன் பின்செறம்பி
என்னும் படியன் றடியாரினி லேவல் செய்தி
மூன்னுங் நகர்க்கே யிவன்வந் திடின்வா வதன்றேல்
முன்னம் முடியென்றனள் பான்முலை சோர நின்றாள்.

## வேறு.

151 இருவருந் தொழுதன ரிரண்டு கன்றெரீஇ
வெருவரு மாவினிற் றாயும் விம்பினள்
பொருவருங் குமரரும் போயி னார்புறம்
தருவனைத் துகிலொரீஇச் சீரை சாத்தியே.

152 தான்புனை சீரையைத் தம்பி சாத்திடத்
தேன்புனை தெரியலான் செய்கை நோக்கினான்
வான்புனை யிசையினாய் மறுக்கி லாதுநீ
யான்புகல் வனையதோ ருறுதி கேளென.

153 அன்னைய ரனைவரு மாழி வேந்தனும்
முன்னைய ரல்லர்வெந் துயரின் மூழ்கினார்
என்னையும் பிரிந்தன ரிடரு றுவகை
உன்னைநீ யென்பொருட் டுதவுவா யென்றான்.

154 ஆண்டகை யம்மொழி பகர வன்பனும்
தூண்டரு திரள்புயந் துளங்கத் துண்ணென
மீண்டதோ ருயிரிடை விம்ம விம்முவான்
ஈண்டெனக் கடியனேன் பிழைத்த தியாதென்றான்.

155 நீருள வெனினுள மீனு நீலமும்
பாருள வெனினுள யாவும் பார்ப்புறில்
நாருள தனுவுளாய் நானுஞ் சீதையும்
ஆருள ரெனினுளெ மருளு வாயென்றான்.

156 பைந்தொடி யொருத்திசொற் கொண்டு பார்மகள்
நைந்துயிர் நடுங்கவு நடத்திக் கானென
உய்ந்தன னிருந்தன னுண்மை காவலன்
மைந்தனென் றினையசொல் வழங்கி னையென.

157 மாறினி யென்னைநீ வனங்கொள் வாயென
ஏறின வெகுளியை யாது மூற்றுற
ஆறினை தவிர்கென வைய வானையில்
கூறிய மொழியினுங் கொடிய தாமென்றான்.

158 செய்துடை செல்வமோ யாதுந் தீர்ந்தெமை
கைதுடைத் தேகவுங் கடவை யோவையா
நெய்துடைத் தடையலர் நேய மாதர்கண்
மைதுடைத் துறைபுகும் வயங்கொள் வேலினாய்.

159. உரைத்தபின் னிராமனென் றுரைக்க நேர்ந்திலன்
வரைத்தடந் தோளினான் வதன நோக்கினான்
விரைத்தடந் தாமரைக் கண்ணின் மிக்கநீர்
நிரைத்திடை யிடைவிழ நெடிது நிற்கின்றான்.

160 அவ்வையி னரசவை நின்று மன்பினன்
எவ்வழி லிருந்தவ முனிவ னெய்தினான்
செவ்விய குமாருஞ் சென்னி தாழ்ந்தனர்
கௌவையம் பெருங்கடன் முனியுங் கால்வைத்தான்.

161 அன்னவர் முகத்தினோ டகத்தை நோக்கினான்
பொன்னரைச் சீரையின் பொலிவு நோக்கினான்
என்னினி யுணர்த்துவ தெடுத்த துன்பத்தால்
தன்னையு முணர்ந்தில னுணருந் தன்மையான்.

162 வாழ்வினை நுதலிய மங்கலத் துநாள்
தாழ்வினை யதுவாச் சீரை சாத்தினான்
சூழ்வினை நான்முகத் தொருவர்ச் சூழினும்
ஊழ்வினை யொருவரா லொழிக்கற் பாலதோ.

163 வெவ்வினை யவடர விளைந்த தேயுமன்
றிவ்வினை யிவன்வயி னெய்தற் பாற்றுமன்
றெவ்வினை நிகழ்ந்ததோ வேவ ரெண்ணமோ
செவ்விதி னொருமுறை தெரியும் பின்னென்றான்.

164 விற்றடந் தாமரைச் செங்கண் வீரனை
உற்றடைந் தையநீ யொருவி யோங்கிய
கற்றடங் கானுதி யென்னிற் கண்ணகன்
மற்றடந் தானையான் வாழ்கிலா னென்றான்.

165 அன்னவன் பணிதலை யேந்தி யாற்றுதல்
என்னது கடனவ னிடரை நீக்குதல்
நின்னது கடனிது நெறியு மென்றனன்
பன்னகப் பாயலுட் பள்ளி நீங்கினான்.

166 வெவ்வரம் பயில்சுரம் விரவென் றானலன்
தெவ்வரம் பணியசொற் றீட்டி னாடனக்
கவ்வரம் பொருதவே லரச னாய்கிலா
திவ்வரந் தருவெனென் றென்ற துண்டென்றான்.

167 என்றன னெந்தையிவ் வரங்க ளேவினாள்
ஈன்றவள் யானது சென்னி யேந்தினேன்
சான்றென நின்றநீ தடுத்தியோ வென்றான்
தோன்றிய நல்லற நிறுத்தத் தோன்றினான்.

168 என்றபின் முனிவனொன் றியம்ப நேர்ந்திலன்
நின்றன னெடுங்கணீர் நிலத்துற நீர்த்துச
குன்றன தோளவன் றொழுது கொற்றவன்
பொன்றிணி நெடுமதில் வாயில் போயினான்.

169 சுற்றிய சீரையன் றொடர்ந்த தம்பியன்
முற்றிய வுவகையன் முளரிப் போதினும்
குற்றமின் முகத்தினன் கொள்கை கண்டவர்
உற்றதை யொருவகை யுணர்த்து வாமரோ.

170 அந்தண ரருந்தவ ரவனி காவலர்
நந்தலி னகருளார் நாட்டு ளார்கடம்
சிந்தையென் புகல்வது தேவ ருள்ளமும்
வெந்தனர் மேல்வரு முறுதி வேண்டலார்.

171 ஐயனைக் காண்டலு மணங்க னார்கடாம்
மொய்யிளந் தளிர்களான் முளரி மேல்விழும்
மையுலின் மதுகரங் கடியு மாறெனக்
கைகளின் மதர்நெடுங் கண்க ளெற்றினார்.

172 தம்மையு முணர்ந்திலர் தணிப்பி லன்பினால்
அம்மையி னிருவினை யகற்றவோ வன்றேல்
விம்மிய பேருயிர் மீண்டி லாமைகொல்
செம்மறன் றுஞ்சயிற் சிலவர் முந்தினார்.

173. விழுந்தனர் சிலர்சிலர் விம்மி விம்மிமேல்
எழுந்தனர் சிலர்முகத் திழிகண் ணீரிடை
அழுந்தினர் சிலர்பதைத் தளக வல்லியின்
கொழுந்தெரி யுற்றெனத் துயரங் கூர்கின்றார்.

174 கரும்பன மொழியினர் கண்ப னிக்கிலர்
வரம்பறு துயரினான் மயங்கி யேகொலாம்
இரும்பன மனத்தின ரென்ன நின்றனர்
பெரும்பொரு ளிழந்தவர் போலும் பெற்றியார்.

175 செக்கன வுடலுயிர் நிலையி னின்றில
இக்கண மிக்கண மென்னுந் தன்மையும்
புக்கன புறத்தன புண்ணிற் கண்மலர்
உக்கன நீர்வறந் துதிர வாரியே.

176 இருகையிற் கரிநிக ரெண்ணி றந்தவர்
பெருகையிற் பெயர்த்தனர் தலையைப் பேணலர்
ஒருகையிற் கொண்டன ருருட்டு கின்றனர்
சுரிகையிற் கண்மலர் சூன்று நீக்கினார்.

177 சிந்தின வணிமணி சிதறி வீழ்ந்தன
பைந்துணர் மாலையிற் பரிந்த மேகலை
நந்தினர் நகையொளி விளக்க நங்கைமார்
சுந்தர வதனமு மதிக்குத் தோற்றவே.

178 அறுபதி னாயிர ராசன் றேவியர்
மறுவறு கற்பினர் மழைக்க ணீரினர்
சிறுவனைத் தொடர்ந்தனர் திறந்த வாயினர்
எறிதிரைக் கடலென விரங்கி யேங்கினார்.

179 கன்னிநன் மயில்களுங் குயிற்க ணங்களும்
அன்னமுஞ் சிறையிழந் தவனி சேர்ந்தன
என்னவீழ்ந் தழுந்தன ரிராம னல்லது
மன்னுயிர்ப் புதல்வரை மற்றும் பெற்றிலார்.

180 கிளையிலு நரம்பினு நிரம்புங் கேழன
அளவிறந் துயிர்க்கவிட் டாற்றுந் தன்மையால்
துளைபடு குழலினோ டியாழ்க்குத் தோற்றன
இளையவ ரமுதினு மினிய சொற்களே.

181 புகலிடங் கொடுவனம் போலு மென்றுதம்
மகன்வயி னிரங்குறு மகளிர் வாய்களால்
அகன்மதி னெடுமனை யாத்த வாம்பல்கள்
பகலிடை மலர்ந்ததோர் பழனம் போன்றவே.

*  *  *

182 தண்டலைக் கோசலைத் தலைவன் மாதரைக்
கண்டன னிரவியுங் கமல வாண்முகம்
விண்டலத் துறையுநல் வேந்தற் காயினும்
உண்டிட ருற்றபோ தென்னு றுதன.

183 தாயருங் கிளைஞருஞ் சார்ந்து ளார்களும்
சேயரு மணியருஞ் சிறந்த மாதரும்
காயெரி யுற்றன ரனைய கவ்வையர்
வாயிலு முன்றிலு மறைய மொய்த்தனர்.

184 இரைத்தன ரிரைத்தெழுந் தேங்கி யெங்கணும்
திரைப்பெருங் கடலெனத் தொடர்ந்து பின்செல
உரைப்பதை யுணர்கில னொழிப்ப தோர்கிலன்
வரைப்புயத் தண்ணறன் மனையை நோக்கினான்.

185 நன்னெடு நனிர்முடி சூட நன்மணிப்
பொன்னெடுந் தேரொடும் பவனி போனவன்
துன்னெடுஞ் சிறையுஞ் சுற்றி மீண்டுமப்
பொன்னெடுந் தெருவிடைப் போதல் மேயினான்.

186 அஞ்சன மேனியிவ் வழகற் கெய்திய
வஞ்சனை கண்டபின் வகிர்ந்து நீங்கலா
நெஞ்சினும் வலிதுயிர் நினைப்ப தென்சில
நஞ்சினும் வலியநந் நலமென் றார்சிலர்.

187 மண்கொடு வருமென வழியிருந் ததியாம்
எண்கொடு சுடர்வனத் தெய்தல் காணவோ
பெண்கொடு வினைசெயப் பெற்ற நாட்டினிற்
கண்கொடு பிறத்தலுங் கடையென் றார்சிலர்.

188 முழுவதே பிறந்துல் குடைய மொய்ம்பினோன்
உழுவைசேர் கானகத் துறைவென் யானென
எழுவதே யெழுதல்கண் டிருப்பதே யிருந்
தழுவதே யழுகிதிவ் வன்பென் றார்சிலர்.

189 வலங்கடிந் தேழைய ராய மன்னனை
நலங்கடிந் தறங்கெட நயக்க லீர்கணும்
குலங்கடிந் தான்வலி கொண்ட கொண்டலை
நிலங்கடிந் தாளொடு நிகரென் றார்சிலர்.

190 திருவரை சுற்றிய சீரை யாடையன்
பொருவருந் துயரினன் றொடர்ந்து போகின்றான்
இருவரைப் பயந்தவ ளீன்ற கான்முளை
ஒருவனோ விவற்கிவ்வூ றுறவென் றார்சிலர்.

191 முழுக்கலின் வலியநம் மூரி நெஞ்சினை
மழுக்கனிற் பிளத்துமென் றோடு வார்வழி
ஒழுக்கிய கண்ணினிற் கலுழி யூற்றிடை
இழுக்கலில் வழுக்கிவீழ்ந் திடருற் றார்சிலர்.

192 பொன்னணி மணியணி மெய்யிற் போக்கினர்
மின்னெனு மின்னென விளங்கு மெய்விலைப்
பன்னிறத் துகிலினைப் பறித்து நீக்கினர்
இன்னதுண் டுகிலினைப் புனைகின் றார்சிலர்.

193 நிறைமக வுடையவர் நெறிசெ லேம்பொறி
குறைமக குறையினுங் கொடுப்ப ராமுயிர்
முறைமகன் வனம்புக மொழியைக் காக்கின்ற
இறைமகன் றிருமனை யிரும்பென் "றூர்சிலர்.

*   *   *

194 மஞ்செனு வகிற்புகை வழங்கு மாளிகை
எஞ்சலில் சாளரத் திரங்கு மின்சொலார்
அஞ்சனக் கண்ணினீ ரருவி சோர்தரப்
பஞ்சரத் திருந்தழுங் கிளியிற் பன்னினார்.

195 நன்னெடுங் கண்களி னுன்ற நீர்த்துளி
தன்னெடுந் தாரைக டளத்தின் வீழ்தலால்
மன்னெடுங் குமரன்மாட் டழுங்கி மாடமும்
பொன்னெடுங் கண்குழித் தழுவ போன்றவே.

196 மக்களை மறந்தனர் மாதர் தாயரைப்
புக்கிட மறிந்திலர் புதல்வர் பூசலிட்
டுக்கன ருயங்கின ருருகிச் சோர்ந்தனர்
துக்கநின் றறிவினைச் சூறை யாடவே.

197 காமரங் கனிந்தெனக் கனிந்த மென்மொழி
மாமடந் தையரெலா மறுகு சேர்தலால்
தேமரு நறுங்குழற் றிருவி னீங்கிய
தாமரை யொத்தன தவள மாடமே.

198 மழைக்குலம் புரைகுழல் விரிந்து மண்ணுறக்
குழைக்குல முகத்தியர் குழாங்கொண் டேங்கினர்
இழைக்குலஞ் சிதறிட வேவுண் டோய்வுறு
உழைக்குல முழைப்பன வொத்தொர் பாலெலாம்.

199 கொடியடங் கினமணிக் குன்றங் கோபுர
சிடியடங் கினமுழக் கிழந்த பல்லியம்
படியடங் கலுகியர் பசுங்கண் மாரியால்
பொடியடங் கினமதிற் புறத்து வீதியே.

200 அட்டிலு மிழந்தன புகை யகிற்புகை
கெட்டிலு மிழந்தன நிறைந்த பால்கிளி
வட்டிலு மிழந்தன மகளிர் கான்மணித்
தொட்டிலு மிழந்தன மகவுஞ் சோரவே.

201 ஒளிதுறந் தனமுக முயிர் துறந்தென
துளிதுறந் தனமுகிற் றொகையுந் தூயநீர்த்
தளிதுறந் தனபரி தான யானையும்
களிதுறந் தனமலர்க் கள்ளுண் வண்டினே.

202 நிழற்பிரிந் தனகுடை நெடுங்க ணேழையர்
குழற்பிரிந் தனமலர் குமரர் தாளிணை
கழற்பிரிந் தனசினக் காமன் வாளியும்
அழற்பிரிந் தனதுணை பிரிந்த வன்றிலே.

203 தாரொலி நீத்தன புரவி தண்ணுமை
வாரொலி நீத்தன மழையின் விம்முறும்
தேரொலி நீத்தன தெருவுந் தெண்டிரை
நீரொலி நீத்தன நீத்தம் போலவே.

204 முழவெழு மொலியில முறையின் யாழ்நரம்
பெழவெழு மொலியில விமைப்பில் கண்ணினர்
விழவெழு மொலியில வேறு மொன்றில
அழவெழு மொலியில வரச வீதியே.

205 தெள்ளொலிச் சிலம்புகள் சிலம்பு பொன்மனை
நள்ளொலித் திலநளிர்க் கலையு மன்னவே
புள்ளொலித் திலபுனல் பொழிலு மன்னவே
கள்ளொலித் திலமலர் களிறு மன்னவே.

206 செய்மறந் தனபுனல் சிவந்த வாய்ச்சியர்
ஐம்மறந் தனபசுங் குழவி சீர்ந்தெரி
நெய்மறந் தனநெறி யறிஞர் யாவரும்
மெய்ம்மறந் தனரொலி மறந்த வேதமே;

207 ஆடின ரழுதன ரமுத வேழிசை
பாடின ரழுதனர் பரிந்த கோதையர்
ஊடின ரழுதன ருயிரி னன்பரைக்
கூடின ரழுதனர் குழாங் குழாங்கொடே.

208 நீட்டில களிறுகை நீரின் வாய்புதல்
பூட்டில புரவிகள் புள்ளும் பார்ப்பினுக்
கீட்டில விரைபுனிற் றீன்ற கன்றையும்
ஊட்டில கறவைகன் றுருகிச் சோர்ந்தவே.'

* * *

வேறு.

209 ஓடை நல்லணி முனிந்தன வுயர்க ளிறுச்சி
சூடை நல்லணி முனிந்தன தொடர்மனை கொடியின்
ஆடை நல்லணி முனிந்தன வம்பொன் செயிஞ்சி
பேடை நல்லணி முனிந்தன மென்னடைப் பிறவம்.

210 திக்கு நோக்கிய தீவினைப் பயனெனச் சிந்தை
நெக்கு நோக்குவோர் நல்வினைப் பயனென நேர்வோர்
பக்க நோக்கலென் பருவர லின்பமென் றிரண்டும்
ஒக்க நோக்கிய யோகரு மருந்துய ருழந்தார்.

211 ஓவி னல்லுயி ருயிர்ப்பினோ டுடல்பதைத் துலைய
மேவி நல்லழ கெழில்கெட விம்மலோய் விம்ம
தாவி லைம்பொறி மறுகுறத் தயரத னென்ன
ஆவி நீக்கின்ற தொத்ததவ் வயோத்திமா நகரம்.

212 உயங்கி யங்கக ருலைவுற வொருங்குழை சுற்ற
மயங்கி யேங்கினர் வயின்வயின் வரம்பிலர் தொடர
இயங்கு பல்லுயிர்க் கோருயி ரெனநின்ற விராமன்
தயங்கு பூண்முலைச் சானகி யிருந்துழிச் சார்ந்தான்.

213 அழுது தாயரோ டருந்தவ ரந்தண ரரசர்
புழுதி யாடிய மெய்யினர் புடைவந்து பொரும
பழுது சிலையி னுடையினன் வரும்படி பார
எழுது பாவையன் னாள்மனத் துணுக்கமொ டெழுந்தாள்.

214 எழுந்த நங்கையை மாமியர் தழுவின ரேங்கிப்
பொழிந்த வுண்கணீர்ப் புதுப்புன லாட்டினர் புலம்ப
அழிந்த சிந்தைய ளன்னமி தின்னதென் றறியாள்
வழிந்த நீர்நெடுங் கண்ணினள் வள்ளலை நோக்கி.

வேறு.

215 பொன்னை யுற்ற பொலன்கழ லோய்புகழ்
மன்னை யுற்றதுண் டோமற்றிவ் வன்றுயர்
என்னை யுற்ற தியம்பென் றியம்பினாள்
மின்னை யுற்ற நடுக்கத்து மேனியாள்.

216 பொருவி லெம்பி புவிபுரப் பான்புகல்
இருவ ராணையு மேந்தினெ னின்றுபோய்
கருவி மாமழைக் கற்கடங் கண்டுநான்
வருவெ னீண்டு வருந்தலை நீயென்றான்.

217 நாய கன்வன நண்ணலுற் றானென்றும்
மேய மண்ணிழந் தானென்றும் விம்மலள்
நீவ ருந்தலை நீங்குவென் யானென்ற
தீய வெஞ்சொல் செவிசுடத் தேம்புவாள்.

218 துறந்து போமெனச் சொற்றசொற் றேறுமோ
உறைந்த பாற்கடற் சேக்கை யுடனொரீஇ
அறந்தி றம்புமென் றய்ய னயோத்தியில்
பிறந்த பின்பும் பிரிவில ளாயினாள்.

219 அன்ன தன்மைய ளய்யனு மன்னையும்
சொன்ன செய்யத் துணிந்தது தூயதே
என்னை யென்னை யிருத்தியென் றானென
உன்ன வுன்ன வுயிருமி ழாநின்றாள்.

220 வல்ல ரக்கரின் மால்வரை போய்விழுந்
தல்ல ரக்கி னுருக்கழல் காட்டியற்
கல்ல ரக்கும் கடுமைய வல்லநின்
இல்ல ரக்குண்ட சேவடிப் போதென்றான்.

221 பரிவி கந்த மனத்தொடு பற்றிலா
தொருவு மின்றனை யூழி யருக்கனும்
எரியு மென்பதி யாண்டைய தீண்டுநின்
பிரிவி னுஞ்சுடு மோபெருங் காடென்றாள்.

222 அண்ண லன்னசொற் கேட்டன னன்றியும்
உண்ணி வர்ந்த கருத்து முணர்ந்தனன்
கண்ணி னீர்க்கடல் கைவிட நேர்கிலன்
எண்ணு கின்றன னென்செயற் பாற்றெனா.

223 அனைய வேலை யகன்மனை யெய்தினள்
புனையுஞ் சீரந் துணிந்து புனைந்தனள்
நினைவில் வள்ளல்பின் வந்தய னின்றனள்
பனையி னீள்கரம் பற்றிய கையினாள்.

224 ஏழை தன்செயல் கண்டவர் யாவரும்
வீழு மண்ணிடை வீழ்ந்தனர் வீய்ந்திலர்
வாழு நாளுள வென்றபின் மாள்வரோ
ஊழி பேரினு முய்குந ருய்வரே.

225 தாயர் தவ்வையர் தன்றுணைச் சேடியர்
ஆய மன்னிய வன்பின ரென்றிவர்
தீயின் மூழ்கின ரொத்தனர் செங்கணான்
தூய தையலை நோக்கினன் சொல்லுவான்.

226 முல்லை யுங்கடன் முத்து மெதிர்ப்பினும்
வெல்லும் வெண்ணகை யாய்வினை யுன்னுவாய்
அல்லை போதவ மைந்தனை யாதலின்
எல்லை யற்ற விடர்தரு வாயென்றான்.

227 கொற்ற வன்னது கூறலுங் கோகிலம்
செற்ற தன்ன குதலையள் சீறுவாள்
உற்று நின்ற துயரமி தொன்றுமே
எற்று றந்தபி னின்பங் கொலா மென்றாள்.

228 பிறிதொர் மாற்றம் பெருந்தகை பேசலன்
மறுகி வீழ்ந்தழு மைந்தரு மாதரும்
செறுவில் வீழ்ந்த நெடுந்தெருச் சென்றனன்
நெறிமெ றாமை யரிதினி னீங்குவான்.

229 சீரை சுற்றித் திருமகள் பின்செல
மூரி விற்கை யிளையவன் முன்செல
காரை யொத்தவன் போம்படி கண்டவவ்
வூரை யுற்ற துணர்த்தவு மொண்ணுமோ.

230 ஆரும் பின்ன ரழுத வலித்திலர்
சோருஞ் சிந்தையர் யாவருஞ் சூழ்ந்தனர்
வீரன் முன்வன மேவுதும் யாமெனாப்
போரென் றொல்லொலி கைமிகப் போயினார்.

231 தாதை வாயில் குறுகினன் சார்தலும்
கோதை வேலவன் றாயைக் கும்பிடா
ஆதி மன்னனை யாற்றுமி னீரென்றான்
மாத ராரும் விழுந்து மயங்கினார்.

232 ஏத்தி னார்த மகனை மருகியை
வாழ்த்தி னாரிளை யோனை வழுத்தினார்
காத்து நல்குமின் றெய்வதங் காளென்றார்
நாத்த ழும்ப வாற்றி நடுங்குவார்.

233 அன்ன தாய ரரிதிற் பிரிந்தபின்
முன்னர் நின்ற முனிவனைக் கைதொழா
தன்ன தாருயிர்த் தம்பியுந் தாமரைப்
பொன்னுந் தானுமொர் தேர்மிசைப் போயினான்.

4-வது. நகர்நீங்குபடலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 238-ல் 233.



# 5-வது. தைல மாட்டுப்படலம்.

தசரதமகாராஜனை எண்ணெய்க்கடாரீத்துள் அமிழ்த்திவைத்த கதையைச் சொல்லுதலால் இப்படலத்துக்கு தைல மாட்டுப்படலம். எனப் பெயரிடப்பட்டது. இதை தைலம் ஆட்டு என்றும் தைலம் மாட்டு என்றும் பிரிக்கலாமானதைப்பற்றி, இதனை முதலில் அச்சிட்ட திருவேங்கடாசலமுதலியாரும் தைலம் மாட்டுப் படலம் என்றிருப்பதே சரி என்று பிழை திருத்தத்தில் காட்டியிருக்கின்றனர். நீர் ஆட்டினார் அவர் என்பது உயிரோடிருப்பவர்க்கேயன்றி இறந்தவர்க்கு வழங்குவது தகுதியல்லவென்று நினைத்தார்போலும்; எமக்கோ தைலம் ஆட்டு என்றிருக்கலாமெனத் தோன்றுகிறது. ஏனெனில் விலங்கில் மாட்டினான் தொழுவில் மாட்டினான் என்னும் பிரயோகங்கள் கடினமான பொருளில் சேர்ப்பதற்கு வருகின்றனவேயன்றி நீரில் மாட்டினான் என்று வாராமையானும்—இறந்த பெரியோர்களுடம்பைத் திருமஞ்சனமாட்டினார்கள் என்று வழங்குவதினாலும் ஆட்டுதல் முழுகுவித்தல் என்பதுகொண்டு அமிழ்த்தற்பொருளுக்கு இசையுமென்பதனாலெனவறிக.

இப்படலத்தின் கதையாவது:

தேர்மேற்சென்ற ஸ்ரீராமர், கங்கைக்கரையில் சூரியாஸ்தமயமானதால் அங்கோர் சோலையில் இறங்கி ஓரிடத்தில் படுத்திருக்க, கூடவந்த நகரத்தாரும் போஜனசுக முதலானவைவிட்டு அங்கங்கே படுத்து அயர்ந்து நித்திரை செய்தனர். அத்தருணத்தில் ராமபிரான் சுமந்திரனை விளித்து, சுமந்திரரே; என்னைத் தொடர்ந்துவந்த நகரத்தார் அன்பினால் என்னைவிட்டுப் பிரியார்கள் ஆதலால் நீர் ஒன்று செய்யவேண்டுகிறேன்; அதாவது இப்போதே அரவமின்றி நீர் தேரை அயோத்திக்குச் செலுத்திக்கொண்டு போகவேண்டும். அப்படியானால் அவர்கள் விழித்தபின் சக்கரஞ்சென்ற சுவடு அயோத்தியை நோக்கியிருப்பதனால் நான் அயோத்திக்குப் போனேனென்று எண்ணி மீண்டு அங்கே செல்வார்கள். என்னுடைய வனயாத்திரைக்கு இடையூறிராது என்றனர். அதுகேட்டுச் சுமந்திரர், கண்ணீர்வடிய, சுவாமி; அடியேன் அயோத்திக்குச் சென்றால் மகாராஜா மகனைக் கொணர்ந்தையா என வினவுவரே, அதற்கு அடியேன், இல்லை காட்டில் விட்டுவந்தேன் என்று நெருப்பினுந் தீதாக எமன்போல் மறமொழி சொன்னேனாகில் உடனே அவர் உயிர்விடுவாரே; அதனால் அடியேன் கைகேயினுங் கொடியனல்லோ ஆகுவேன் என்று தரையில் வீழ்ந்து மூர்ச்சையடைந்தார். அவரை ஸ்ரீராமர் தூக்கி எடுத்து சில நீதிமொழிகளால் தேற்றி, தந்தைதாய் முதலானோருக்குத் தாம் வந்தனைசெய்ததாய்ச் சொல்லும்படி பணித்தருளினார். பிராட்டியும் அப்படியே சொல்லி, தான் வளர்த்துவந்த பூவையையும் கிளியையும் பரிபாலித்துவரும்படி தன் தங்கைமாருக்குச் சொல்லச்சொன்னாள். அதுகேட்டு சுமந்திரர் பிராட்டியின் பேதைமைத் துயரத்துக்கு மிகவும் விசனப்பட்டார். இளையபெருமாள், முதலில் இராமருக்கு முடிசூட்டுவேனென்று சொல்லிப் பின் ஒரு பெண்பிள்ளைக்கு அரசைக் கொடுத்த

சத்தியவானை அரசனென்றும் சொல்லலாமோ என்று நிந்தித்ததைக்குறித்து ராமமூர்த்தி கோபிக்க, அவரும் தணிந்து பணிந்தபின் சுமந்திரனை அனுப்பிவிட்டுத் தாம் தம்பியோடும் மனையாளோடும் காட்டிற்சென்றார். அப்படியே வெறுந்தேரோடு முகம்வாடி அயோத்திக்குப்போன சுமந்திரனை அரசன், அப்பா சுமந்திரா, ராமன் எங்கே என்ன; அச்சுமந்திரர் கண்ணீர்பெருக வாய்குழறக் காட்டுக்குச்சென்றார் என்று சொன்னவுடனே தசரதமகாராஜா உயிர்நீங்கினர். அப்போது தேவர் திவ்விய விமானத்தில் அவனை ஏற்றி வைகுண்டத்தில் செலுத்தினார்கள். அரசன் இறந்ததை அறிந்து கோசலாதேவி தரையில்வீழ்ந்து பலவகையிற் பன்னி அழுதரற்ற, அந்தப்புரத்துள்ள மற்றப் பெருமாட்டிகளும் வந்து அழப் பெருங்கோஷமுண்டாயிற்று. அப்போது வசிட்டமாமுனிவர் மகாராஜாவுக்குச் சரமக்கிரியைக்கு உரியார் யாருமிங்கில்லையே ஆதலால் அவர் வருமளவும் இவ்வுடம்பைக் கெடாதிருக்கும்பொருட்டு எண்ணெய்க்கடாரத்திற் போடுவித்து, அங்கு நடத்தவேண்டிய ராஜ்யகாரியத்துக்காகச் சுமந்திரனைப் பார்த்துக் கொள்ளும்படி நியமித்துப் பின்பு பரதனை அழைத்துவரும்படித் தூதரைக் கேகயராஜன் நகரத்துக்கு அனுப்ப, அவர்களும் மிக்க விரைவில் அங்குச் சென்றார்கள். அதப்படியிருக்க, கங்கைக்கரைத் தோப்பில் தூங்கிக்கொண்டிருந்த நகரத்தார் விழித்துப்பார்த்துச் சக்கிரவர்த்தித் திருமகனைக் காணாமல் கண்போனவர் ஒரு காரணத்தாற் கண்பெற்று மறித்தும் அக்கண்ணை இழந்தாற்போலவும், சாகநின்றவர் சாகாமருந்தாகிய அமுதத்தையடைந்து உடனே அதனைப் போக்கிக்கொண்டாற்போலவும் பெருந்துயரமுற்றுப் பரிதவித்து ஆற்றில் தேருருளைகளின் சுவடுகண்டு பின்பு அதையுங் காணாமல் அயோத்திசேர்ந்து மகாராஜா இறந்த செய்தியையுங்கேட்டுக் கரைகாணாத் துயருழந்திருந்தார்கள் என்பதாம்.

1 ஏவிய குரிசில்பின் யாவ ரேகிலார்
மாவிய நனையம் மன்னை நீங்கலாத்
தேவிய ரொழிந்தனர் தெய்வ மாநகர்
ஓவிய மொழிந்தன வுயிரி லாமையால்.

2 கய்கணீர் பரந்துகால் தொடரக் கண்ணுறும்
வெய்யநீர் வெள்ளத்து மெள்ளச் சேறலால்
உய்யவே மூலருமொன் றூன நீருழல்
தெய்வமீ ளுைத்ததச் செம்பொற் றேரரோ.

3 மீன்புகழ் பெறவெயி லொதுங்க மேதியோ
டான்புகக் கதிரவ னத்தம் புக்கனன்
கான்புகக் காண்கிலே னென்று கல்லதர்
தான்புக முடுகின னென்னுந் தன்மையான்.

4 பகுத்தவான் மதிகொடு பதுமத் தண்ணலே
வகுத்தவா ளுதலியர் வதன ராசிபோல்
உகுத்தகண் ணீரின வொளியும் நீங்கின
முகுழ்த்தழ கிழந்தன முளரி யீட்டமே.

5 அந்தியில் வெயிலொளி யழிய வானகம்
நந்தலில் கைகயன் பயந்த நங்கைதன்
மந்தரை யுரையெனுங் கடுவின் மட்கிய
சிந்தையி னிருண்டது செம்மை நீங்கியே.

6 பரந்துமீ னரும்பிய பசலை வானகம்
அரந்தையின் முனிவர னறைந்த சாபத்தால்
நிரந்தர மிமைப்பிலா நெடுங்க ணீடிய
புரந்தர னுருவெனப் பொலிந்த தெங்குமே.

7 திருநகர்க் கியோசனை யிரண்டு சென்றொரு
வினைசெறி சோலையை விரைவி னெய்தினான்
இரதநின் றிழிந்தபி னிராம னின்றுணை
உரைசெறி முனிவரோ டுறையும் காலையே.

8 வட்டமோ ரோசனை வளைவிற் றூய்நடு
எட்டனை யிடவுமோ ரிடமி லாவகை
புட்டகு சோலையின் புறத்துப் போர்த்தென
விட்டது குரிசிலை விடாத சேனையே.

9 குயின்றிய குலமணி நதியின் கூலத்தில்
பயின்றுயர் வாலுகப் பரப்பிற் பைம்புலில்
வயின்றொறும் வைகின ரொன்றும் வாய்மடுத்
தயின்றிலர் துயின்றில ரழுது விம்மினார்.

வேறு.

10 வாவிவிரி தாமரையின் மாமலரின் வாசக்
காவிவிரி நாண்மலர் முகுழ்த்தனைய கண்ணார்
ஆவிவிரி பாஞ்சாயி னுடையனை யாக
நாவிவிரி கூழையிள நவ்வியர் துயின்றார்.

11 மாகமணி வேதிகையின் மாதவிசெய் பந்தல்
கேகய நெடுங்குல மெனச்சிலர் கிடந்தார்
பூகவன மூடுபடு கர்ப்புளின முன்றில்
தோகையிள வன்னநிரை யிற்சிலர் துயின்றார்.

12 சம்பக நறும்பொழில் களிற்றருண வஞ்சிக்
கொம்பழுதொ சிந்தன வெனச்சிலர் குழைந்தார்
வம்பளவு கொங்கையொடு வாலுகம் வளர்க்கும்
அம்பவிள வல்லிக ளெனச்சில ரசைந்தார்.

*　　*　　*

13 தொடுத்தக லிடைச்சிலர் துவண்டனர் துயின்றார்
அடுத்தவடை யிற்சில ரழிந்தன ரயர்ந்தார்
உடுத்ததுகில் சுற்றொரு தலைச்சில ருறைந்தார்
படுத்ததளி ரிற்சிலர் பசந்தன ரசந்தார்.

14 ஏனையரு மின்னண மிறங்கின ருறங்கா
மானவனு மந்திரிசு மந்திரனை வாவென்
றானமில் பெருங்குண மொருங்குடைய வுன்னால்
மேனிகழ்வ துண்டவுரை கேளென விளம்பும்.

வேறு.

15 பூண்டபே ரன்பி னானைப் போக்குவ தரிது போக்கா
தீண்டுநின் றேகல் பொல்லா தெந்தைநீ யிரத மின்னே
தூண்டினை மீள நோக்கிச் சுவட்டையோர்ந் தென்னை யங்கே
மீண்டன னென்ன மீள்வ ரிதுநின்னை வேண்டிற் றென்றான்.

16 செவ்விய குரிசில் கூறத் தேர்வலான் செப்பு வானவ்
வெவ்விய தாயிற் றீய விதியினின் மேலென் போலாம்
இவ்வயி னின்னை நீக்கி யின்னுயிர் தீர்ந்தின் றேகி
அவ்வயி னனைய காண்டற் கமைதலா லளிய னென்றான்.

வேறு.

மறுயபு மிளவலுந் தொடரச் செல்வனைப்
பூவியற் கானகம் புகவுய்த்தே னென்கோ
கோவினை யுடன்கொடு குறுகினே னென்கோ
யாவது கூறுகே னிரும்பி னெஞ்சினேன்.

18 தாருடை மலரினு மொதுங்கத் தக்கிலா
வாருடை முலையொடு மதுகை மைந்தனை
பாரிடைச் செலுத்தினேன் பழைய நண்பினேன்
தேரிடை வந்தனென் றீதிலே னென்கோ.

19 வன்புலக் கன்மன மதியில் வஞ்சனேன்
என்புலப் புறவுடைந் திரங்கு மன்னன்பால்
உன்புலக் குரியசொ லுணர்த்தச் செல்கெனோ
தென்புலக் கோமகன் றாதிற் செல்கெனோ.

20 நாற்றிசை மாந்தரு நகர மாக்களும்
தேற்றினர் கொணர்வருஞ் சிறுவன் றன்னையென்
றூற்றின ராசனை யய்ய வெய்யவென்
கூற்றுறழ் சொல்லினாற் கொலைசெய் வென்கொலோ.

21 அங்கிமேல் வேள்விசெய் தரிதிற் பெற்றநின்
சிங்கவே றகன்றதென் றுணர்த்தச் செல்கெனோ
எங்கள்கோ மகற்கினி யென்னிற் கேகயன்
நங்கையே கடைமுறை நல்லள் போலுமால்.

22 முடிவுற வின்னன மொழிந்த பின்னரும்
அடியுறத் தழுவின னழுங்கு போரரா
இடியுறத் துவளுவ தென்னு மின்னலன்
படியுறப் புரண்டனன் பலவும் பன்னினான்.

23 தடக்கையா லெடுத்தவற் றழுவிக் கண்ணநீர்
துடைத்துவே றிருத்திமற் றினைய சொல்லினான்
அடக்குமைம் பொறியொடு காணத் தப்புறம்
கடக்கும்வா லுணர்வினுக் கனுகுங் காட்சியான்.

24 பிறத்தலென் றுற்றபின் பெறுவ யாவையும்
திறத்துளி வுணர்வதோர் செம்மை யுள்ளத்தாய்
புறத்துறு பெரும்பழி பொதுவின் றெய்தலும்
அறத்திற மறத்தியோ வவல முண்டேனா.

25 முன்புநின் றிசைநிறீஇ முடிவு முற்றிய
பின்புநின் றுறுதியைப் பயக்கும் பேரறம்
இன்பம்வந் துறுமெனி னினிய தாயிடைத்
துன்பம்வந் துறுமெனிற் றுறக்க லாகுமோ.

26 நிறப்பெரும் படைக்கல நிறத்தி னேருற
மறப்பயன் விளைக்குறும் வன்மை யன்றரோ
இறப்பினுந் திருவெலா மிழப்ப வெய்தினும்
துறப்பில ரறமெனல் சூர ராவதே.

27 கான்புறஞ் சேறலி லருமை காண்டலால்
வான்பிறங் கியபுகழ் மன்னர் தொல்குலம்
யான்பிறந் தறத்தினின் றிழுக்கிற் றென்னவோ
ஊன்றுறந் துயிர்குடித் துழலும் வேலினாய்.

28 வினைக்கரு மெய்ம்மையன் வனத்துள் விட்டனன்
மனைக்கரும் புதல்வனை யென்றல் மன்னவன்
தனக்கருந் தவமது தலைக்கொண் டேகுதல்
எனக்கருந் தவமிதற் கிரங்க லெந்தைநீ.

29 முந்தினை முனிவனை யிறைஞ்சி முற்றுமென்
வந்தனை முதலிய மாற்றங் கூறினை
எந்தையை யவனொடு மெய்தி யீண்டெனைச்
சிந்தனை புணர்த்துதி யென்று செப்புவாய்.

30 முனிவனை யெம்பியை முறையி னின்றரும்
புனிதவே தியர்க்குமே லுறைபுத் தேளிர்க்கும்
இனியன விழைத்தியென் றியம்பி யெற்பிரி
தனிமையுந் தீர்த்தியென் றுரைத்தி தன்மையால்.

31 வெவ்விய தன்மையால் விளைந்த தீண்டொரு
கவ்வையென் றிறையுந்தன் கருத்தி னோக்கலன்
எவ்வரு ளென்வயின் வைத்ததின் சொலால்
அவ்வரு ளவன்வயி னருளு கென்றியால்.

32 வேண்டின னிவ்வர மென்று மேலவன்
ஈண்டரு ளெம்பிரா னிறுவி யேகினை
பூண்டமா தவனொடுங் கோயில் புக்கென
தாண்டகை வேந்தனை யவல மாற்றிப்பின்.

33 ஏழிரண் டாண்டுநீத் தீண்ட வந்துனைத்
தாழ்குவன் றிருவடி தளர லீண்டெனச்
சூழிவெங் கடகளிற் றரசற் சொல்லிப்பின்
வாழிமா தவன்சொலான் மனந்தெ ருட்டுவாய்.

34 முறைமையா லெற்பயந் தெடுத்த மூவர்க்கும்
குறைவிலா வென்னொடு வணக்கங் கூறிப்பின்
இறைமகன் றுயர்துடைத் திருத்திமா டென்றான்
மறைகளை *மறைந்துபோய் வனத்துள் வைகுவான்.

35 ஆள்வினை யாண்மையிற் றிறம்ப லன்றெனாத்
தாள்முதல் வணங்கிய தனித்திண் டேர்வலான்
ஊழ்வினை வசத்துயிர் நிலையென் றுன்னுவான்
வாழ்வினை நோக்கியை வணங்கி நோக்கினான்.

36 அன்னவள் கூறுவா ளரசர்க் கத்தையர்க்
கென்னுடை வணக்கமுன் னியம்பி யானுடைப்
பொன்னிறப் பூவையுங் கிளியும் போற்றுகென்
றுன்னுமென் றங்கையர்க் குணர்த்துவா யென்றாள்.

37 தேர்வலா னவ்வுரை கேட்டுத் தீங்குறின்
யார்வலா ருயிர்துறப் பெளிதன் றேயெனாப்
போர்வலான் றடுக்கவும் பொருமி விம்மினான்
சோர்விலா ளறிவிலாத் துயர்க்குச் சோர்கின்றான்.

38 ஆறினன் போற்சிறி தவல மவ்வழி
வேறிலா னன்பினாய் விடைதந் தீகெனா
ஏறு சேவகற் றொழுதினை யமைந்தனைக்
கூறுவ தியாதெனா வினைய கூறினான்.

---

* மறந்து எனவும் பாடம்.

39 உரைசெய்தெங் கோமகற் குறுதி யாக்கிய
தரைகெழு செல்வத்தைத் தவிர மற்றொரு
விரைசெறி குழலிமாட் டளித்த மெய்யனை
அரைசனென் றின்னமொன் றறையற் பாலதோ.

40 கானகம் பற்றிநற் புதல்வன் காயுணப்
போனகம் பற்றிய பொய்யில் மன்னர்க்கிங்
கூனகம் பற்றிய வுயிர்கொ டின்னும்போய்
வானகம் பற்றிலா வலிமை கூறென்றான்.

41 பின்னுடன் பிறந்தவாட் பரத வேந்தற்கு
மன்னுடன் பிறந்திலென் மண்கொண் டாள்கின்ற
நன்னுடன் பிறந்திலென் நம்பி முன்னலென்
என்னுடன் பிறந்தயான் வலியெ னென்றியால்.

42 ஆரிய னிளவலை நோக்கி யையவிச்
சீரிய வல்லன செப்ப லென்றபின்
பாரிடை வணங்கினன் பதைக்கு நெஞ்சினன்
தேரிடை வித்தகன் சேறல் மேயினான்.

43 கூட்டினன் றேர்ப்பொறி கூட்டிக் கோன்முறை
பூட்டினன் புரவியப் புரவி போநெறி
காட்டினன் காட்டித்தன் கல்வி மாட்சியால்
ஓட்டின னொருவரு முணர்வு றாமலே.

44 தையறன் கற்புந்தன் றகவுந் தம்பியும்
மையறு கருணையு முணர்வும் வாய்மையும்
செய்யதன் வில்லுமே சேம மாகக்கொண்
டையனும் போயினா னல்லி னூப்பனே.

வேறு.

45 பொய்வினைக் குதவும் வாழ்க்கை யரக்கரைப் பொருந்தியன்னார்
செய்வினைக் குதவு நட்பாற் செல்பவர்த் தடுப்ப தேய்க்கும்
மைவிளக் கியதே யன்ன வயங்கிரு ளிரக்க வானம்
கைவிளக் கெடுத்த தென்ன வந்தது கடவுட் டிங்கள்.

46 மருமத்துத் தன்னை யூன்று மறக்கொடும் பாவந் தீர்க்கும்
உருமொத்த சிலையி னோனை யொருப்படுத் துதவி நின்ற
கருமத்தின் விளைவை யெண்ணிக் களிப்பொடு காண வந்த
தருமத்தின் வதன மென்னப் பொலிந்தது தனிவெண் டிங்கள்.

47 காம்புயர் கானஞ் செல்லுங் கரியவன் வறுமை நோக்கித்
தேம்பின குவிந்த போலுஞ் செங்கழு நீருஞ் சேரப்
பாம்பின தலைய வாகிப் பரிந்தன குவிந்து சாய்ந்த
ஆம்பலு மென்ற போது நின்றபோ தலர்வ துண்டோ.

48 அஞ்சனக் குன்ற மன்ன வழகனு மழகன் றன்மேல்
எஞ்சலில் பொன்போர்த் தன்ன விளவலு மிந்து வென்பான்
வெஞ்சிலைப் புருவத் தாடன் மெல்லடிக் கேற்ப வெண்ணூற்
பஞ்சிடைப் படுத்தா லென்ன வெண்ணிலாப் பரப்பப் போனார்.

* * *

49 பரிதிவா னவனுங் கீழ்பாற் பருவரை பற்று முன்னம்
திருவினா யகனுந் தென்பால் யோசனை யிரண்டு சென்றான்
அருவிபாய் கண்ணும் புண்ணா யழிகின்ற மனமுந் தானும்
துரிதமான் றேரிற் போனான் செய்தது சொல்ல லுற்றாம்.

50 கடிகையோ ரிரண்டு மூன்றிற் கடிமதி லயோத்தி கண்டான்
அடியிணை தொழுதா னாதி முனிவனை யவனு முற்ற
படியெலாங் கேட்டு நெஞ்சிற் பருவர லுழந்தான் முன்னே
முடிவெலா முணர்ந்தா னந்தோ முடிந்தனன் மன்ன னென்
[றான்.

51 நின்றுயர் பழியை யஞ்சி நேர்ந்திலன் றடுக்க வள்ளல்
ஒன்றுநா னுரைத்த னோக்கான் றருமத்திற் குறுதி பார்ப்பான்
வென்றவ ருளரே மேலை விதியினை யென்று விம்மி
பொன்றிணி மன்னன் கோயில் சுமந்திர னோடும் போனான்.

52 தேர்கொண்டு வள்ளல் வந்தா னென்றுதஞ் சிந்தை யுந்த
ஊர்கொண்ட திங்க ளென்ன மன்னனை யுழையர் சுற்றக்
கார்கொண்ட மேனி யானைக் கண்டிலர் கண்ணில் வாற்று
நீர்கொண்ட நெடுந்தேர்ப் பாக னிலைகண்டே நிலையிற் றீர்ந்தார்.

53 இரதம்வந் துற்ற தென்றாங் கியாவரு மியம்ப லோடும்
வரதன்வந் துற்றா னென்னா மன்னனு மயக்கந் தீர்ந்தான்
புரைதபு கமல நாட்டம் பொருக்கென விழித்து நோக்கி
விரதமா தவனைக் கண்டான் வீரன்வந் தனனோ வென்றான்.

54 இல்லையென் றுரைக்க லாற்றா னேங்கினன் முனிவ னின்றான்
நல்லவன் முகமே நம்பி நடந்தில னென்னு மாற்றம்
சொல்லலு மரசன் சோர்ந்தான் றுயருறு முனிவ னாணிவ்
வெல்லல்காண் கில்லே னென்னா வாங்குநின் றகலப் போனான்.

55 நாயகன் பின்னுந் தன்றேர்ப் பாகனை நோக்கி நம்பி
சேயனோ வணிய னோவென் றுரைத்தலு மனையான் செய்ய
வேயுயர் கானந் தானுந் தம்பியு மிதிலைப் பொன்னும்
போயின னென்றா னென்ற போழ்தத்தே யாவி போனான்.

56 இந்திரன் முதல்வ ராய கடவுளர் யாரு மீண்டிச்
சந்திர னனைய தாங்கோர் மானத்தின் றலையிற் றாங்கி
வந்தன னெந்தை தந்தை யெனமனங் களித்து வள்ளல்
உந்தியா னுலகி னும்பர் மீள்கிலா வுலகத் துய்த்தார்.

57 உயிர்ப்பிலன் றுடிப்பு மில்ல னென்றுணர்ந் துருவந் தீண்டி
அயிர்த்தன ளேக்கி மன்னற் காருயி ரின்மை தேறி
மயிற்குல மனைய நங்கை கோசலை மறுகி வீழ்ந்தாள்
வெயிற்சுடு கோடை தன்னி லென்பிலா வுயிரின் வேவாள்.

58 இருந்தவந் தனனோ டெல்லா மீன்றவன் றன்னை யீனப்
பொருந்தவஞ் செய்த நங்கை கணவனிற் பிரிந்து தெய்வ
மருந்திழந் தவரின் விம்மி மணிபிரி யரவின் மாந்தி
அருந்துணை பிரிந்த வன்றிற் பெடையென வரற்ற லுற்றாள்.

வேறு.

59 தானே தானே தஞ்சமி லாதான் றுகைவில்லான்
போனான் போனா னெங்களை நீத்திப் பொழுதென்னா
வானீர் சுண்டி மண்ணற வற்றி மறுகுற்ற
மீனே யென்ன மெய்தடு மாறி விழுகின்றாள்.

60 ஒன்றோ நன்னாட் டெய்க்குவ ரிந்நாட் டுயிர்காப்பார்
அன்றே மக்கட் பெற்றுயிர் வாழ்வார்க் கவமுண்டே
இன்றே வந்தீண் டஞ்ச லெனாதெம் மகனென்பான்
கொன்றா னன்றோ தந்தையை யென்றாள் குலைகின்றாள்.

61 நோயு மின்றி நோன்கதிர் வாள்வே லிவையின்றி
மாயுஞ் செல்வ மக்களி னாலோ மறமன்னன்
காயும் புள்ளிக் கற்கட நாகங் கனிவாழை
வேயும் போன்றா னென்னா மயங்கா விழுகின்றாள்.

62 வடித்தாழ் கூந்தற் கேகயன் மாதே மதியாலே
பிடித்தாய் வையம் பெற்றனை பேரா வரமின்னே
முடித்தா யன்றே மந்திர மென்றாள் முகில்வாய்மின்
துடித்தா லென்ன மன்னவன் மார்பிற் றுவள்கின்றாள்.

63 அருந்தே ரானைச் சம்பர னைப்பண் டமர்வென்றாய்
இருந்தார் வானோ ருன்னரு ளாலே யினிதிந்நாள்
விருந்தா கின்றா யென்றனள் வேழந் தரசொன்னைப்
பெருந்தா ளன்பிற் சூழ்பிடி யென்னப் பிரிவுற்றாள்.

64 வெள்ளிச் செல்வந் துய்த்திகொல் மெய்மைத் துணையின்மை
சூழிச் செல்வந் துய்த்திகொ றோலா மனுநூலின்
வாழிச் செல்வந் துய்த்திகொன் முன்னோன் றனைவானோர்
கேள்விச் செல்வக் துய்க்க வயிற்றோர் கிளைதந்தாள்.

வேறு.

65 ஆழி வேந்தன் பெருந்தேவி யன்ன பன்னி யழுதாற்ற
தோழி யன்ன சுமித்திரையுந் துளங்கி யேங்கி யுயிர்சோர
ஊழி திரிவ தெனக்கோயி லுலையும் வேலை மற்றொழிந்த
மாழை யுண்கட் டேவியரு மயிலின் குழாத்தின் வந்திரைத்தார்.

66 துஞ்சி னானைத் தம்முயிரின் றுணையைக் கண்டார் துணுக்கத்தால்
நஞ்சு கவர்ந்தா லெனவுடல நடுங்கா நின்றா ரென்றாலும்
அஞ்சி யழுங்கி விழுந்திலா ளன்பிற் றறுகண் பிறிதுண்டோ
வஞ்ச மில்லா மனத்தானை வானிற் றொடர்வான் மனம்வலித்தாள்.

67 அளங்கொ ளளக்க ரிரும்பரப்பி லண்ட ருலகி லப்புறத்தில்
விளங்கு மாதர் கற்பினு ரிவரின் யாவ ரெனநின்ருர்
களங்க நீத்த மதிமுகத்தார் கான வெள்ளங் கால்கோப்பத்
துளங்க லில்லாத் தனிக்குன்றிற் றுக்க மயிலிற் சூழ்ந்திருந்தார்.

68 கைத்த சொல்லா லுயிரிழந்தும் புதல்வற் பிரிந்தும் கடையோட
மெய்த்த வேந்தன் றிருவுடம்பைப் பிரியா தாற்றி விட்டிலரால்
பித்த மயக்காஞ் சுறவெறியும் பிறவிப் பெரிய கடல்கடக்க
உய்த்து மீண்ட நாவாயிற் ருழும் போவா ரொக்கின்ருர்.

69 மாத ரார்க ளறுபதினு யிரரு முள்ளம் வலித்திருப்பக்
கோதில் குணத்துக் கோசலையு மிளைய மாதுங் குழைந்தேங்கச்
சோதி மணித்தேர்ச் சுமந்திரன்சென் றரசன் தன்மை சொலவந்த
வேத முனிவன் விதிசெய்த வினையை நோக்கி விம்முவான்.

70 செய்யக் கடவ செயற்குரிய சிறுவ ரீண்டை யாரல்லர்
எய்தக் கடவ பொருளெய்தா திகவா வென்ன வியல்பென்ன
மையற் கொடியாள் மகனீண்டு வந்தான் முடித்து மற்றென்ன
தையற் கடனின் றெடுத்தவனைத் தைலக் கடலின் றலையுய்த்தான்.

71 கேகி மாரா யிவற்குரிமை செய்யு நாளிற் செந்தீயின்
ஆவி நீந்தி ரெனநீக்கி யரிவை மார்க ளிருவரையும் [கென்
காவில் கோயிற் றலையிருத்தித் தண்டார்ப் பரதற் கொண்டணை
றேவி னுன்மன் னவனுணை யெழுதி முடங்கல் கொடுத்தவரை.

72 போனு ரவருங் கேகயர்கோன் பொன்மா நகரம் புகவெய்த
ஆறு வறிவி னருந்தவனு மறமார் பள்ளி யதுசேர்ந்தான்
சேனு பதியிற் சுமந்திரனைச் செயற்பாற் குரிய செய்கென்று
மேனுஞ் சொன்ன மாந்தர்க்கு விளைந்த தினிநாம் விளம்புவாம்.

73 மீனீர் வேலை முரசியம்ப விண்ணே ரேத்த மண்ணிறைஞ்சத்
தூநீ ரொளிவாளு புடையிலங்கச் சுடர்த்தே ரேறித் தோன்றினுன்
வானே புக்கா னரும்புதல்வன் மக்க ளகன்ருர் வருமளவும்
யானே காப்ப னிவ்வுலகை யென்பான் போல வெறிகதிரோன்.

74 வருந்தா வண்ணம் வருந்தினார் மறந்தார் தம்மை வள்ளலுமங்
கிருந்தா னென்றே யிருந்தார்க ளெல்லா மெழுந்தா ரருளிருக்கும்
பெருந்தா மரைக்கட் கருமுகிலைப் பெயர்ந்தார்காணார்பேதுற்றார்
பொருந்தா நயனம் பொருந்திநமைப் பொன்றச் சூழ்ந்த தெனப்
[புரண்டார்.

75 எட்டுத் திசையு மோடுவா ரெழுவார் விழுவா ரிடர்க்கடலுள்
விட்டு நீத்தா னமையென்பார் வெய்ய வையன் வினையென்பார்
ஒட்டிப் படர்ந்த தண்டகமிவ் வுலகத் துளதன் றேவுணர்வைச்
சுட்டிச் சேர்த லாற்றுதுமே றொடர்துந் தேரின் சுவடென்பார்.

76 தேரின் சுவடு நோக்குவார் திருமா நகரின் மிசைதிரிய
ஊருந் திகிரிக் குறியொற்றி யுணர்ந்தா ரெல்லா முயிர்வந்தார்
ஆரு மஞ்ச லையன்போ யயோத்தி யடைந்தா னெனவசனிக்
காருங் கடலு மொருவழிக்கொண் டார்த்த வென்னக் கடிதார்த்
[தார்.

77 மான வரவின் வாய்த்தீய வளைவான் றொளைவா ளெயிற்றின்வழி
ஆன கடுவுக் கருமருந்தா யருந்து மமுதம் பெற்றுயர்ந்து [ரிய
போன பொழுதிற் புகுந்தவுயிர் பொறுத்தா ரொத்தார் பொருவ
வேனில் மதனை மதனழித்தான் மீண்டா னென்ன வாண்டை
[யார்.

78 ஆறு செல்லச் செல்லத்தே ராழி கண்டா ரயலப்பால்
வேறு சென்ற நெறிகாணார் விம்மா நின்ற வுவகையராய்
மாறி யுலகம் வருந்தநாள் வரம்பு கடந்து மண்முழுதும்
ஏறி யொடுங்கு மெறிகடல்போ லெயின்மா நகர மெய்தினார்.
[டார்

79 புக்கா ரரசன் பொன்னுலகம் போனா னென்னும் பொருள்கேட்
உக்கார் நெஞ்ச முயிருகுத்தா ருற்ற தெம்மா லுரைப்பரிதால்
தக்கான் போனான் வனமென்னுந் தகையு முணர்ந்தார் மிகையா
அக்கா லத்தே யகலுமோ வவதி யென்றோ னுளதானால். [வி.

80 மன்னற் கல்லார் வனம்போன மைந்தற் கல்லார் வாங்கரிய
இன்னற் சிறையி னிடைப்பட்டா ரிருந்தார் நின்ற வருந்தவ
[னும்
உன்னற் கரிய பழிக்கஞ்சி யன்றே வொழிந்த தியானென்று
பன்னற் கரிய பலநெறியும் பகர்ந்து பதைப்பை நீக்கினான்.

81 வெள்ளத் திடைவாழ் வடவனலை யஞ்சி வேலை கடவாத
பள்ளக் கடலின் முனிபணியாற் பையு ணகரம் வைகிடமேல்
வள்ளற் றூதைபணி யென்னும் வானோர் தவத்தால் வயங்கிருளி
நள்ளிற் போனவரிசிலைக்கை நம்பி செய்கை நடத்துவாம். [ன்

5-வது. தைல மாட்டுப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 86ல்-81.



## 6-வது. கங்கைப்படலம்.



கங்கைப்படலம் என்றால் கங்கைக்கரையில் நடந்த சரித்திரத்தைச் சொன்ன பாடலின்கூட்டம் என்பது.

முன் அயோத்தியிலிருந்து கங்கையின் வடகரைபோய்ச் சேர்ந்த ஸ்ரீராமர் அங்கிருந்த முனிவரால் எதிர்கொண்டு அழைக்கப்பட்டு அம்முனிவர் ஆச்சிரமத்தில் அவர்கள் கொடுத்த காய்கனிமுதலியவற்றை அமுதுசெய்து தருப்பைப்புல்லால் வேய்ந்த பாயலில் பத்தினியுடன் திருக்கண்வளர்ந்தார்; இளையபெருமாளோ வில்லுங்கையுமாய் விடியுமளவும் காவல்காத்திருந்தார். இப்படியிருக்க அங்குள்ள சிருங்கிபேரமென்கிற பட்டணத்தில் இருக்கும் செம்படவர்தலைவனாகிய குகனென்பவன் காட்டுமனிதர்க்குரிய வேடமும் வீரனுக்குரிய ஆயுதமுதலிய லக்ஷணங்களும் உடையவனாய் ஸ்ரீராமர் சன்னதிக்குவந்து லக்ஷ்மணரால் உள்ளே புகுவிக்கப்பட்டு, ஸ்வாமியைக் கண்டு ஆநந்தன்பமெய்தித் தன் வரலாற்றைச் சொல்லிப பணிந்து தான் கொணர்ந்த மீனையுந்தேனையும் சமர்ப்பிக்க, சுவாமி முனிவர்கள் முகங்களைநோக்கிப் புன்சிரிப்புக்கொண்டு, இவன் அன்பினால்கொணர்ந்தவையாகையால் இவை பரிசுத்தமானவையே; நாம் இவற்றைக் கடாக்ஷித்தபோதே அமுதுசெய்ததுபோலாம் என்று உகந்தருளிநிற்க, பிறகு சுவாமி காட்டுக்கு எழுந்தருளின வரலாற்றை வினவி இளையபெருமாள்சொல்ல அறிந்து விசனமடைந்து, பிறகு சுவாமி படவு சீக்கிரம்கொண்டு வாவென்று கட்டளையிட்டவுடனே அவன் அப்படியேகொண்டுவர, அதனிலே தாமும் தம்பத்தினியும் தம்பியுமாய் ஏறி எளிதில் அக்கரைசேர்ந்து சித்திரகூடத்திற்கு வழி எதுவென்று குகனைக்கேட்க, அவன் அப்படியே யான் சித்திரகூடத்திற்கு வழிகாட்ட வல்லேனாயினும், தம்மைப் பிரிந்திருக்க மனம்பொறாமையால் நானும் கூடவரவேண்டுகிறேனென்று பிரார்த்திக்க, ஸ்ரீராமர், இதுவரையில் நாங்கள் சகோதரர் நால்வராயிருந்தோம்; இப்போது நாம் ஐவரானோம்; உன்னுடையவையெல்லாம் என்னுடையவையன்றோ; பரதன் அந்நாட்டைக் காத்திருப்பதுபோல் இங்குள்ளவர்களை யெல்லாம் காத்துக்கொண்டு நீ இங்கேயே இருக்கவேண்டும். நான் திரும்பிவரும்போது இங்கு வந்திருக்கிறேனென்றார். அதுகேட்டுக் குகனும் ஒருவாறு தேறிநிற்க, சுவாமி உல்லாசமாய்க் காட்டுக்குள் சென்றாரென்பது இப்படலத்தின் கதை.



1 வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறையப்
பொய்யோவெனு மிடையாளொடு மிளையானொடும் போனான்
மையோமர கதமோமறி கடலோமழை முகிலோ
அய்யோவிவன் வடிவென்பதோ ரழியாவழ குடையான்."

2 அளியன்னதொ ரறல்துன்னிய குழலாள்கட லமிர்தின்
தெளியன்னதோர் மொழியாள்சிறை தவமன்னதோர் செயலாள்
வெளியன்னதொ ரிடையாளொடும் விடையன்னதோர் நடை
களியன்னமு மடவன்னமு நடமாடுவ கண்டான். [யான்

3 அஞ்சம்பையு மைய்யன்றன தலகம்பையு மளவா
நஞ்சங்களை வெலவாகிய நயனங்களை யுடையாள்
துஞ்சுங்களி வரிவண்டுகள் குழலின்படி சுழலும்
கஞ்சங்களை பஞ்சன்கழ லருகின்றது கண்டாள்.

4 மாகந்தமு மகரந்தமு மளகந்தரு மதியின்
பாகந்தரு நுதலாளொடு பவளந்தரு மிதழான்
மேகந்தனி வருகின்றது மின்னோடென மிளிர்பூண்
நாகந்தனி வருகின்றது பிடியோடென நடவா.

5 தொளைகட்டிய கிளைமுட்டிய சுருதிச்சுவை யமுதின்
கிளைகட்டிய கருவிக்கிளை ரிசையிற்பசை நறவின்
விளைகட்டியின் மதுரித்தெழு கிளவிக்கிளர் விழிபோல
களைகட்டவர் தலைவிட்டெறி குவளைத்தொகை கண்டான்.

* * *

6 பன்னந்துக டாளந்தொகு படர்பந்திகள் படுநீர்
அன்னந்துயில் வதிகண்டலை யயனந்துறை புளினம்
சின்னந்தரு மலர்நந்தன செறிநந்தன வனகன்
பொன்னந்தியு நதிகண்டுள மகிழ்ந்தனர் போனார்.

7 கால்பாய்வன [illegible]மேனியின் கதிர்மெய்வன கடைவாய்
பால்ப[illegible]ளி படாச்
சேல்ப[illegible]வன கயல்பாய்வன [illegible] வன்னம்
போல்பாய்புனல் மடவார்படி கெ[illegible] போனார்.

வேறு.

8 பரிதி பற்றிய பல்கலன் முற்றினர்
மருத வைப்பின் வளங்கெழு நாடொரீஇ
சுருதி கற்றுயர் தோமிலர் சுற்றுறும்
விரிதி ரைப்புனற் கங்கையை மேவினார்.

9 கங்கை யென்னுங் கடவுட் டிருநதி
தங்கி வைகுந் தபோதனர் யாவரும்
எங்கள் செல்கதி வந்ததென் றேமுறு
அங்க ணாயசற் காணவந் தண்மினார்.

10 பெண்ணி னோக்குஞ் சுவையிற் பிறர்பிறர்க்
கெண்ணி நோக்கி யியம்பரு மின்பத்தைப்
பண்ணி னோக்கும் பாரவமு தைப் பசுங்
கண்ணி னோக்கின ருள்ளங் களிக்கின்றார்.

11 எதிர்கொ டேத்தின ரின்னிசை பாடினர்
வெதிர்கொள் கோலின ராடினர் வீரனை
கதிர்கொ டாமரைக் கண்ணனைக் கண்ணினால்
மதுர வாரி யமுதென மாந்துவார்.

12 மனையி னீங்கிய மக்களை வைகலும்
நினைபு நெஞ்சினர் கண்டிலர் நேடுவார்
அனையர் வந்துற வாண்டெதிர்ந் தார்களில்
இனிய மாதவப் பள்ளிகொண் டெய்தினார்.

13 பொழியுங் கண்ணிற் புதுப்புன லாட்டினர்
மொழியு மின்சொலின் மொய்ம்மலர் சூட்டினர்
அழிவி லன்பெனு மாரமிழ் தூட்டினர்
வழியில் வந்த வருத்தத்தை வாட்டினர்.

14 காயுங் கானிற் கிழங்குங் [illegible]
தூய தேடிக் கொ[illegible]
ஆய கங்கை [illegible] லாடினை
தீமை [illegible] செய்யமு தென்[illegible]

15 மங்கை யர்க்கு விளக்கன்ன மானையும்
செங்கை பற்றினன் றேவரும் துன்பறப்
பங்கை யத்தயன் பண்டுதன் பாதத்தின்
அங்கை யிற்றருங் கங்கையி னாடினான்.

16 கன்னி நீக்கருங் கங்கையுங் கைதொழாப்
பன்னி நீக்கரும் பாதகம் பாருளோர்
என்னி னீக்குவர் யானுமின் றெற்றந்த
உன்னி னீக்கினெ னுய்ந்தனென் யானென்றாள்

17 வெங்க ணாகக் கரத்தினன் வெண்ணிறக்
கங்கை வார்சடைக் கற்றையன் கற்புடை
மங்கை காணநின் றாடுகின் றான்வயிற்
திங்கள் சூடிய செல்வனிற் றோன்றினான்.

18 தள்ளு நீர்ப்பெருங் கங்கைத் தரங்கத்தால்
வள்ளி நுண்ணிடை மாமல ராளொடும்
வெள்ளி வெண்ணிறப் பாற்கடன் மேலைநாள்
பள்ளி நீங்கிய பான்மையிற் றோன்றினான்.

19 வஞ்சி நாண விடைக்கு மடநடைக்
கஞ்சி யன்ன மொதுங்க வடியன்ன
கஞ்ச நீரி லொளிப்பக் கயலுகப்
பஞ்சி மெல்லடிப் பாவையு மாடினாள்.

20 தேவர் தேவன் செறிசடைக் கற்றையுள்
கோவை மாலை யெருக்கொடு கொன்றையின்
பூவு நாறலள் பூங்குழற் கூந்தலின்
நாவி நாண்மலர்க் கங்கையு நாறினாள்.

21 நுரைக்கொ ழுந்தெழுந் தோங்கி நுடங்கலால்
நரைத்த கூந்தலி னங்கைமர் தாதினி
உரைத்த சிறைத் தனிமையை யுன்னுவாள்
திரைக்கை நீட்டிச் செவிலியி னாட்டினாள்.

22 மங்கை வார்குழற் கற்றை மழைக்குலம்
தங்கு நீரிடைத் தாழ்ந்து குழைப்பன
கங்கை யாற்றொடுங் காளிந்தி தன்னொடும்
பொங்கு நீர்ச்சுழி போவன போன்றவே.

23 சுழிபட் டோங்கிய தூங்கொலி யாற்றுத்தன்
விழியிற் சேலுகள் வானிற வெள்ளத்து
முழுகித் தோன்றுகின் றாள்முதற் பாற்கடல்
அழுவத் தன்றெழு வாளென வாயினாள்.

24 செய்ய தாமரைத் தாள்பண்டு தீண்டலால்
வெய்ய பாதகந் தீர்ந்து விளங்குவாள்
ஐயன் மேனி யெலாமணைந் தாலினி
வைய மாநர கத்திடை வைகுமே.

25 துறைந றும்புன லாடிச் சுருதியோர்
உறையு ளெய்தி யுணர்வுடை யோர்வுணர்
இறைவற் கைதொழு தேந்தெரி யோம்பிப்பின்
அறிஞர் காதற் கமைவிருந் தாகினான்.

26 வருந்தித் தான்றர வந்த வமுதையும்
அருந்து நீரொன் றமரரை யூட்டினான்
விருந்து மெல்லட குண்டு விளங்கினான்
திருந்தி னார்வயிற் செய்தன தேயுமோ.

27 ஆய காலையி னாயிர மம்பிக்கு
நாய கன்போர்க் குகனெனு நாமத்தான்
தூய கங்கைத் துறைவிடுந் தொன்மையான்
காயும் வில்லினன் கற்றிர டோளினான்.

28 துடிய னாயினன் றோற்செருப் பார்த்தபோர்
அடிய னாற்சிறந் தன்ன நிறத்தினான்
நெடிய தானை நெருங்கலி னீர்முகில்
இடியி னோடெழுந் தாலன்ன வீட்டினான்

29 கொம்பு துத்தரி கொட்டு முறைமையன்
பம்பை பம்பு படையினன் பல்லவத்
தம்ப னம்பிக்கு நாத னழிகவுள்
தும்பி யீட்டம் புரைகிளை சுற்றத்தான்.

30 காழ மிட்ட குறங்கினன் கங்கையி
னாழ மிட்ட நெடுமையி னானரை
தாழ விட்டசெந் தோலன் றயங்குறச்
சூழ விட்ட தொடுபுலி வாலினான்.

31 பற்றொ டுத்தன்ன பல்சூற் கவடியன்
கற்றொ டுத்தன்ன போலுங் கழலினான்
அற்றொ டுத்தன்ன குஞ்சிய னளியின்
நெற்றொ டுத்து நெரிந்த புருவத்தான்.

32 பெண்ணை வன்செறும் பிற்பிறங் கிச்செறி
வண்ண வன்மயிர் வார்ந்துயர் முன்கையன்
கண்ண கன்றட மார்பெனுங் கல்லினன்
எண்ணெ யுண்ட விருள்புரை மேனியான்.

33 கச்சொ டார்த்த கறைக்கதிர் வாளினன்
நச்ச ராவி னடுக்குறு நோக்கினன்
பிச்ச ரமன்ன பேச்சின னிந்திரன்
வச்சி ராயுதம் போலு மருங்கினான்.

34 ஊற்று மெய்ந்நற வூனொடு மீனுகர்
நாற்ற மேய நகையின் முகத்தினான்
சீற்ற மின்றியுந் தீயெழ நோக்குவான்
கூற்ற மஞ்சக் குமுறுங் குரலினான்.

35 சிருங்கி பேர மெனத்திரைக் கங்கையின்
மருங்கு தோன்றி நகருடை வாழ்க்கையான்
ஒருங்கு தேனொடு மீனுப காரத்தன்
இருந்த வள்ளலைக் காணவந் தெய்தினான்.

36 சுற்ற மப்புற நிற்கச் சுடுகணை
விற்று றந்தனை வீக்கிய வாளொழித்
தற்ற நீத்த மனத்தின னன்பினன்
நற்ற வப்பள்ளி வாயிலை நண்ணினான்.

37 கூவா முன்ன மிளையோன் குறுகிநீ
ஆவர் யாரென வன்பி னிறைஞ்சினான்
தேவா நின்கழல் சேவிக்க வந்தனென்
நாவாய் வேட்டுவ னுயடி யேனென்றான்.

வேறு.

38 நிற்றியீண் டென்று புக்கு நெடியவற் றொழுது நம்பி
கொற்றவ நின்னைக் காணக் குறுகின னிமிர்ந்த கூட்டச்
சுற்றமுந் தானு முள்ளந் தூயவன் றாயினல்லான்
எற்றுநீர்க் கங்கை நாவாய்க் கிறைகுக னொருவ னென்றான்.

39 அண்ணலும் விரும்பி யென்பா லழைத்திநீ யவனை யென்றான்
பண்ணவன் வருக வென்னப் பரிவினன் விரைவிற் புக்கான்
கண்ணனைக் கண்ணி னோக்கிக் கனிந்தன னிருண்ட குஞ்சி
மண்ணுறப் பணிந்து மேனி வளைத்துவாய் புதைத்து நின்றான்.

40 இருத்திீண் டென்ன லோடு மிருந்திலை னெல்லை நீத்த
அருத்தியன் தேனு மீனு மமுதினுக் கமைவ தாகத்
திருத்தினென் கொணர்ந்தே னென்கொற் றிருவுள மென்னவீரன்
விருத்தமா தவரை நோக்கி முறுவலன் விளம்ப லுற்றான்.

41 அரியதா முவப்ப வுள்ளத் தன்பினா லமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த தென்றா லமிர்தினுஞ் சீர்த்த தன்றே
பரிவினிற் றழீஇய வென்னிற் பவித்திர மெம்ம னோர்க்கும்
உரியன வினிதி னாமு முண்டனெ மன்றோ வென்றான்.

42 சிங்கவே றனைய வீரன் பின்னருஞ் செப்பு வான்யாம்
இங்குறைந் தெறிநீர்க் கங்கை யேறுது நாளை யாணர்
பொங்குநின் சுற்றத் தோடும் போயுவந் தினிது னூரில்
தங்கிநீ நாவா யோடுஞ் சாருதி விடிய வென்றான்.

43 கார்குலா நிறத்தான் கூறக் காதல னுணர்ந்து வானிப்
பார்குலாஞ் செல்வ நின்னை யிங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வ னேன்யா னின்னலி னிருக்கை நோக்கிந்
தீர்கிலே னான தைய செய்குவெ னடிமை யென்றான்.

44 கோதைவிற் குரிசி லன்னான் கூறிய கொள்கை கேட்டான்
சீதையை நோக்கித் தம்பி திருமுக நோக்கித் தீராக்
காதல னாகு மென்று கருணையின் மலர்ந்த கண்ணான்
யாதினு மினிய நண்ப விருத்தியீண் டெம்மொ டென்றான்.

45 திருநகர் தீர்ந்த வண்ண மானவ தெரித்தி யென்ன
பருவர றம்பி கூறப் பரிந்தவன் பையு ளெய்தி
இருகணீ ரருவி சோரக் குகனுமாண் டிருந்தா னென்னே
பெருநிலக் கிழத்தி நோற்றும் பெற்றிலள் போலு மென்னா.

46 விரியிருட் பகையை யோட்டுந் திசைகளை வென்று மேனின்
றொருதனித் திகிரி யுந்தி யுயர்புகழ் நிறுவி நாளும்
இருநிலத் தேவர்க்கு முள்ளந் திருந்தன னென்ன வியந்த
செருவலி வீர னென்னச் செங்கதிர்ச் செல்வன் சென்றான்.

47 மாலைவாய் நியமஞ் செய்து மாபுளி னியற்றி வைகல்
வேலைவா யமிர்தன் னாளும் வீரனும் விரிந்த நாணல்
மாலைவாய்ப் பாரின் பாயல் வைகினன் வரிவி லேந்திக்
காலைவா யளவுந் தம்பி யிமைப்பிலன் காத்து நின்றான்.

48 தும்பியின் குழாத்திற் சுற்றுஞ் சுற்றத்தன் றொடுத்த வில்லன்
வெம்பிவெந் தழியா நின்ற நெஞ்சினன் விழித்த கண்ணன்
தம்பிநின் றானை நோக்கித் தலைமகன் றன்மை நோக்கி
அம்பியின் றலைவன் கண்ணீ ரருவிசோர் குன்றி னின்றான்.

49 துறக்கமே முதல வாய தூயன யாவை யேனும்
மறக்குமா நினைய லம்மா வரம்பில தோற்று மாக்கள் [னால்
இறக்குமா றிதுவென் பான்போல் முன்னைநா ளிறந்தான் பின்
பிறக்குமா றிதுவென் பான்போற் பிறந்தனன் பிறவா வெய்
[யோன்.

50 செஞ்செவே சேற்றிற் றோன்றும் தாமரை தேரிற் றோன்றும்
வெஞ்சுடர்ச் செல்வன் மேனி நோக்கின விரிந்த வேறோர்
அஞ்சன நாயிறன்ன வையனை நோக்கிச் செய்ய
வஞ்சிவாழ் வதன மென்னுந் தாமரை மலர்ந்த தன்றே.

51 நாண்முதற் கமைந்த யாவு நயந்தன னியற்றி நாமத்
தோண்முதற் கமைந்த வில்லான் மறையவர் தொடரப் போனான்
ஆண்முதற் கமைந்த கேண்மை யன்பனை நோக்கி யைய
கோண்முதற் கமைந்த நாவாய் கொணருதி விரைவி னென்றான்.

வேறு.

52 ஏவிய மொழிகேளா விழிபுனல் பொழிகண்ணான்
ஆவியு முலைகின்றா னடியிணை பிரிகில்லான்
காவியின் மலர்காசா கடல்மழை யனையானைத்
தேவியொ டடிதாழாச் சிந்தனை யுரைசெய்வான்.

53 பொய்ம்முறை யிலரேபெம் புகலிடம் வனமேயால்
கொய்ம்முறை யுறுதாராய் குறைவிலெம் வலியேமால்
செய்ம்முறை குற்றேவல் செய்குது மடிபோமை
இம்முறை யுறவென்ன வினிதிரு நெடிதெம்மூர்.

54 தேனுள திணையுண்டாற் றேவரு நுகர்தற்காம்
ஊனுள துணைநாயே முயிருள விளையாடக்
கானுள புனலாடக் கங்கையு முளதன்றோ
நானுள தனையுந்நீ யினிதிரு நடவெம்பால்.

55 தோலுள துகில்போலுஞ் சுவையுள தொடர்மஞ்சம்
போலுள பறண்வைகும் புரையுள கடிதோடும்
காலுள சிலைபூணுங் கையுள கவிவானின்
மேலுள பொருளேனும் விரைவொடு கொணர்வேமால்.

56 ஐயிரு பத்தோடைந் தாயிர ருளராணை
செய்குநர் சிலைவேடர் தேவரின் வலியாரால்
உய்குது மடியேமெங் குடிலிடை யொருநாணீ
வைகுதி யெனின்மேலோர் வாழ்விலை பிறிதென்றான்.

57 அண்ணலு மதுகேளா வகநிறை யருண்மிக்கான்
வெண்ணிற நகைசெய்தான் வீரநின் னுழையாமப்
புண்ணிய நதியாடிப் புனிதனை வழிபாடுற்
றெண்ணிய சிலநாளிற் குறுகுது மினிதென்றான்.

58 சிந்தனை யுணர்கிற்பான் சென்றனன் விரைவோடும்
தந்தன னெடுநாவாய் தாமரை நயனத்தான்
அந்தணர் தமையெல்லா மருளுநிர் விடையென்னா
இந்துவி னுதலாளோ டிளவலொ டினிதேறா.

59 விடுநதி கடிதென்றான் மெய்யுயி ரனையானும்
முடுகின னெடுநாவாய் முரிதிரை நெடுநீர்வாய்
கடிதினின் மடவன்னக் கதியது செலநின்றார்
இடருற மறையோரு மெரியுறு மெழுகானார்.

60 பாலுடை மொழியாளும் பகலவ னனையானும்
சேலுடை நெடுநன்னீர் சிந்தினர் விளையாடத்
தோலுடை நிமிர்கோலிற் றுழவிட வெழுநாவாய்
காலுடை நெடுநெண்டிற் சென்றது கடிதம்மா.

61 சாந்தணி புளினத்தின் றடமுலை யுயர்கங்கை
காந்தின மணிமின்னக் கடிகமழ் கமலத்தில்
சேந்தொளி விரியுந்தெண் டிரையெனு நிமிர்கையால்
ஏந்தின ளொருதானே யேற்றின ளினிதப்பால்.

62 அத்திசை யுற்றைய னன்பனை முகநோக்கிச்
சித்திர கூடத்திற் சென்னெறி பகரென்னப்
பத்தியி னுயிரீயும் பரிவின னடிதாழா
உத்தம வடிநாயே னேதுவ துளதென்றான்.

63 நெறியிடு நெறிவல்லே னேடினென் வழுவாமல்
நறியன கனிகாயுந் நறவிவை தரவல்லேன்
உறைவிட மமைவிப்பே னொருநொடி வரையும்மை
பிறிகிலெ னுடனேகப் பெறுகுவெ னெனினாயேன்.

64 தீயன வகையாவுந் திசைதிசை செலநூறித்
தூயன வுறைகானந் துருவினென் வரவல்லேன்
மேயின பொருணுடித் தருகுவென் வினைமுற்றும்
ஏயின செய்வல்லே லிருளினு நெறிசெல்வேன்.

65 கல்லுவென் மலைமேலுங் கவலையின் முதல்யாவும்
செல்லுவெ னெறிதூரஞ் செறிபுன றரவல்லேன்
வில்லின முளெனொன்றும் வெருவலெ னிருபோதும்
மல்லினு முயர்தோளாய் மலரடி பிரியாதேன்.

66 திருவுள மெனின்மற்றென் சேனையு முடனேகொண்
டொருவலெ னிருபோது முறைகுவெ னுளராளுர்
மருவல ரெனின்முன்னே மாள்குவென் வசையில்லேன்
பொருவரு மணிமார்பா போதுவெ னுடனென்றான்.

67 அன்னவ னுரைகேளா வமலனு முரைநேர்வான்
என்னுயி ரனையாய்நீ யிளவலுன் னிளையானிந்
நன்னுத லவணின்கே ணளிர்கட னிலமெல்லாம்
உன்னுடை யதுநானுன் றொழிலுரி மையினுள்ளேன்.

68 துன்புள தெனினன்றோ சுகமுள ததுவன்றிப்
பின்புள திடைமன்னும் பிரிவுள தெனவுன்னேல்
முன்புளெ மொருநால்வே முடிவுள தெனவுன்னா
அன்புள வினிநாமோ ரைவர்க ளுளரானோம்.

69 படருற வுளனும்பி கானுறை பகலெல்லாம்
இடருறு பகையாபோ யானென வுரியாய்நீ
சுடருறு வடிவேலாய் சொன்முறை கடவேல்யான்
வடதிசை வருமந்நா ளின்னுழை வருகின்றேன்.

70 அங்குள கிளைகாவற் கமைதியி னுளனும்பி
இங்குள கிளைகாவற் கியாருள ருரைசெய்யாய்
உன்கிளை யெனதன்றோ வுறுதுய ருறலாமோ
என்கிளை யிதுகாவென் னேவலி னிதென்றான்.

71 பணிமொழி கடவாதான் பருவர லிகவாதான்
பிணிவுடை யவனென்னும் பிரிவினன் விடைகொண்டான்
அணியிழை மயிலோடு மையனு மிளையோனும்
திணிமர நிறைகானிற் சேணுற நெறிசென்றார்.

6-வது கங்கைப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 72க்-71.



## 7-வது. வனம்புகுபடலம்.



வனம்புகுந்த கதையைச் சொல்வதினால் வனம்புகுபடலமென்று இப் படலத்திற்குப் பேராயிற்று. வனத்துட்சென்ற இராமபத்திரர் மிருகங்களும் பக்ஷிகளும் விநோதமாய் இருப்பதைச் சீதாதேவிக்குக் காட்டிக்கொண்டே பரத்துவாஜமுனிவர் ஆச்சிரமத்திற்கு எழுந்தருள, அம்முனிவர் எதிர்கொண்டு வந்து உபசரித்து இவரைத் தமதாச்சிரமத்தினுள்ளே இட்டுக்கொண்டுபோய், இப்படித் தவவேடத்தோடு காட்டிற்கெழுந்தருளிய காரணம் என்னவென்று வினவி, அவர்சொல்லால் தெரிந்துகொண்டு கண்ணீர்மல்க விசனப்பட்டுத்தேறிக் காய்கனிமுதலியவற்றை அவரை அமுதுசெய்வித்திருக்கையில், பலமுனிவரும் அங்குவந்து சேர்ந்தனர். அப்போது இது கங்கையும் யமுனையும் சேருமிடமாகையால் வெகுநேர்த்தியாயிருக்கின்றது; வேண்டிய காய்கனிமுதலானவை கிடைக்கும்; இங்கேயே எங்களோடு இனிது வீற்றிருக்கவேண்டும் என்று அவர்கள் பிரார்த்திக்க, ஸ்ரீ இராமசந்திரர் சில காரணங்களைச்சொல்லி அதைத் தடுத்துவிட்டு அவர்கள் சொன்னவழியேசென்று இளையபெருமாள் கட்டியதொரு தெப்பத்தால் யமுனையாற்றைக் கடந்து அக்கரையேறிச் சித்திரகூடபருவதம் சேர்ந்தார் என்பது இப்படலத்தின் கதை.

1 வெயிலிள நிலவேபோல் விரிகதி ரிடைவீசப்
பயின்மர நிழலினப் பனிபுரை துளிமேகப்
புயறர விளமென்கால் பூவளை வியதெய்த
மயிலின நடமாடும் வழியினி யனபோனார்.

2 மன்றலின் மலிகோதை மயிலிய லிளமானே
இன்றுயில் வதிகோபத் தினம்விரி வனமெங்கும்
கொன்றைகள் சொரிபோதின் குப்பைகொள் குலமாலை
பொன்றிணி மணிமானப் பொலிவன புலகாணாய்.

3 பாணிள மிஞிறுகப் படுமழை பணையாக
நாணின தொகுபீலி கோலின நடமாடல்
பூணிய நினதாயல் பொலிவது பலகண்ணில்
காணிய வெனலாகுங் களிமயி லவைகாணாய்.

4 சேர்ந்தொளி விரிசெவ்வாய்ப் பைங்கிளி செங்கோலக்
காந்தளின் மலரேறிக் கோதுவ கவினாரும்
மாந்தளிர் நறுமேனி மங்கையின் மடமுன்கை
ஏந்தின வெனலாகு மியல்பின விவைகாணாய்.

5 நெய்ஞ்ஞிறை நெடுவேலின் னிறமுறு திறமுற்றிக்
கைஞ்ஞிறை நிமிர்கண்ணாய் கருதின னெனமென்றே
மெய்ஞ்ஞிறை விரிசாயல் கண்டுநின் விழிகண்டும்
மஞ்ஞையு மடமானும் வருவன பலகாணாய்.

6 பூவலர் குரவோடும் புடைதவழ் பிடவீனும்
மாவலர் சொரிசூழற் றுயிலெழு மயிலொன்றின்
தூவியின் மணநாறத் துணைபிரி பெடைதானச்
சேவலொ டுறலூடித் திரிவத னியல்காணாய்.

அருந்ததி யனையாளே யமிர்தினு மினியாளே
செருந்தியின் மலர்தாங்குஞ் செறிவிதழ் வனசோகம்
பொருந்தின களிவண்டிற் பொதிவன பொன்னூதும்
இருந்தைபி னெழுதீயொத் தெழுவன வியல்காணாய்.

*　　*　　*

குன்றுறை வயமாவின் குருளையு மிகுள்சிந்திப்
பின்றின தெனலாகும் பிடிதரு சிறுமாவும்
அன்றல பிறிவொல்லா வண்டர்த மனையாவின்
கன்றொடு விளையாடுங் களியன பலகாணாய்.

*　　*　　*

9 முற்றுறு முகைகிண்டி முயல்கில சிலதும்பி
விற்றிரு நுதன்மாதே யம்மலர் விரிகோங்கின்
துற்றுறு மலரேறித் துயில்வன சுடர் மின்னும்
பொற்றக டுறுநீலம் புனைவன பலகாணாய்.

10 கூடிய நறைவாயிற் கொண்டன விழிகொள்ளா
மூடிய களிமன்ன முடுகின நெறிகாணா
ஆடிய சிறைமாவண் டந்தரி னிசைமுன்னாப்
பாடிய பெடைகண்ணா வருவன பல்காணாய்.

11 கன்னிய ரணிகோலங் கற்றறி குநரென்னப்
பொன்னணி நிறவேங்கைக் கொம்பர்கள் புதுமென்பூ
அன்னமெ னடையாய்நின் னளகநன் னுதலப்ப
சின்னமென் மலர்மானச் சிந்துவ பலகாணாய்.

*　　*　　*

12 அடியிணை பொறைகல்லா வென்றுகொ லதரெங்கும்
இடையிடை மலர்சிந்து மினமா மிவைகாணாய்
கொடியினொ டிளவாசக் கொம்பர்கள் குயிலாயுன்
துடிபுரை இடைநாணித் துவள்வன வவைகாணாய்.

13 வாள்புரை விழியாயுன் மலரடி யணிமானத்
தாள்புரை தளிர்வைகுந் தகைஞிமி றிவைகாணாய்
கோள்புரை யிருள்வாசக் குழல்புரை மழைகாணாய்
தோள்புரை யிளவேயின் றொகுதிக ளவைகாணாய்.

14 பூநனை சினைதுன்றிப் புள்ளிடை யிடைபம்பி
நானிற நளிர்வல்லிக் கொடியள விலமல்கி
மானின மயில்மாலை குயிலினம் வருகானந்
தீநிகர் தொழிலாடைத் திரைபொரு வனபாராய்.

15 என்றனன் மடவாளோ டினிதினில் விளையாடிப்
பொன்றிணி திரடோளான் போயின னெறிபோதும்
சென்றது குடபாலத் திருமலை யிதுவன்றோ
என்றனன் வினைவென்றோர் மேவிட மெனலோடும்.

16 அருத்தியி னகம்விம்மு மன்பினி னெடுநாளில்
திருத்திய வினைமுற்றிற் றென்றனன் றெரிகின்றான்
பரத்துவ னெனுநாமப் பரமுனி பவநோயின்
மருத்துவ னணையானை வரவெதிர் கொளவந்தான்.

17 குடையின னிமிர்கோலன் குண்டிகை யினன்மூரிச்
சடையின னுரிமானின் சருமனன் மாநாரின்
உடையினன் மயிர்நாலு முருவின னெறிபேணும்
நடையினின் மறைநாலு நடநவி றருநாவான்.

18 செந்தழல் புரிசெல்வன் றிசைமுக முனிசெவ்வே
தந்தன வுயிரெல்லாந் தன்னுயி ரெனநல்கும்
அந்தண னுலகேழு மமையெனி னமரேசன்
உந்தியி னுதவாமே யுதவிடு தொழில்வல்லான்.

19 அம்முனி வரலோடு மனகனு மலர்தூவி
மும்முறை தொழுதானம் முதல்வனு மெதிர்புல்லி
இம்முறை யுருவோநா னெய்துவ தெனவுள்ளம்
விம்மின னிழிகண்ணீர் விழிவழி யுகநின்றான்.

20 ஆகவிட நெடிதாளு மமைதியை யதுதீரப்
புகவிட மெமதாகும் புரையிடை யிதுநாளில்
தகவில தவவேடந் தழுவினை வருவானேன்
இகலடு சிலைவீர விளையவ ளொடுமென்றான்.

21 உற்றுள பொருளெல்லா முணர்வுற வுரைசெய்தான்
நற்றவ முனியந்தோ விதிதரு நவையென்பான்
இற்றது செயலுண்டோ வினியென விடர்கொண்டான்
பெற்றில டவமந்தோ பெருநில மகளென்றான்.

22 துப்புறழ் துவர்வாயின் றாய்மொழி மயிலோடும்
அப்புறு கடல்ஞால மாளுதி கடிதென்று
ஒப்புறு மாசுன்னை யுயர்வன முறவேகென்
றெப்பரி சுயிருய்ந்தா னென்றுணை யவனென்றான்.

23 அல்லது முளவின்ப மனுகலு முளவன்றோ
கல்லவு முளசெய்யு நவைகளு முளவந்தோ
இல்லையோர் பயனுனின் றிடருறு மிதினென்னுப்
புல்லின னுடனேகொண் டினிதுறை புரைபுக்கான்.

24 புக்குறை விடநல்கிப் பூசனை முறைபேணித்
தக்கன கனிகாயுந் தந்துளை தருமன்பால்
தொக்கநன் முறைகூறித் தூயவ னுயிர்போலும்
மக்களி னருளுற்றான் மைந்தரு மகிழ்வுற்றார்.

25 வைகினர் கதிர்நாறு மளவையின் மறையோனும்
உய்குவெ மிவனோடியா முடனுறை தவினென்பான்
செய்தன வினிதெல்லாஞ் செல்வனை முகமுன்னு
கொய்குல மலர்மார்ப கூறுவ துளதென்றான்.

வேறு.

26 நிறையு நீர்மலர் நெடுங்கனி கிழங்குகாய் நேர்ந்த
குறையுந் தீயவை தூயவை குறைவில வெம்மோ
டுறையு மிவ்வழி யொருங்கினி துயர்தவ முயல்வார்க்
கிறையு மீதலா தினியதோ ரிடமரி தின்னும்.

27 கங்கை யாளொடு கரியவ ளுமகள் கலந்த
சங்க மாதலிற் பிரியலென் றுமனைச் செங்கண்
அங்க நாயக வயனுக்கு மரும்பெறற் றீர்த்தம்
எங்கள் போலியர் தரத்ததன் றிருத்திரீண் டென்றான்.

28 பூண்ட மாதவ னவ்வழி விரும்பினன் புகல
நீண்ட தன்றிது நிறைபுன லுட்டுக்கு நடுவாம்
மாண்ட சிந்தைய விவ்வழி வைகுவெ னென்றால்
ஈண்ட யாவரு நெருங்குவ ரென்றன னிராமன்.

29 ஆவ துள்ளதே யையகே ளாயிரண் டமைந்த
காவ தப்பொழிற் கப்புறங் கழிந்தபின் காண்டி
மேவு காதலின் வைகுதி விண்ணினு மினிதால்
தேவர் கைதொழுஞ் சித்திர கூடமென் றுளதால்.

30 என்று காதலி னேயின னடிதொழு தேத்திக்
கொன்றை வெய்ங்குழற் கோவலர் முல்லையுங் குடுமி
சென்று செங்கதிர்ச் செல்வனு மடைவுறச் சிறுமான்
கன்று நீர்நுகர் காளிந்தி யெனுநதி கண்டார்.

31 ஆறு கண்டன ரகமகிழ்ந் திறைஞ்சின ரறிந்து
நீறு தோய்மணி மேனியர் நெடும்புனல் படிந்தார்
வேறு மென்கனி கிழங்கினோ டுண்டுநீ ருண்டார்
ஏறி யேகுவ தெங்ஙன மென்றலு மிளையோன்.

32 வாங்கு வேய்ங்கழை துணித்தனன் மாலையின் கொடியால்
ஓங்கு தெப்பமொன் றமைத்ததி னும்பரி னுலம்போல்
வீங்கு தோளண்ணல் றேவியோ டினிதுவீற் றிருப்ப
நீங்கி னானந்த நெடுநதி யிருகையா னீந்தி.

33 ஆலை பாய்வய லயோத்திய ராண்டகைக் கிளையான்
மாலை மால்வரைத் தோளனு மந்தரந் திரிய
காலை வேலையைக் கடந்தது கழிந்தநீர் கடிதின்
மேலை வேலையிற் பாய்ந்தது மீண்டநீர் வெள்ளம்.

34 ஆனைய ரப்புன லேறின ரக்கரை யணைந்தார்
புனையும் வற்கலை பொற்பினர் நெடுநெறி போனார்
சினையு மூலமும் வேரும்வெந் திருநிலந் தீய்ந்து
நினையு நெஞ்சமுஞ் சுடுவதோர் நெடுஞ்சுர நேர்ந்தார்.

35 நீங்க லாற்றலள் சனகியென் றன்னவர் நினையா
ஓங்கு வெய்யவ னுடுபதி யெனக்கதி ருகுத்தான்
தாங்கு வெங்கடத் துலவைகள் தழைகொண்டு தழைத்த
பாங்கு வெங்கனற் பங்கய வனங்களாய்ப் பரந்த.

36 வறுத்து வித்திய வனையன வல்லயிற் பரற்கள்
பறித்து வித்திய மலரெனக் குளிர்ந்தன பசைந்த
இறுத் தெரிந்தன வல்லிக ளிளந்தளி ரீன்ற
கறுத்த வாளரா வெயிற்றினு ளமுதுகக் களித்த.

37 குழுமி மேகங்கள் குழு[illegible]ன குளிர்துளி கொணர்ந்த
மழுவில் வேடரு முனிவரின் முனிகில ருயிரைத்
தழுவி நின்றன பசியில பகையில தணிந்த
உழுவை யின்முலை மானிளங் கன்றுக ளுண்ட.

38 கல்ல ளைக்கிடந் தகடுவெந் தயர்கின்ற கதழ்பாம்
பல்ல லுற்றில வலைபுனற் கிடந்தன வனைய
வல்லை யுற்றவெய் புற்றொடு மெரிவன மணிவாழ்
புல்லெ யிற்றிளங் கன்னியர் தோளெனப் பொலிந்த.

39 படர்ந்தெ ழுந்தபுல் பசுநிறக் கம்பளம் பரப்பிக்
கிடந்த போன்றன கேகயந் தோகைகள் கிளர
மடந்தை மாரென நாடகம் வயின்றொறு நவின்ற
தொடர்ந்த பாணரிற் பாங்கிசை முரன்றன தும்பி.

40 கால மின்றியுங் கனிந்தன கனிநெடுங் கந்தம்
மூல மின்றியு முகிழ்த்தன நிலனுற முழுதும்
கோல மங்கைய ரொத்தன கொம்பர்க ளின்பச்
சீல மன்றியுஞ் செய்தவம் வேறுமொன் றுளதோ.

41 எயினர் தங்கிட மிருடிக ளிருப்பிட மெய்ந்த
வயின்வ யின்றொறு மணிநிறக் கோபங்கண் மலர்ந்த
பயின்ம ரந்தொறும் பரிந்தன பேடையைப் பயிலும்
குயிலி ரங்கின குருந்தநின் றரும்பின முருந்தம்.

42 பந்த ருட்புனை பாசறைப் பொருள்வயிற் பருவம்
தந்த கேள்வனை யுயிருறத் தழுவினர் பிரிந்த
கந்த வோதியர் சிந்தையிற் கொதிப்பதக் கழலோர்
வந்த போதவர் மனமெனக் குளிர்ந்ததவ் வனமே.

43 வெளிறு நீங்கிய பாலையை மெல்லெனப் போனார்
குளிறு வான்மதிக் குழவிதன் சூல்வயிற் றொளிப்பப்
பிளிறு மேகத்தைப் பிடியெனப் பெரும்பனைத் தடக்கைக்
களிறு நீட்டுமச் சித்திர கூடத்தைக் கண்டார்.

7-வது. வனம்புகுபடலம் முற்றிற்று ஆக திருவிருத்தம் 47ல்-43.

# 8-வது. சித்திரகூடப்படலம்.

அங்கிருந்து சித்திரகூட பருவதத்தைநோக்கிப் புறப்பட்ட இராமன், அம்மலையிலுண்டான பொலிவுகளை விவரமாய்ச் சீதாதேவிக்குக் காட்டிக்கொண்டே அம்மலைச்சாரலில் போக, அங்கிருந்த முனிவர் எதிர்கொண்டு அவர்களைத் தமது ஆச்சிரமத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் உபசரித்தார்கள். சூரியன் அஸ்தமயமாகி நிலவுவிளங்கிநிற்க, இனிமையில் அவ்விரவைப்போக்கி, இலக்குமணன் மண்ணினாலும், அக்காட்டுமரத்துண்டுகளாலும், மூங்கில்களாலும், தருப்பைப்புற் கற்றைகளாலும் தன் தமையன் வாஸம்செய்வதற்கேற்ற ஒரு சாலையும், அங்ஙனமே சீதாதேவி வாசம் செய்வதற்கு ஏற்றதாய்க் குங்குமங்கலந்த மண்களாலும் ஆற்றில்வரும் பொற்பொடிகளாலும் வினோதத்தோடு சாலையும் சமைத்துக்காட்ட, அதைக்கண்ட இராமன் மிகவும் உவந்து, இந்த வித்தையை நீ எங்கே கற்றாய்தம்பி என, இலக்குமணன் உமது அனுக்கிரகத்தாலே கற்றேனென்றதுகேட்டு உனக்கு நான் மிகவருத்தத்தைத் தந்தேனென்று சொல்ல, அதற்கு அவர் மனமொப்பாமல் வருத்தத்திற்கு மூலம் முன்னமே உண்டாயிற்றேயென்று அசம்மதியுரய்நிற்க, அதற்குச் சமாதானம்சொல்லி, இது மெத்தைமேடையினும் மேலானதென்று கொண்டாடி அவ்விடத்திலேயே தன் தம்பியோடும் மனைவியோடும் சவுக்கியமாக வசித்துக்கொண்டிருந்தார்.

---

1 நினையுந் தேவர்க்கு நமக்குமொத் தொருநெறி நின்ற
அனக னங்கண னாயிரம் பெயருடை யமலன்
சனகன் மாமட மயிற்கந்தச் சந்தனஞ் செறிந்த
கனக மால்வரை யியல்பெலாந் தெரிவுறக் காட்டும்.

2 வாளும் வேலும்விட் டளாயின வனையகண் மயிலே
தாளி னேலமு மாலமுந் தொடர்தரு சாரல்
நீள மாமலை துயில்வன நீருண்ட கமஞ்சூற்
காள மேகமு மாகமுந் தெரிகில காணாய்.

3 குருதி வாளெனச் செவ்வரி பரந்தகட் குயிலே
மருவி மால்வரை யும்பரிற் குதிக்கின்ற வருடை
சுருதி போற்றெளி மரகதக் கொழுஞ்சுடர் சுற்றப்
பருதி வானவன் பசும்பரி புரைவன பாராய்.

* * *

4 உவரி வாயன்றிப் பாற்கட லுதவிய வமுதே
துவரி நீண்மணித் தடந்தொறு மிடந்தொறுந் துவன்றிக்
கவரி பானிற வால்புடை பெயர்வன கடிதில்
பவள மால்வரை யருவியைப் பொருவிய பாராய்.

5 சலந்த லேக்கொண்ட சீயத்தாற் றனிமதக் கதமா
உலந்து விழ்தலிற் சிந்தின வுதிரத்தின் மடவார்
புலந்த காலையற் றுக்கன குங்குமப் பொதியில்
கலந்த முத்தென வேழமுந் திமைப்பன காணாய்.

6 நீண்ட மால்வரை மதியுற நெடுமுடி நிவர்ந்த
தூண்டு மாமணிச் சுடரதன் கற்றையிற் சொருக
மாண்ட வானிற வருவியம் மழவிடைப் பாகன்
காண்ட குஞ்சடைக் கங்கையை நிகர்ப்பன காணாய்.

7 தொட்ட மாசுணஞ் சுடரொளி மணியொடுந் தூவி
விட்ட சென்றன விடாமத மழையன வேழம்
வட்ட வேங்கையின் மலரொடுந் ததைந்தன வயங்கும்
பட்ட நெற்றியிற் சுற்றிய போல்வன பாராய்.

* * *

8 உருகு காதலிற் றழைகொண்டு மழலைவண் டோச்சி
முருகு நாறுசெந் தேனினை முழைநின்றும் வாங்கிப்
பெருகு சூலிளம் பிடிக்கொரு பிறைமருப் பியானை
பருக வாயினிற் கையினின் றளிப்பது பாராய்.

9 அளிக்கு நாயகன் மாயைபுக் கடங்கின னெனினும
களிப்பி லிந்தியத் தியோகியைக் காக்கிலை ன்றுபோல்
ஒளித்து நின்றுள ராயினு முருக்தெரி கின்ற
பளிக்க றைச்சில பரிமுக மாக்களைப் பாராய்.

10 ஆடு கின்றமா மயிலினு மழகிய குயிலே
கூடு கின்றிலர் கொடிச்சியர் தம்மனங் கொதிப்ப
ஊடு கின்றனர் கொழுநரை யுருகினர் நோக்கப்
பாடு கின்றன கின்னர மிதுனங்கள் பாராய்.

11 வில்லி வாங்கிய சிலையெனப் பொலிநுதல் விளக்கே
வல்லி தாங்கமழ் தாக்கலில் வழிந்திழி பிரசம்
தொல்லி வாங்கிய குன்றவர் கொடிநெடுங் கவலை
கல்லி வாங்கிய குழிகளை நிறைப்பன காணாய்.

12 ஒருவில் பெண்மையென் றுரைக்கின்ற வுடலினுக் குயிரே
மருவு காதலி னினிதுட னாடிய மந்தி
அருவி நீர்கொடு வீசத்தா னப்புறத் தேறிக்
கருவி மாமழை யுதிர்ப்பதோர் கடுவனைக் காணாய்.

13 வீறு பஞ்சின்றி யமுதநெய் மாட்டிய விளக்கே
சீறு வெங்கதிர் செறிந்தன போர்கல திரியா
மாறில் மண்டில நிரப்பிய மாணிக்க மணிக்கற்
பாறை மற்றொரு பரிதியிற் பொலிவன பாராய்.

14 சீல மின்னதென் றருந்ததிக் கருளிய திருவே
நீல வண்டினம் படிந்தெழ வளைந்துட னிமிர்வ
சோலை வேங்கையின் கொம்பர்கள் பொன்மலர் தூவிக்
காலி னிற்றொழு தெழுவன நிகர்ப்பன காணாய்.

15 விற்கொள் வாணுதல் விளங்கிழை யிளந்தளிர்க் கொழுந்
எற்கொள் மால்வரை யும்பரி னிரும்புனங் காக்கும் [தே
கொற்கொள் வேற்கணார் குரீஇயினத் தெறிகுரு விந்தக்
கூற்கள் வானிடை மீனென வீழ்வன் காணாய்.

16 வரிகொ ளொண்சிலை வயவர்தங் கணிச்சியின் மறிந்த
பரிய வாரகில் சுடநிமிர் பசும்புகைப் படலம்
ஆரிய வேதிய ராகுதிப் புகையொடு மளவிக்
கரிய மால்வரைக் கொழுந்தெனப் படர்வன காணாய்.

17 நான நாண்மலர் நறையகி லூவிதே லூறும்
சோலை வார்குழற் சுமைபொறு திடுகிடைத் தோகாய்
வான யாற்றுமீன் மலர்ந்தன வெனப்புனல் வறந்த
கான யாறுகள் கணமணி யிமைப்பன காணாய்.

18 மஞ்ச ளாவிய மாணிக்கப் பாறையில் மறைவ
செஞ்செ வேநெடு மரகதப் பாறையிற் றெரிவ
விஞ்சை நாடியர் கொழுநரோ டேடினர் விமலப்
பஞ்ச ளாவிய சீறடிச் சுவடுகள் பாராய்.

19 சுழித்த செம்பொனின் றுளைபுரை யுந்தியின் றுணையே
கொழித்த மாமணி யருவியோ டிழிவன கோலம்
அழித்து மேவிய வரம்பைய ரறல்புரை கூந்தல்
கழித்து நீக்கிய கற்பக நறுமலர் காணாய்.

20 அறைக ழற்சிலைக் குன்றவ ரகன்புனங் காவற்
பறையெ டுத்தொரு கடுவனின் றடிப்பது பாராய்
பிறையை யெட்டினள் பிடிந்திதற் கிதுபிழை யென்று
கறைது டைக்குறு பேதையோர் கொடிச்சியைக் காணாய்.

21 அடுத்த பற்பக லன்பரிற் பிரிந்தவ ரென்ப
தெடுத்து நந்தமக் கியம்புவ வெனக்கரிற் கிருண்ட
தொடுத்த மாதவிச் சூழலிற் சூரர மகளிர்
படுத்து வைகிய பல்லவ சயனங்கள் பாராய்.

22 நினைந்த போதினு மயிர்தொக்கு நெரிமை நிறைதேன்
வனைந்த வேங்கையிற் கோங்கினில் வயின்றொறுந் தொடுத்துக்
குனிந்த வூசலிற் கொடிச்சிய ரெடுத்தவின் குறிஞ்சி
கனிந்த பாடல்கேட் டசுணமா வருவன காணாய்.

23 இலவு மிந்திர கோபமும் புரையித ழினியோய்
அலவு றுண்டுளி யருவிநீ ரரம்பைய ராடக்
கலவை சாந்துசெங் குங்குமங் கற்பகந் தொடுத்த
பலவுந் தோய்தலிற் பரிமளங் கமழ்வன பாராய்.

24 மடந்தை மார்களிற் றிலதமே மணிநிறத் திணிகல்
தொடர்ந்த பாறையில் வேயினஞ் சொரிகதிர் முத்தம்
இடந்தொ றுங்கிடந் திமைப்பன வெக்கிளஞ் செக்கர்
படர்ந்த வானிடைத் தாரகை நிகர்ப்பன பாராய்.

25 குழுவு நுண்டொளை வேயினுங் குறிநரம் பெறிவுற்
றெழுவு தண்டமிழ் யாழினு மினியசொற் கிளியே
முழுவு தும்மலர் விரியநாண் முருக்கிடை மிடைந்த
பழுவம் வெங்கனல் கதுவிய தொப்பன பாராய்.

26 வளைகள் காந்தளிற் பெய்தன வளையகைம் மயிலே
தொளைகொ டாழ்தடக் கைநெடுந் துருத்தியிற் றாக்கி
யளவில் மூப்பின ரருந்தவர்க் கருவிநீர் கொணர்ந்து
களப மால்கரி குண்டிகை சொரிவன காணாய்.

27 வடுவின் மாவகி ரிவையெனப் பொலிந்தகண் மயிலே
இடுகு கண்ணின ரிடருறு மூப்பின ரேக
நெடுகு கூனல்வா னீட்டின வுருகுறு நெஞ்சக்
கடுவன் மாதவர்க் கருநெறி காட்டுவ காணாய்.

பாந்த டேரிவை பழிபடப் பரந்தபே ரல்குல்
ஏந்து நூன்மணி மார்பின ராகுதிக் கியைந்த
கூந்தன் மென்மயில் குறுகின நெடுஞ்சிறை கோலி
காந்து குண்டத்தின் வயங்கெரி யெழுப்புவ காணாய்.

29 அலம்பு வார்குழ லாய்மயிற் பெண்ணருங் கலமே
நலம்பெய் வேதியர் மார்பினுக் கியைவுற நாடி
சிலம்பி பஞ்சினிற் சிக்கறத் தெரிந்தநூல் தேமாழ்
பலம்பெய் மந்திக ளுடன்வந்து கொடுப்பன பாராய்.

30 தெரிவை மார்க்கொரு கட்டளை யெனச்செய்த திருவே
பெரிய் மீக்களிற் பலாக்களிற் பிறங்கிய வாழை
அழிய மாக்கனி கடுவன்க ளன்புகொண் டளிப்பக்
கரிய மாகிழங் ககழ்ந்தன கொணர்வன காணாய்.

31 ஐவ னக்குரல் திணைக்கதி ரிறுங்கவை யவரை
மெய்வ ணக்குறு வேயின மீன்றமெல் லரிசி
பொய்வ ணக்கிய மாதவர் புரைதொறும் புகுந்துன்
கைவ ணத்தவாய்க் கிள்ளைதந் தளிப்பன காணாய்.

32 இடிகொள் வேழத்தை யெயிற்றொடு மெடுத்துடன் விழுங்கும்
கடிய மாசுணங் கற்றறிந் தவரென வடங்கி
சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாமிதித் தேறப்
படிக டாமெனத் தாழ்வரை கிடப்பன பாராய்.

33 அசும்பு பாய்வரை யருந்தவ முடித்தவர் துணைக்கட்
டசும்பு வேய்ந்தவ ரொத்தவர் தமக்குவிண் டருவான்
விசும்பு தூர்ப்பன வாமென வெயிலென விளங்கும்
பசும்பொன் மானங்கள் போவன வருவன பாராய்.

34 இனைய யாவையு மேந்திழைக் கியம்பினன் காட்டி
அனைய மால்வரை யருந்தவ ரெதிர்வர வணங்கி
வினையி னீங்கிய வேதியர் விருந்தின னானான்
மனையில் மெய்யெனு மாதவம் புரிந்தவன் மைந்தன்.

வேறு.

35 மாவிய னுதயமாந் தாளப வானவன்
மேவிய பகையிரு ளவுணர் வீய்ந்தக
காவியல் குடவரைக் கால நேமிமேல்
ஏவிய திகிரிபோ லிரவி யேகினான்.

36 சக்கரந் தானவ னுடலிற் றாக்குற
எக்கிய சோரியிற் பரந்த தெங்கணும்
செக்கரத் தீயவன் வாயிற் றீர்ந்துவே
றுக்கவான் றனியெயி றொத்த திந்துவே.

37 ஆனன மகளிருக் களித்த தாமரைப்
பூநனி முகிழ்த்தன புலரி போனபின்
மீனென விளங்கிய வெள்ளி யாம்பல்வீ
வானென மணித்தட மலர்ந்த வெங்குமே.

38 மந்தியுங் கடுவனு மாங்கு ணேக்கின
தந்தியும் பிடிகளுந் தடங்க ணேக்கின
சிந்தையில் சகுந்தங்க ணீள நோக்கின
அந்திமை நோக்கிஞ னறிவை நோக்கினன்.

39 மொய்யுறு நறுமலர் முகிழ்த்த வாஞ்சில
மையுறு நறுமலர் மலர்ந்த வாஞ்சில
ஐயனே டிளவற்கு மமுத னுளுக்கும்
கைகளுங் கண்களுங் கமலம் போன்றவே.

40 மாலைவந் தகன்றபின் மருங்கி லாளொடும்
வேலைவந் துறைவிட மேய தாமெனக்
கோலைவந் துமிழ்சிலைத் தம்பி கோலிய
சாலைவந் தெய்தினன் றவத்தி னெய்தினன்.

41 நெடுங்கழைக் குறுந்துணி நிறுவி மேனிரைத்
தொடுங்கலி னெடுமுக டொழுக்கி யூழுற
இடுங்கலில் கைவிசித் தேற்றி யெங்கணும்
முடங்கலில் வரிச்சுமேல் விரிச்சு மூட்டியே.

42 தேக்கடைப் படலையிற் செறிவு செய்துபின்
பூக்கிளர் நாணலின் புல்லு வேய்ந்துகீழ்
தூக்கிய வேய்களிற் சுவருஞ் சுற்றுறப்
போக்கிம ணிறந்தவை புனலிற் றீற்றியே.

43 வேறிட மியற்றினன் மிதிலை நாடிக்கும்
கூறின நெறிமுறை குயிற்றிக் குங்குமச்
சேறுகொண் டழகுறத் திருத்தித் திண்சுவர்
ஆறிடு மணியொடுங் கனக மப்பியே.

44 மயிலுடைப் பீலியின் விதான மேல்வகுத்
தயிலுடைச் சுரிகையா லருகு தூக்கறுத்
தெயிலிளங் கழைகளா லியற்றி யாறிடு
செயலுடைப் புதுமலர் பொறப்பச் சிந்தியே.

45 இன்னண மிளையவ னிழைத்த சாலையில்
பொன்னிறத் திருவொடுங் குடிபுக் கானரோ
நன்னெடுந் திசைமுக னகத்து நம்மனோர்க்
குன்னரு முயிருளு மொக்க வைகுவான்.

வேறு.

46 மாய நீங்கிய சிந்தனை மாமறை
தூய பாற்கடல் வைகுந்தஞ் சொல்லலாம்
ஆய சாலை யரும்பெற லன்பினன்
நேய நெஞ்சின் விரும்பி நிரப்பினான்.

47 மேவு கான மிதிலையர் கோன்மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன
தாவி லெம்பிகை சாலை சமைத்தன
யாவை யாதுமி லார்க்கியை யாதவே.

48 என்று சிந்தித் திளையவற் பார்த்திரு
குன்று போலக் குவவிய தோளினாய்
என்று கற்றனை நீயிது போலென்றான்
துன்று தாமரைக் கண்பனி சோர்கின்றான்.

49 அடருஞ் செல்வ மளித்தவ னாணையால்
படரு நல்லறம் பாலித் திரவியில்
சுடரு மெய்ப்புகழ் சூடினை னென்பதென்
இடரு னக்கிழைத் தேனெடு நாளென்றான்.

50 அந்த வாய்மொழி யைய னியம்பலும்
நொந்த சிந்தை யிளையவ னோக்கினால்
எந்தை காண்டி யிடரினுக் கங்குராம்
முந்தி வந்து முளைத்ததன் றோவென்றான்.

51 ஆக செய்தக்க தில்லை யறத்தினின்
றேக லென்பத் தரிதென்று மெண்ணினான்
ஓகை கொண்டவ னுள்ளிடர் நோக்கினான்
சோக பங்கந் துடைப்பரி தாலெனா.

52 பின்னுந் தம்பியை நோக்கிப் பெரியவன்
மன்னுஞ் செல்வத்திற் குண்டுவ ரம்பிதற்
கென்ன கேடுண்டிவ் வெல்லையி லின்பத்தை
உன்னு மேல்வரு மூறியத் தோடென்றான்.

53 தேற்றித் தம்பியைத் தேவருங் கைதொழ
நோற்றி ருந்தன ஞெஞ்சிலே யோனிப்பால்
ஆற்றல் மாதவ ஞணையிற் போனவர்
கூற்றி னுற்றது கூறலுற் றுமரோ.

8-வது. சித்திரகூடப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 56ல்-53.

## 9—வது. பள்ளி அடைப்படலம்.

பள்ளி என்பது அரமனை, அதைப் பரதன் அடைந்து நடந்தகாரியத்தைச் சொல்வதாதலால் இப்படலத்துக்கு அப்பெயர் வந்தது. ஸ்ரீராமர் சித்திரகூடமடைந்திருக்கையில் வசிட்டமாமுனிவர் பரதரிடத்துக்குத் தூதனையனுப்ப, அவர்கள் ஓலையைக்கொண்டு பரதருக்குக் கொடுத்தார்கள்; அதைப் பரதர் பார்த்ததும் இராமர்திருவடியைக் காணலாமென்கிற ஆசைபொங்கிச் சேனையைக் கூட்டிக்கொண்டு சத்துருக்கனரோடு கேகயநாடுவிட்டுப் புறப்பட்டுக் கோசலநாடுவருகையில், அந்நாடு முன்போலிராமல் பொலிவற்று மங்கியிருப்பதையும், அயோத்திமாநகரும் அப்படியே சந்தோஷவிலாசமற்று உறங்கிக்கிடப்பதையுங்கண்டு, நாம் எதுவோ கெட்டசெய்தி கேட்போமென்று மனதில் எண்ணிக்கொண்டு அந்தப்புறநுழைந்து, தந்தையைக் காணாமல் அவர் எங்கேயென்று வினவ, சுவர்க்கம்போனாரென்று கைகேயி தைரியமாய்ச் சொன்னதைக் குறித்து அவளை நிந்தித்து, அதன் காரணத்தை விசாரித்துத் தெரிந்துகொண்டு கீழேவிழுந்து மிகவும் பிரலாபித்து, தனக்கு ராஜ்யத்தைப் பற்றித் தன் தாய்செய்த தீமைகளுக்காக அவளை வெருவாய் அவமதித்து, தன்னையும் வெறுத்துக்கொண்டு கோசலாதேவியினிடம்சென்று நிற்க, அவள் இது நீ அறிந்தகாரியமன்றோ என்னக்கேட்டு அவள் பாதங்களில் வீழ்ந்து, இது யான் அறிந்து நடந்ததானால் இன்னின்ன பாதகங்களைச் செய்தவர் போகும் நரகத்திலே நானும் போகக்கடவேனென்று அந்தந்தக் கொடும்பாதகங்களை எடுத்துச்சொல்லிப் பிரதிக்கினைசெய்தார்; அந்தத் தேவியும் சந்தேகம் நீங்கியிருந்தாள். அப்போது வசிட்டமாமுனிவர் வந்து பரதனை நோக்கி இறந்தவர்க்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யவேண்டுமே என்று சொல்ல, அதுகேட்டுத் தசரதமகாராஜாவைச் சிவிகையிலிட்டு வெகு வைபவமாகச் சரயுநதிக்குக் கொண்டுபோய்ச் சடங்குசெய்ய எத்தனிக்க, வசிட்டர் பரதனைநோக்கி, உம்மை மகாராஜா துறந்தேனென்றாராகை

யால், நீர் கருமம்செய்வது தகுதியல்லவென்று சொல்லக்கேட்டு மிகவும் மனம் நொந்து சத்துருக்கனனைக்கொண்டு கருமம்முடித்துநிற்கையில், அரசரில்லாமல் ராஜ்யமிருப்பது கூடாதாதலால் நீர் ஆளவேண்டுமென்று வசிட்டரும் மந்திரிமுதலானோரும் சொன்னார்கள் என்பது இப்படலத்தின் கதை.



1 பொருவி றூதுவர் போயினர் பொய்யிலார்
இரவு நன்பக லுங்கடி தேகினர்
பாதன் கோயிலுற் றார்படி காரிரெம்
வரவு சொல்லுதிர் மன்னவற் கேயென்றார்.

2 தூதர் வந்தன ருந்தைசொல் லோடெனக்
காதல் முந்திக் களிக்கின்ற சிந்தையான்
போது கென்னெனப் புக்கவர் கைதொழத்
தீதி லன்கொல் திருமுடி யோனென்றான்.

3 வலிய னென்றவர் கூற மகிழ்ந்தனன்
இலைகொள் பூணிளங் கோனெம்பி ராமனொடும்
உலைவில் செல்வத்த னேவென வுண்டெனத்
தலையி னேந்தினன் றாழ்தடக் கைகளே.

4 மற்றுஞ் சுற்றத்து ளார்க்கும் வரன்முறை
உற்ற தன்மை வினவி யுவந்தபின்
இற்ற தாகு மெழுதரு மேனியாய்
கொற்ற வன்றன் றிருமுகங் கொள்கென்றார்.

5 என்று கூறலு மேத்தி யிறைஞ்சினன்
பொன்றி ணிந்த பொருவிற் றடக்கையால்
நின்று வாங்கி யுருகிய நெஞ்சினன்
துன்று நாண்மலர்ச் சென்னியிற் சூடினன்.

6 சூடிச் சந்தனந் தோய்த்துடை சுற்றுமண்
மூடு தோட்டின் முடங்க னிமிர்த்தனன்
ஈடு நோக்கிவந் தெய்திய தூதர்க்குக்
கோடி மேலு நிதியங் கொடுத்தனன்.

7 வாணி லாநகை தோன்ற மயிர்ப்புறம்
பூண வானுயர் காதலிற் பொங்கினன்
தாணி லாமலர் தூவினன் றம்முனைக்
காண லாமெனு மாசை கடாவவே.

8 எழுக சேனையென் றேவின னெய்தினன்
தொழுது கேகயர் கோமகன் சொல்லொடும்
தழுவு தேரிடைத் தம்பியொ டேறினன்
பொழுது நாளுங் குறித்திலன் போயினன்.

9 யானை சுற்றின தேரினைத் தீண்டின
மான வேந்தர் குழுவினர் வாளுடைத்
தானை சூழ்ந்தன சங்கு முரன்றன
மீன வேலையின் விம்மின பேரியே.

10 கொடிநெ ருங்கின தொங்கல் குழுமின
வடிநெ டுங்கண் மடந்தைய ரூர்மடப்
பிடிது வன்றின பூணொளி பேர்ந்தன
இடிது வன்றின மின்னென வெங்குமே.

11 பண்டி யங்கள் பரந்தன பல்லியம்
கொண்டி யம்பின கொண்டலிற் கோதையில்
வண்டி யம்பின வாளியின் வாவுறும்
செண்டி யங்கு பரியுஞ் செறிந்தவே.

12 துளைமு கத்திற் சுருதி விளம்பின
இளைமு கத்தின னும்பரி னேகிட
விளைமு கத்தனல் வேலையின் மீதுசெல்
வளைமு கத்தன வாசியும் வந்தவே.

13 வில்லின் வேதியர் வாள்செறி வித்தகர்
மல்லின் மல்லர் சுரிகையின் வல்லவர்
கொல்லும் வேல்குந்தங் கற்றுயர் கொற்றவர்
தொல்லை வாரணப் பாகருஞ் சுற்றினர்.

14 எறிப கட்டின மாடுக ளேற்றைமா
குறிகொள் கோழி சிவல்குறும் பூழ்நெடும்
பொறிம யிர்க்கவு தாரிகள் போற்றும்
நெறியின் மாக்களு முந்தி நெருங்கினார்.

15 நிறைந்த மாந்தர் நெருங்கினர் நெஞ்சினில்
பறந்து போதுங்கொ லென்று பதைக்கின்றார்
பிறந்து தேவ ருணர்ந்து பெயர்ந்துமு
னுறைந்த வானுறு வார்களை யொக்கின்றார்.

16 ஊன ளைந்த வுடற்குயி ராமென
தான ளைந்து தழுவின தண்ணுமை
தேன ளைந்து செவியுற வார்த்தென
வான ளைந்தது மாகதர் பாடலே.

17 ஊறு கொண்ட முரசுமி ழோதையை
வீறு கொண்டன வேதியர் வாழ்த்தொலி
ஏறு கொண்டெழு மல்ல ரிடிப்பினை
மாறு கொண்டன வந்திக ரேத்தரோ.

18 ஆறுங் கானு மகன்மலை யுங்கடந்
தேறி யேழ்பக லீந்திப்பி னெந்திரத்
தூறு பாகு மடையுடைத் தொண்முளை
நாறு பாய்வயற் கோசலை நண்ணினான்.

19 ஏர்து றந்த வயலின மைந்தர்தோள்
தார்து றந்தன தண்டலை நெல்லினும்
நீர்து றந்தன தாமரை நீத்தெனப்
பார்து றந்தனள் பங்கயச் செல்வியே.

20 பிதிர்ந்து சாறு பெருந்துறை மண்டிடச்
சிதிர்ந்து சிந்தி யழிந்தன தேங்கனி
முதிர்ந்து கொய்யுந ரின்மையின் மூக்குமிழ்த்
துதிர்ந்து லர்ந்தன வொண்மல ரீட்டமும்.

21 ஏய்ந்த கால மிதுவிதற் காமென
ஆய்ந்து புள்ள ரரிகுன ரின்மையால்
பாய்ந்த சூதப் பசுநறுந் தேறலால்
சாய்ந்தொ சிந்து முளைத்தன சாலியே.

22 எட்கு லாமல ரேசிய நாசியர்
புட்கு லாவயல் பூசற் கடைசியர்
கட்கி லார்களை காதற் கொழுநரோ
டொட்க லாமுடை யாரி னுயங்கினர்.

23 ஓது கின்றில கிள்ளையு மோதியர்
தூது சென்றில வந்தில தோழர்பால்
மோது கின்றில பேரி முழாவிழா
போது கின்றில பொன்னணி வீதியே.

24 பாட னீத்தன பண்டொடர் பண்குழல்
ஆட னீத்த வரங்கொ டகன்புனல்
சூட னீத்தன சூடிகை சூளிகை
மாட நீத்தன மங்கல வள்ளையே.

25 நகையி ழந்தன வாண்முக நாறகிற்
புகையி ழந்தன மாளிகை பொங்கழற்
சிகையி ழந்தன தீவிகை தேமலர்த்
தொகையி ழந்தன தோகைய ரோதியே.

26 அலர்ந்த பைங்கூ ழகன்குளக் கீழன
மலர்ந்த வாயிற் புனல்வழங் காமையால்
உலர்ந்த வன்க ணுலோபர் கடைத்தலை
புலர்ந்து நிற்கும் பரிசிலர் போலவே.

27 நாவி நீத்தரு நல்வளந் துன்னிய
பூவி நீத்தென நாடு பொலிவொரீஇ
தேவி நீத்தருஞ் சேணெறி தாவிட
ஆவி நீத்த வுடலென லாயதே.

28 என்ற நாட்டினை நோக்கி யிடருழந்
தொன்று முற்ற வுணர்ந்தில னுன்னுவான்
சென்று கேட்பதோர் தீங்குள தாமெனு
நின்று நின்று நெடிதுயிர்த் தானரோ.

29 மீண்டு மெய்தியம் மெய்யெனு நல்லணி
பூண்ட வேந்தன் றிருமகன் புந்திதான்
றூண்டு தேரினு முந்துறத் தூங்குவான்
நீண்ட வாயி னெடுநகர் நோக்கினான்.

30 அண்ட முற்றுந் திரிந்தயர்ந் தாயமு
தூண்டு போதியென் றொண்கதிர்ச் செல்வனை
விண்டொ டார்ந்து விலக்குவ போல்வன
கண்டி லன்கொடி யின்னெடுங் கானமே.

31 ஈட்டு நன்புகழ்க் கீட்டிய யாவையும்
வேட்ட வேட்டவர் கொண்மின் விரைந்தென
கோட்டி மாக்களைக் கூவுவ போல்வன
கேட்டி லன்முர சின்கிள ரோதையே.

32 கள்ளை மாக்கவர் கண்ணியன் கண்டிலன்
பிள்ளை மாக்களி றும்பிடி யீட்டமும்
வள்ளை மாக்க ளிதியும் வயிரியர்
கொள்ளை மாக்களிற் கொண்டன ரேகவே.

33 காவன் மன்னவன் கான்முளை கண்டிலன்
ஆவு மாவு மழிகவுள் வேழமும்
மேவு காத னிதியும் வெறுக்கையும்
பூவின் வானவர் கொண்டனர் போகவே.

34 சூழ மைந்த சுரும்பு நரம்புந்தம்
ஏழ மைந்த விசையிசை யாமையால்
மாழை யுண்கண் மயிலெனுஞ் சாயலார்
கூழை போன்ற பொருனர் குழாங்களே.

35 தேரு மாவுங் களிறுஞ் சிவிகையும்
ஊரும் பண்டியு மூருன ரின்மையால்
யாரு மின்றி யெழிலழி வீதிகள்
வாரி யின்றியல் வாலுக வாற்றினே.

36 அன்ன தன்மை யகநகர் நோக்கினன்
பின்னை யப்பெரி யோர்தம் பெருந்தகை
மன்னன் வைகும் வளநகர் போலுமீ
தென்ன தன்மை யிளையவ னேயென்றான்.

37 வேற்ற டங்கலர் விண்ணுற வென்றிடும்
கூற்ற டங்கப் பொருநெடுங் கோளினாய்
சேற்ற டங்கட் டிருவொடு நீங்கிய
பாற்ற டங்கட லொத்தது பாரென்றான்.

38 குரும ணிப்பூ ணரசிளங் கோளரி
இருகை கூப்பி யிறைஞ்சின னெய்திய
தொருவ கைத்தன் றுறுதுய ரூழிவாழ்
திருந கர்த்திரு தீர்ந்தன ளாமென்றான்.

39 அனைய வேலையி லக்கடைத் தோரண
மனையி னீணெடு மங்கல வீதிகள்
நினையு மாத்திரத் தேகிய நேமியான்
தனைய னுந்தந்தை சார்விட மேவினான்.

40 விருப்பி னெய்தினன் வெந்திறல் வேந்தனை
இருப்பு நல்லிட மெங்கணுங் கண்டிலன்
அருப்ப மன்றிதென் றையுற வெய்தினான்
பொருப்பு நாண வுயர்ந்த புயத்தினான்.

41 ஆய காலையி லையனை நாடித்தன்
தூய கையிற் றொழுதுறு வான்றனை
கூய ளன்னை குறுகுதி யீண்டென
வேய்கொ டோளி யொருத்தி விளம்பினாள்.

42 வந்து தாயை யடியில் வணங்கலும்
சிந்தை யாரத் தழுவின ளதிலர்
எந்தை யென்னைய செங்கைய ரென்றனள்
அந்த மில்குணத் தானும தாமென்றான்.

வேறு.

43 மூண்டெழு காதலான் முளரித் தாடொழ
வேண்டினெ னெய்தினெ னுள்ளம் விம்முமால்
ஆண்டகை நெடுமுடி யரசர் கோமகன்
யாண்டையான் பணித்திரென் றிருகை கூப்பினான்.

44 ஆனவ னுரைசெய வழிவில் சிந்தையாள்
தானவர் வலிதவ நிமிர்ந்த தானையத்
தேனமர் தெரியலான் றேவர் கைதொழ
வானக மெய்தினான் வருந்த லீயென்றாள்.

45 எறிந்தன கடியசொல் செவியு ளெய்தலும்
நெறிந்தலர் குஞ்சியா னெடிது வீழ்ந்தனன்
அறிந்தில னுயிர்த்தில னசனி யேற்றினால்
மறிந்துயர் மராமர மண்ணுற் றென்னவே.

46 வாயொளி மழுங்கத்தன் மலர்ந்த தாமரை
ஆயலர் நயனங்க ளருவி சோர்தர
தீயெரி செவியில்வைத் தனைய தீயசொல்
நீயல துரைசெய நினைப்ப ரோவென்றான்.

47 எழுந்தன னேங்கின னிரங்கிப் பின்னரும்
விழுந்தனன் விம்மினன் வெய்து யிர்த்தனன்
அழிந்தன னரற்றின னரற்றி யின்னன
மொழிந்தனன் பின்னரு முருகிற் செவ்வியான்.

48 அறந்தனை வேரறுத் த[illegible]கொன்றனை
சிறந்தநின் றண்ணளித் திருவைத் தேசழித்
திறந்தனை யாமெனி லிறைவ நீதியை
மறந்தனை யுணக்கிதின் மாசு மேலு[illegible]ர.

49 சினக்குறும் பெறிந்தெழு காமத் தீயவித்
தினக்குறும் பியானையு மேற்றி யாவர்க்கும்
மனக்குறு நெறிசெலும் வள்ளி யோய்மறந்
துனக்குறு நெறிசெல லொழுக்கின் பாலதோ.

50 முதலவன் முதலிய முந்தை யோர்பழங்
கதையையும் புதுக்கிய தலைவன் கண்ணுடை
நுதலவன் சிலைவிசி ஞெண்மை நாறிய
புதல்வனை யெங்ஙனம் பிரிந்து போயினாய்.

51 செவ்வழி யுருட்டிய திகிரி மன்னவ
வெவ்வழி மாபினு மிரவ லாளர்தா
மிவ்வழி யுலகினி லின்மை நண்பினோர்
அவ்வழி யுலகினு முளர்கொ லோவய்யா.

52 பற்பக னிழற்றுநின் கவிகை பாய்நிழல்
நிற்பன பல்லுயி ருணங்க நீநெடுங்
கற்பக நறுநிழல் காத லித்தியோ
மற்பக மலர்ந்ததோண் மன்னர் மன்னனே.

53 இம்பர்நின் றேகினை இருக்குஞ் சார்பிழந்
தும்பர்வந் துன்கழ லொதுங்கி னார்கொலாம்
சம்பர னனையவத் தானைத் தானவர்
அம்பரத் தின்னமு முளர்கொ லாமையா.

54 இயங்கெழு தானைய ரிறுத்த மாத்திரை
உயங்கலின் மறையவர்க் குதவி யும்பரின்
அயங்கெழு வேள்வியோ டமரர்க் காக்கிய
வயங்கெரி வளர்த்தனை வைக வல்லையோ.

55 ஏழுயர் மதகளிற் [illegible]வ வேகினை
வாழிய [illegible]ரியவன் வறியன் கையெனப்
பாழியம் [illegible]யுத்துநின் பணியி னீங்கிலா
ஆழியை [illegible]னியவற் களிக்க வெண்ணியோ.

56 பற்றிலே தவத்தினிற் பயந்த மைந்தற்கு
முற்றுல களித்தது முறையி னெய்திய
கொற்றவன் முடிமணக் கோலங் காணவும்
பெற்றிலே போலுநின் பெரிய கண்களால்.

57 ஆற்றல னின்னன பன்னி யாவலித்
தாற்றுறு கண்ணின னுருகு வான்றனைத்
தேற்றின னொருவகை சிறிது தேறிய
கூற்றுறழ் வரிசிலைக் குருசில் கூறுவான்.

58 எந்தையும் யாயுமெம் பிரானு மெம்முனும்
அந்தமில் பெருங்குணத் திராம னாதலால்
வந்தனை யவன்கழல் வைத்த போதலால்
சிந்தைவெங் கொடுந்துயர் தீர்க லாதென்றான்.

59 அவ்வுரை கேட்டலு மசனி யேறென
வெவ்வுரை வல்லவள் மீட்டுங் கூறுவாள்
தெவ்வடு சிலையினாய் தேவி தம்பியென்
றிவ்விரு வோரொடுங் கானத் தானென்றாள்.

60 வனத்தின னென்றவ ளிசைத்த மாற்றத்தை
நினைத்தன னிருந்தன னெருப்புண் டானென
வினைத்திறம் யாதினி விளைவ தின்னமும்
எனைத்துள கேட்பன துன்பம் யானென்றான்.

61 எங்கினன் விம்மலோ டிருந்த வேந்தலப்
பூங்கழற் காலவன் வனத்துப் போயது
ஈங்கிழைத் ததனினோ தெய்வஞ் சீறியோ
ஓங்கிய விதியினோ யாதி னோவென.

62 தீயன விராமனே செய்யு மேலவை
தாய்செய லல்லவோ தலத்து ளோர்க்கெலாம்
போயது தாதைவிண் புக்க பின்னரோ
ஆயதன் முன்னரோ வருளு வீரென்றான்.

63 குருக்களை யிகழ்தலி னன்று கூறிய
செருக்கினா லன்றொரு தெய்வத் தாலுமன்
றருக்கனே யனையவவ் வரசர் கோமகன்
இருக்கவே வனத்தவ னேகி னானென்றாள்.

64 குற்றமொன் றில்லையேல் கொதித்து வேறுளோர்
செற்றது மில்லையே றெய்வந் தாலன்றேல்
பெற்றவ னிருக்கவே பிள்ளை கான்புக
உற்றதென் பின்னவ னுலர்ந்த தென்னென்றான்.

65 வாக்கினால் வரந்தரக் கொண்டு மைந்தனைப்
போக்கினேன் வனத்திடைப் போக்கிப் பாருனைக்
காக்கினே னவனது பொறுக்க லாமையால்
நீக்கினான் றன்னுயிர் நேமி வேந்தென்றாள்.

66 சூடின மலர்க்காஞ் சொல்லின் முன்செவி
கூடின புருவங்கள் குதித்துக் கூத்துநின்
றாடின வுயிர்ப்பினோ டழற்கொ ழுந்துகள்
ஓடின வுமிழ்ந்தன வுதிரங் கண்களே.

67 துடித்தன கபோலங்கள் சுற்றுந் தீச்சுடர்
பொடித்தன மயிர்த்தொளை புகையும் போர்த்தது
மடித்தது வாய்நெடு மழைக்கை மண்பக
வடித்தன வொன்றொடொன் றசனி யஞ்சவே.

68 பாதங்கள் பெயர்தொறும் பாரு மேருவும்
போதங்கொ ணெடுந்தனிப் பொருவில் கூம்பொடு
மாதங்கம் வருகல மறுகிக் கால்பொரா
ஓதங்கொள் கடலினின் றுலைவ போன்றவே.

69 அஞ்சினர் வானவ ரவுண ரச்சத்தால்
துஞ்சினா ரனைபல சொரிம தத்தொளை
எஞ்சின திசைக்கரி யிரவி மீண்டனன்
வெஞ்சினக் கூற்றுந்தன் விழிபு தைத்ததே.

70 கொடியவெங் கோபத்தாற் கொதித்த கோளரி
கடியவ ளாயெனக் கருது கின்றிலன்
நெடியவன் முனியுமென் றஞ்சி நின்றனன்
இடியுரு மனையவெம் மொழியி யம்புவான்.

71 மாண்டன னெந்தையென் றம்முன் மாதவம்
பூண்டன னின்கொடும் புணர்ப்பி னாலென்றால்
கீண்டிலென் வாயது கேட்டு நின்றயான்
ஆண்டன னேயன்றோ வரசை யாசையால்.

72 நீயின மிருந்தனை யானு நின்றனென்
ஏயெனு மாத்திரத் தெற்று கிற்றிலென்
ஆயகன் முனியுமென் றஞ்சி னேனலால்
தாயெனும் பெயரெனைத் தடுக்கற் பாலதோ.

73 மாளவு முளனொரு மன்னன் வன்சொலால்
மீளவு முளனொரு வீரன் மேயபார்
ஆளவு முளனொரு பரத னாகினால்
கோளல் தறநெறி குறையுண் டாகுமோ.

74 சுழியுடைத் தாயுடைக் கொடிய சூழ்ச்சியால்
வழியுடைத் தாய்வரு மரபை மாய்த்தொரு
பழியுடைத் தாக்கினன் பரதன் பண்டெனும்
மொழியுடைத் தாக்கலின் முறைமை வேறுண்டோ.

வேறு.

75 நோயி ரல்லீர் நுங்கண வன்ற னுயிருண்டீர்
பேயி ரேநீ ரின்னமி ருக்கப் பெறுவீரே
மாயீர் மாயா வன்பழி தந்தீர் முலைதந்தீர்
தாயீ ரேநீ ரின்னுமெ னக்கென் றருவீரே.

76 ஒன்றும் பொய்யா மன்னனை வாயா லுயிரோடும்
தின்றுந் தீரா வன்பழி கொண்டுந் திருவெய்தி
என்றும் நீரே வாழ வுவந்தீ ரவனைக்
கன்றுந் தாயும் போவன கண்டுங் கழிவீரே.

77. இறந்தான் றந்தை யீய்ந்த வரத்துக் கிழிவென்னா
அறந்தா னீதென் றன்னவன் மைந்த னரசெல்லாந்
துறந்தான் றாயின் சூழ்ச்சியின் ஞால மவனோடும்
பிறந்தா னுண்டா னென்னுமி தென்றாற் பெறலாமே.

78 மூளு மென்றே தந்தையை யுன்னா வசைகொண்டாள்
கோளு மென்று லேயெனல் கொண்டா னதுவன்றேல்
மீளு மன்றே யென்னையு மெய்யே யுலகெல்லாம்
ஆளு மென்றே போயின னன்றோ வரசாள்வான்.

79 ஓதா நின்ற தொல்குல மன்ன னுணர்வப்பால்
யாதா னுந்தா னாகவெ னக்கே பணிசெய்வான்
தீதா நின்ற சிந்தனை செய்தா னவனென்ன
போதா தோவென் றாயிவள் கொண்ட புகழம்மா.

80 உய்யா நின்றே னின்னமு மென்முன் னுடன்வந்தான்
கையார் கல்லைப் புல்லட குண்ணாக் கலமேந்தி
வெய்யோ னுனின் சாலியின் வெண்சோ றமுதென்ன
நெய்யோ டுண்ண நின்றது நின்றார் நினையாரோ.

81 வில்லார் தோளான் மேவினன் வெங்கா னகமென்ன
நல்லா னன்றே துஞ்சின னஞ்சே யனையாளைக்
கொல்லேன் மாயேன் வன்பழி யாலே குறைவற்றேன்
அல்லே னோயா னன்புடை யார்போ லழுகின்றேன்.

82 பாரோர் கொள்ளார் யானுயிர் பேணிப் பழிபூணேன்
தீரா தொன்றோ துன்பமிவ் வூரிற் றிருநில்லாள்
ஆரோ டெண்ணிற் றாருனை தந்தா யறமெல்லாம்
வேரோ டிங்கே டாக முடித்தென் விளைவித்தாய்.

83 கொன்றே னுனென் றந்தையை மற்றுன் கொலைவாயால்
ஒன்றோ கானத் தண்ணலை யுய்த்தே னுலகாள்வான்
நின்றே னென்றா னின்பிழை யுண்டோ பழியுண்டோ
என்றே னுந்தா னென்புகழ் மாயு மிடமுண்டோ.

84 கண்ணு லேயென் செய்வினை யின்னுந் சிலகாண்பார்
மண்ணுர் பாரா தென்னுவர் வாளா பழிபூண்டாய்
உண்ணு நஞ்சங் கொல்கில தென்னு யுழையுண்டென்
றெண்ணு நின்றே னன்றி யிரேனென் னுயிரோடே.

85 ஏன்றுன் பாவிக் கும்பி வயிற்றின் னிடைவைகித்
தோன்றுந் தீராப் பாதக மற்றென் றுயர்தீரச்
சான்றுந் தானே நல்லற மாகத் தகைஞாலம்
மூன்றுங் காண மாதவம் யானே முயல்கின்றேன்.

86 சிறந்தார் சொல்லு நல்லுரை சொன்னேன் செயலெல்லாம்
மறந்தாய் செய்தா யாகுதி மாயா வுயிர்தன்னைத்
துறந்தா யாகிற் றாயையு மாதி யுலகத்தே
பிறந்தா யாதி யீதல தில்லைப் பிறிதென்றான்.

(வேறு.)

87 இன்னண மினையன வியம்பி யானுமிப்
பன்னருங் கொடுமனப் பாவி பாடிரேன்
துன்னருந் துயர்கெடத் தூய கோசலை
பொன்னடி தொழுவெனென் றெழுந்து போயினான்.

88 ஆண்டவை கோசலை யருக ரெய்தினன்
மீண்டுமண் கிழிதர வீழ்ந்து கேழ்கிளர்
காண்டகு தடக்கையிற் கமலச் சீறடி
பூண்டனன் கிடந்தனன் புலம்பி னானரோ.

எந்தையெவ் வுலகுளா னெம்முன் யாண்டையான்
வந்தது தமியெனிம் மறுக்கங் காணவோ
சிந்தையி னுறுதுயர் தீர்த்தி ராலெனும்
அந்தரத் தமரரு மழுது சோரவே.

90 அடித்தலங் கண்டிலென் யானெ னையனைப்
படித்தலங் காவலன் பெயரற் பாலனோ
பிடித்திவிர் போலுநீர் பிழைத்தி ராவெனும்
பொடித்தலந் தோளுறப் புரண்டு சோர்கின்றான்.

91 கொடியவர் யாவருங் குலங்கள் வேறற
நொடிகுவன் யானது நுவல்வ தெங்ஙனம்
கடியவள் வயிற்றினிற் பிறந்த கள்வனேன்
முடிகுவ னருந்துயர் முடிய வென்னுமால்.

92 இரதமொன் றூர்ந்துபா ரிருளை நீக்குமவ்
வாதனி லொளிபெற வளர்ந்த தொல்குலம்
பாதனென் றொருபழி படைத்த தென்னுமால்
மரதக மலையென வளர்ந்த தோளினான்.

93 வாடொடு தானையான் வானில் வைகிடக்
காடொரு தலைமக னெய்தக் கண்ணிலா
நாடொரு துயரிடை நைவ தேயெனும்
தாடொடு தடக்கையத் தரும மேயனான்.

94 புலம்புறு குரிசிறன் புலர்வு நோக்கினள்
குலம்பொறை கற்பிவை சுமந்த கோசலை
நிலம்பொறை யாற்றல னெஞ்சந் தூய்தெனா
சலம்பிறி துறமனந் தளர்ந்து கூறுவாள்.

95 மையறு மனத்தொரு மாசு ளானலன்
செய்யனே யென்பது தேருஞ் சிந்தையாள்
கய்கயர் கோமக ளிழைத்த கைதவம்
ஐயநீ யறிந்திலை போலு மாலென்றாள்.

96 தாளுறு குரிசிலத் தாய்சொற் கேட்டலும்
கோளுறு மடங்கலிற் குமுறி விம்முவான்
நாளுறு நல்லற நடுங்க நாவினால்
சூளுறு கட்டுரை சொல்லன் மேயினான்.

97 அறங்கெட முயன்றவ னருளி னெஞ்சினன்
பிறங்கடை நின்றவன் பிறரைச் சீறினோன்
மறங்கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்
துறந்தமா தவர்க்கருந் துயருஞ் சூழ்ந்துளோன்

98 குரவனை மகளினை வாளிற் கொன்றுளோன்
புரவல னுறுபொருள் புனலில் வாரினேன்
விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டுளோன்
இரவல ரருநிதி யெறிந்து வௌவினேன்.

99 தழைத்ததண் டௌவினேன் றலைவ னல்லனென்
றழைத்தவ னறநெறி யந்த ணாளரில்
பிழைத்தவன் பிழைப்பிலா மறையைப் பேணலா
திழைத்தவன் பொய்யெனு மிழுதை நெஞ்சினேன்.

100 தாய்பசி யுழந்துயிர் தளரத் தான்றனி
பாய்பெரும் பாழ்வயி றளிக்கும் பாவியும்
நாயகன் படநடந் தவனு நண்ணுமத்
தீயெரி நரகத்துக் கடிது செல்கயான்.

101 தாளினி லடைந்தவர் தம்மைத் தற்கொரு
கோளுற வஞ்சினன் கொடுத்த பேதையும்
நாளினு மறமறந் தவனு நண்ணுறும்
மீளரு நரகிடைக் கடிது வீழ்கயான்.

102 பொய்க்கரி கூறினேன் போருக் கஞ்சினேன்
கைக்கொளு மடைக்கலங் கரந்து வவ்வினேன்
எய்த்திடத் திடர்செய்தோ னென்றின் னோர்புகும்
மெய்க்கொடு நரகிடை விரைவின் வீழ்கயான்.

103 அந்தண ருறையுளை யனலி னூட்டினேன்
மைந்தனைக் கொன்றுளோன் வழக்கிற் பொய்த்துளோ
நிந்தனை தேவரை நிகழ்த்தி னேன்புகும் [ன்
வெந்துயர் நரகத்து வீழ்க யானுமே.

104 கன்றுயி ரோய்ந்துகக் கறந்து பாலுண்டோன்
மன்றிடைப் பிறர்பொருள் மறைத்து வவ்வினேன்
நன்றியை மறந்திடு நயமி லாவினேன்
என்றிவ ருறுநர கென்ன தாகவே.

105 ஆறுத லுடன்வரு மஞ்சொன் மாதனை
ஊறுகொண் டலைக்கத்தன் னுயிர்கொண் டேகினேன்
சோறுத னயலுளோர் பசிக்கத் துய்த்துளோன்
ஏறுமக் கதியிடை யானு மேறவே.

106 எஃகெறி செருமுகத் தேற்ற தெவ்வருக்
கொஃகின னுயிர்வளர்த் துண்ணு மாசையான்
அஃகலி லறநெறி யாக்கி யோன்பொருள்
வெஃகிய மன்னன்வீழ் நரகின் வீழ்கயான்.

107 அழிவரு மாசிய லெய்தி யாகுமென்
றிழிவரு சிறுதொழி லியற்றி யாண்டதின்
வழிவரு தருமத்தை மறந்து மற்றொரு
பழிவரு நெறிபடர் பதக னாகயான்.

108 தஞ்சென வொதுங்கினர் தனது பாருளோர்
எஞ்சலின் மறுக்கினே டிரியல் போயுற
வஞ்சிசென் றிறுத்தவன் வாகை மீக்கொள
அஞ்சின மன்னவ னாக யானுமே.

109 கன்னியை யழிசெயக் கருதி னேன்குருப்
பன்னியை நோக்கினேன் பருகி னேனறை
பொன்னிகழ் களவினிற் பொருந்தி னேனென
இன்னவ ருறுகதி யென்ன தாகவே.

110 ஊணல வுண்வழி நாயி னுண்டவன்
ஆணலன் பெண்ணல னார்கொ லாமென
நாணல னரகமுண் டென்னு நல்லுணா
பேணலன் பிறர்பழி பிதற்றி யாகயான்.

111 மறுவிறெல் குலங்களை மாசிட் டேற்றினேன்
சிறுவிலை யெளியவ ருணவு சிந்தினேன்
நறியன வயலவர் நாவி னீர்வா
உறுபத நுங்கிய வொருவ னாகயான்.

112 வில்லினும் வாளினும் விரிந்த வணடொழில்
புல்லிடை யுகுத்தனென் பொய்ம்மை யாக்கையைச்
சில்பக லோம்புவான் செறுநர் சீறிய
இல்லிடை யிடுபத மேற்க வென்கையால்.

113 ஏற்றவற் கொருபொரு ளுள்ள தின்றென்று
மாற்றல னுதவலன் வரம்பில் பற்பகல்
ஆற்றின னுழற்றுமோ ராத னெய்துமக்
கூற்றுறு நரகினோர் கூறு கொள்கயான்.

114 பிணிக்குறு முடையுடல் பேணிப் பேணலார்
துணிக்குறு வயிரவா டக்கை தூக்கிப்போய்
மணிக்குறு நகையிள மங்கை மார்கண்முன்
தணிக்குறு பகைஞரைத் தாழ்க வென்றலே.

115 கரும்பலர் செந்நெலங் கழனிக் கானநா
டரும்பகை கவர்ந்துணா வாவி பேணினென்
இரும்பலர் நெடுந்தலை யீர்த்த காலொடும்
விரும்பலர் முகத்தெதிர் விழித்து நிற்கயான்.

வேறு.

116 தூய வாசகஞ் சொன்ன தோன்றலை
தீய கானகந் திருவி னீங்கிமுன்
போயி னன்வரக் கண்ட பொம்மலாள்
ஆய காதலா லழுது புல்லினாள்.

117 செம்மை நன்மனத் தண்ணல் செய்கையும்
அம்மை தீமையு மறித றேற்றினாள்
கொம்மை வெம்முலை குமுறு பாலுக
விம்மல் விம்மநின் றழுது வீங்கினாள்.

118 முன்னை நுங்குல முதலு ளோர்கடாம்
நின்னை யாவரே நிகர்க்கு நீர்மையார்
மன்னர் மன்னவா வென்று வாழ்த்தினாள்
உன்ன வுன்னநைந் துருகி விம்முவாள்.

119 உன்ன வுன்னனைந் துருகி யன்புகூர்
அன்னை தாளின்வீழ்ந் திளைய வண்ணலும்
சொன்ன நீர்மையா ரெழுது மாழ்கினான்
இன்ன வேலைவாய் முனிவ னெய்தினான்.

120 வந்த மாதவன் றளின் வள்ளல்வீழ்ந்
தெந்தை யாண்டையா னியம்பு வீரெனு
நொந்து மாழ்கின னுவல்வ தோர்கிலா
அந்த மாதவ னழுது புல்லினான்.

121 மறுவின் மைந்தனே வள்ள லுந்தையார்
இறுதி யெய்திநா ளேழி ரண்டின
சிறுவர் செய்கடன் செய்து தீர்த்தியென்
றறுவன் மேயினு னுரையின் மேயினான்.

122 அன்னை யேவின ளடியி றைஞ்சினான்
பொன்னின் வார்சடைப் புனித னோடும்போய்
தன்னை நல்கியத் தரும நல்கினான்
பன்னு தொல்லறப் படிவ நோக்கினான்.

123 மண்ணின் மேல்விழுந் தலறி மாழ்குவான்
அண்ண லாழியா னவனி காவலான்
எண்ணெ யுண்டபொன் னெழில்கொண் மேனியைக்
கண்ண நீரினாற் கழுவி யாட்டினான்.

124 பற்றி யவ்வையின் பரிவின் வாங்கினார்
சுற்று நான்மறைத் துறைசெய் கேள்வியார்
கொற்ற மண்கணை குமுற மன்னனை
மற்றோர் பொன்னின்மா மான மேற்றினார்.

125 கனைசெய் வேலைபோ னகரி கையெடுத்
தனைசெய் பூசலிட் டெயிர்து ளங்குற
அனைச வேலைசூழ்ந் தழுது கைதொழ
புனைசை யானையிற் கொண்டு போயினார்.

126 சங்கு பேரியுந் தழுவு சின்னமுக
எங்கு மெங்குநின் றிரங்கி யேங்குவ
மங்கு ரேய்நகர் மகளி ராமென்
பொங்கு கண்புடைத் தழுவ போன்றவே.

127 மாவும் யானையும் வயங்கு தேர்களும்
கோவு நான்மறைக் குழுவு முன்செலத்
தேவி மாரொடுங் கொண்டு தெண்டிரை
தாவு வார்புனற் சரயு வெய்தினர்.

128 எய்தி நூலுளோர் மொழிந்த யாவையும்
செய்து தீக்கலந் திருத்திச் செல்வனை
வெய்தி னேற்றினர் வீர நுந்தைபால்
பொய்யின் மாக்கடன் கழித்தி போந்தென்றார்.

129 என்னும் வேலையி லெழுந்த வீரனை
அன்னை தீமையா லரச னின்னையும்
துன்னு துன்பத்தாற் றுறந்து போயினன்
முன்ன ரேயென முனிவன் கூறினன்.

130 துறந்து போயின னெனவே தோன்றனீ
பிறந்து போரறம் பிழைத்த தென்றல்போல்
இறந்து போயின னிருந்த தாண்டது
மறந்து வேறொரு மைந்த னுங்கொலாம்.

131 இடிக்கண் வாளரா விடைவ தாமென
படிக்கண் வீழ்ந்தகம் பதைக்கு நெஞ்சினன்
தடுக்க லாகலாத் துயரந் தன்னுளே
துடிக்க விம்மிநின் றழுது சொல்லுவான்.

132 உரைசெய் மன்னன்மற் றுன்னி லென்னில்யார்
இரவி தன்குலத் தெந்தை முந்தையோர்
பிரத பூசனைக் குரிய பேறிலேன்
அரைசு செய்யவோ வாவ தாயினேன்.

133 பூவி னான்முகன் புதல்வ னாதியாம்
தாவின் மன்னர்தந் தரும நீதியால்
தேவ ராயினார் சிறுவ னாகியே
ஆவ நான்பிறந் தவத்த னானவா.

134 துன்னு தாள்வளஞ் சுமந்த தாழையில்
பன்னு வான்குலைப் பதடி யாயினேன்
என்னை யென்னையே யீன்று காத்தவென்
அன்னை யாரெனக் கழுகு செய்தவா.

135 என்று கூறிநொந் திடரின் மூழ்குமத்
துன்று தாரவற் கிளைய தோன்றலால்
அன்று நேர்கட னமைவ தாக்கினான்
நின்று நான்மறை நெறிசெய் நீர்மையான்.

136 இழையு மாரமு மிடையு மின்னிடக்
குழையு மாமலர்க் கொம்ப னார்கடாம்
தழையின் முண்டகந் தழுவு கானிடை
முழையின் மஞ்ஞைபோ லெரியின் மூழ்கினார்.

137 அங்கி நீரினுங் குளிர வம்புய
திங்கள் வாண்முகந் திருவி ளங்குறச்
சங்கை தீர்ந்துதங் கணவர் பின்செலும்
நங்கை மார்புகு முலக நண்ணினார்.

138 அனைய செய்கையா லரசர் கோமகற்
கினைய தன்மையா வியைவ செய்துபின்
மனையி னெய்தினான் மரபின் வாழ்வினை
வினையி னெய்துமோர் பிணியின் வேலையான்.

139 ஐந்து மைந்துநா ளேழி யாமென
மைந்தன் வெந்துயர்க் கடலின் வைகினான்
தந்தை தன்வயிற் றருமம் யாவையும்
முந்து நூலுளோர் முறையின் முற்றினான்.

140 முற்று முற்றுவித் துதவி மும்மைநூல்
சுற்றம் யாவையுந் தொடாத் தோன்றினன்
வெற்றி மாதவன் வினைமு டித்தவன்
கொற்ற வேனெடுங் குமரற் கூடினன்.

141 மன்ன ரின்றியே வையம் வைகுறுன்
தொன்மை யன்றெனத் துணியு நெஞ்சினர்
அன்ன மாநிலத் தறிஞர் தம்மொடு
முன்னை மந்திரக் கிழவர் முந்தினர்.

9-வது. பள்ளி அடைப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 141.



## 10-வது. ஆற்றுப்படலம்.



ஆறு என்பது வழி. பரதர் சித்திரகூடத்துக்குப் புறப்பட்டுப்போன வழிக்கதையைச் சொன்னதனல் இப்படலத்துக்கு அந்தப் பெயர் வந்தது. மந்திரிமார் முதலானேர் அரசனில்லாமல் தேசமிருக்கக்கூடாதாகையால் நீர் ஆளவேண்டுமென்று பரதருக்குச் சொல்லக்கேட்டு அவர், அதுமுறை தான் ஆனல் மூத்தோனிருக்க இளையோன் ஆள்வது முறையன்றே எனத் தடுத்துச் சத்துருக்கனரை அழைத்து, நாளை நாம் ஸ்ரீராமபிரானை எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவரப் புறப்படுவோம், சேனைகள் சித்தமாகும்படி பறையறைவிக்கவேண்டுமென்று கட்டளையிட அவர் அப்படியே செய்தார். அதுகேட்டு அந்த நகரமெல்லாம் உல்லாசமடைந்து உயிர்நீத்தவன் உயிரடைந்தாற்போல் களித்துப் புறப்பட்டது. இவ்வாறு சேனையும் பட்டணத்தாரும் அந்தப்புறத்தாரும் புறப்பட அவ்விடம் வெகு விநோதமாயிருந்தது. இப்படிப் புறப்பட்டுப் போகையில் கூனி அந்தக் கூட்டத்தில் காணப்பட, சத்துருக்கனர் அவளைப் பிடித்து அடிக்கையில் ஸ்ரீராமர் மனதுக்குப் பிரியமல்லாத காரியத்தைச் செய்யாதே என்று பரதர் தடுக்க, சத்துருக்கனர் அவளை விட்டுவிட்டார். இவ்வாறுசென்று அஸ்தமயகாலத்தில் கங்கைக்கரையடைந்து இராமர் படுத்திருந்தவிடம்கண்டு பரதர் தாம் புழுதியிற்படுத்து நித்திரையில்லாமல் விசனத்தோடு இருந்து எழுந்து வழிச் சென்றரென்பது இப்படலத்தின் கதை.

1 வரன்முறை தெரிந்துணர் மறையின் மாதவத்
தருமறை முனிவனு மாண்டை யானென
விரைவின்வந் தீண்டினர் விரகி னெய்தினர்
பரதனை வணங்கினர் பரியு நெஞ்சினர்.

2 மந்திரக் கிழவரு நகர மாந்தரும்
தந்திரத் தலைவருந் தரணி பாலரும்
அந்தர முனிவரோ டறிஞர் யாவரும்
சுந்தரக் குரிசிலை மரபிற் சுற்றினர்.

3 சுற்றின ரிருந்துழி சுமந்தி ரப்பெயர்ப்
பொற்றடந் தேர்வலான் புலமை யுள்ளத்தான்
கொற்றவற் குறுபொருள் குறித்த கொள்கையான்
முற்றுணர் முனிவனை முகந்து நோக்கினன்.

4 நோக்கினற் சுமந்திர னுவல லுற்றதை
வாக்கினா லன்றியே யுணர்ந்த மாதவன்
காக்குதி யுலகுநின் கடன தாமெனக்
கோக்குமா ரனுக்கது தெரியக் கூறுவான்.

5 வேதிய ரருந்தவர் விருத்தர் வேந்தர்கள்
ஆதியர் நின்வயி னடைந்த காரியம்
நீதியுந் தருமமு நிறுவ நீயிது
கோதறு குணத்தினாய் மனத்துட் கோடியால்.

6 தருமமென் றொருபொரு டந்து நாட்டுதல்
அருமையென் பதுபெரி தறிதி யையநீ
இருமையுந் தருவதற் கியைவ தீண்டிது
தெருண்மனத் தார்செயுஞ் செயலி தாகுமால்.

7 வள்ளுறு வயிரவா ளரசின் வையகம்
நள்ளுறு கதிரிலாப் பகலு நாளொடும்
தெள்ளுறு மதியிலா விரவுந் தேவுடன்
உள்ளுறை யுயிரிலா வுடலு மொக்குமே.

8 தேவர்த முலகினுந் தீமை செய்துழல்
மூவலி யுவுணர்கள் வைகு நாட்டினும்
ஏவெவை யுலகமென் றிசைக்கு மன்னவை
காவல்செய் தலைவரை யின்மை கண்டிலம்.

9 முறைதெரிந் தொருவகை முடிய நோக்குறின்
மறையவன் வகுத்தன மண்ணில் வானிடை
நிறைபெருந் தன்மையி னிற்ப செல்வன
இறைகளை யில்லன யாவை காண்கிலம்.

10 பூத்தநாண் மலரய னாதிப் புண்ணியர்
எத்துவான் புகழின ரின்று காறுங்கூ
காத்தனர் பின்னொரு களைக ணின்மையால்
நீத்தநீ ருடைகல நீர தாகுமால்.

11 உந்தையோ விறந்தன னும்மு னீத்தனன்
வந்தது மன்னைதன் வரத்தின் மைந்தநீ
அந்தமில் பேரர சளித்தி யன்னது
சிந்தனை யெமக்கெனத் தெரிந்து கூறினான்.

12 தஞ்சமிவ் வுலகநீ தாங்கு வாயென
செஞ்செவே முனிவரன் செப்பக் கேட்டலும்
நஞ்சினை நுகரென நடுங்கு வாரினும்
அஞ்சின னயர்ந்தன னருவிக் கண்ணினான்.

13 நடுங்கின னாத்தடு மாறி நாட்டமும்
இடுங்கினன் மகளிரி னிரங்கு நெஞ்சினன்
ஒடுங்கிய வுயிரின னுணர்வு கைதரத்
தொடங்கின னரசவைக் குள்ளஞ் சொல்லுவான்.

14 மூன்றுல கினுக்குமோர் முதல்வ னாய்முதல்
தோன்றின னிருக்கயான் மகுடஞ் சூடுதல்
சான்றவ ருரைசெயத் தரும மாதலால்
ஈன்றவள் செய்கையி னிழுக்குண் டாகுமோ.

15 அடைவருங் கொடுமையென் னன்னை செய்கையை
நடைவருந் தன்மைநீர் நன்றி தென்றிரேல்
இடைவருங் *காலமீண் டிரண்டு நீத்தது
கடைவருந் தீநெறிக் கலியி னாட்சியோ.

16 வேத்தனை யிருந்தநீர் விமல னுந்தியில்
பூத்தவன் முதலிய புவியுட் டோன்றினார்
மூத்தவ ரிருக்கவே முறைமை யானிலங்
காத்தவ ருளரெனிற் காட்டிக் காண்டிரால்.

17 நன்னெறி யென்னினு நானிந் நானில
இன்னுயிர்ப் பொறைசுமந் திருந்து வாழ்கிலேன்
அன்னவன் றனைக்கொணர்ந் தலங்கன் மாமுடி
தொன்னெறி முறைமையிற் சூட்டிக் காண்டிரால்.

18 அன்றெனி லவனொடு மரிய கானிடை
நின்றினி திருந்தவ நெறியி னாற்றுவென்
ஒன்றினி யுரைக்கிலென் னுயிரை நீக்குவென்
என்றன னென்றபோ திருந்த பேரவை.

19 ஆன்றபே ரரசனு மிருப்ப வையனும்
ஏன்றனன் மணிமுடி யேந்தல் வேந்தநீ
வான்றொடர் திருவினை மறுத்தி மன்னிளந்
தோன்றல்கள் யாருளர் நின்னிற் றோன்றினார்.

20 ஆழியை யுருட்டியு மறங்கள் போற்றியும்
வேள்வியை யியற்றியும் வளர்க்க வேண்டுமோ
ஏழினோ டேழெனு முலகு மெஞ்சினும்
வாழிய நின்புக ழென்று வாழ்த்தினார்.

21 குரிசிலுந் தம்பியைக் கூவிக் கொண்டலின்
முரசறைந் திந்நகர் முறைமை வேந்தனைத்
தருதுமீண் டென்பது சாற்றித் தானையை
விரைவினி லெழுகென விளம்பு வாயென்றான்.

22 நல்லவ னுரைசெய நம்பி கூறலும்
அல்லலி லழுங்கிய வன்பின் மாநகர்
ஒல்லென விரைத்தத னுயிரில் யாக்கையைச்
சொல்லெனு மமிர்தினாற் றுளித்த தென்னவே.

23 அவித்தவைம் புலத்தவ ராதி யாயுள
புவித்தலை யுயிரெலா மிராமன் பொன்முடி
கவிக்குமென் றுரைக்கவே களிர்ந்த தாலது
செவிப்புல நுகர்வதோர் தெய்வத் தேன்கொலாம்.

24 படுமுரா சறைந்தனர் பரதன் றம்முனைக்
கொடிநகர் தருமவற் கொணரச் சேனையை
முடுகுக வென்றசொன் மூரி மாநகர்
உடுபதி வேலையி னுதயம் போன்றதே.

25 எழுந்தது பெரும்படை யேழு வேலையின்
மொழிந்தபே ரூழியின் முழங்கி முந்தெழ
அழிந்தது கேகயன் மடந்தை யாசைபோய்க்
கழிந்தது துயர்நெடுங் காத லாண்டவே.

26 பண்ணின பகடுதேர் புரவி பண்டியும்
மண்ணினை மறைத்தன வளர்ந்த மாக்கொடி
விண்ணினை மறைத்தன விரிந்த மாத்துகள்
கண்ணினை மறைத்தன கமலத் தோனையே.

27 ஈசனிவ் வுலகினை யழிக்கு நாளெழும்
ஓசையி னிமிர்ந்துள தொல்லென் பேரொலி
காசையிற் கரியவற் காண மூண்டெழும்
ஆசையி னிமிர்ந்ததவ் வனிக ராசியே.

28 படியொடு திருநகர் துறந்து பன்மரம்
செடியொடு கொடுவன நோக்கிச் சீதையாம்
கொடியொடு நடந்தவக் கொண்ட லாமெனப்
பிடியொடு நடந்தன பெருங்கை வேழமே.

29 சேற்றிள மரைமலர் சிறந்த வாமெனக்
காற்றளம் பொலிதரு கன்னி மாரொடும்
ஏற்றிளம் பிடிக்குல மிகலி லின்னடை
தோற்றிள மகளிரைச் சுமப்ப போன்றவே.

30 வேதனை வெயிற்கதிர் தணிக்க மென்மழைச்
சீதநீர் கொடுநெடுங் கொடியுஞ் சென்றன
கோதைவெஞ் சிலையவன் கோலங் காண்கிலா
மாதரி னுடங்குவ வரம்பில் கோடியே.

31 வெண்மதி மீச்செல மேக மூர்ந்தென
அண்ணல்வெங் கதிரவ னளவின் மூர்த்தியாய்
மண்ணிடை யிழிந்தொரு வழிக்கொண் டாலென
எண்ணரு மன்னவர் களிற்றி னேகினர்.

32 தேர்மிசை சென்றதோர் சிந்து செம்முகக்
கார்மிசைக் கழிந்ததார் கலியொர் கார்க்கடல்
ஏர்மிசை யிவுளிமே லேகிற் றெங்கணும்
பார்மிசைப் படர்ந்தது பதாதிப் பௌவமே.

33 தாரையுஞ் சங்கமுந் தாளங் கொம்பொடு
வார்மிசைப் பம்பையுந் துடியு மற்றவும்
பேரியு மியம்பல சென்ற பேதைமைப்
பூரியர் குழாத்திடை வறிஞர் போலவே.

34 தாவரு நாண்முத லணிய லாற்றகை
மேவருங் கலங்களை வெறுத்த மேனியர்
தேவரு மருள்கொளத் தெரியுங் காட்சியர்
பூவுதிர் கொம்பென மகளிர் போயினர்.

35 அதிர்கடல் வையக மனைத்துங் காத்தவன்
விதிவருந் தனிக்குடை மீதி லாப்படை
பொதிபல கவிகைமீன் பூத்த தாகிலும்
கதிர்மதி நீங்கிய கங்குல் போன்றதே.

36 செல்லிய செலவினுற் சிறிய திக்கெனச்
சொல்லிய சேனையைச் சுமந்த தேயெனில்
ஒல்லியல் வேலைநீ ருடுத்த பாரையோர்
மெல்லிய லென்றவர் மெலிய ரேகொலாம்.

37 நறையறு கோதையர் நாட்செய் கோலத்தின்
துறையற வஞ்சனந் துறந்த நாட்டங்கள்
குறையற நிகர்த்தன கொற்ற முற்றுவான்
கறையறக் கழுவிய கால வேலையே.

* * *

38 மல்கிய கேகயன் மடந்தை வாசகம்
நல்கிய தரிவையர் நடுவிற் கேகொலாம்
புல்கிய மலர்வடம் பூண்கி லாமையால்
ஒல்கிய வொருவகை பொறை யுயிர்க்கவே.

39 கோமகன் பிரிதலிற் கோல நீத்துள
தாமரைச் செல்வியுந் தவத்தை மேவினள்
காமனு மருந்துயர்க் கடலின் மூழ்கினன்
ஆமென நிகழ்ந்ததவ் வளவில் சேனையே.

40 மண்ணையும் வானையும் வயங்கு திக்கையும்
உண்ணிய நிமிர்கட லொக்கு மென்பதென்
கண்ணினு மனத்தினுங் கமலத் தண்ணறன்
எண்ணினு நெடிதவ ணெழுந்த சேனையே.

41 அலைநெடும் புனலறக் குடித்த லாலகம்
நிலைபெற நிலைநெறி நிறுத்த லானெடு
மலைகளை மண்ணுற வழுத்த லாற்றமிழ்த்
தலைவனை யொத்ததத் தயங்கு தானையே.

42 அறிஞருஞ் சிறிஞரு மாதி யந்தமா
செறிபெருந் தானையுந் திருவு நீங்கலால்
குறியவன் புனலெலாம் வயிற்றிற் கொண்டநாள்
மறிகட லொத்ததவ் வயோத்தி மாநகர்.

43 பெருந்திரை நதிகளும் வயலும் பெட்புறு
மரங்களு மலைகளு மண்ணுங் கண்ணுறத்
திருந்தவி லயோத்தியாந் தெய்வ மாநகர்
அருந்தெரு வொத்ததப் படைசெ லாறரோ.

44 தார்கடாங் கோதைதாங் தாமந் தாங்கை
ஏர்கடாங் கலவைதாங் கமழ்ந்தின் றென்பரால்
கார்கடா மெனமிகக் கடுத்த கைம்மலை
வார்கடா மல்லதம் மன்னன் சேனையே.

45 ஆளுலாங் கடலினு மகன்ற வக்கடல்
தோளுலாங் குண்டல முதல தொல்லணி
கேளுலா மின்னொளி கிளர்ந்த தில்லையால்
வாளுலா நுதலியர் மருங்குல் போலவே.

46 மத்தள முதலிய வயங்கு பல்லியம்
ஒத்தன சேறலி னுரையி லாமையில்
சித்திரச் சுவர்நெடுஞ் சேனை தீட்டிய
பத்தியை நிகர்த்ததப் படையி னீட்டமே.

47 ஏடறு கோதையர் விழியி னெய்தகோல்
ஊடுற வுரந்தொளைத் துயிரு ணுவகை
ஆடவர்க் கரும்பெருங் கவச மாயது
காடுறை வாழ்க்கையக் கண்ண னண்ணவே.

* * *

48 இன்னண நெடும்படை யேக வேந்தலும்
தன்னுடை நெடுவரைச் சீறை சாத்தினான்
பின்னிளை யவனொடும் பிறந்த துன்பொடும்
நன்னெடுந் தேர்மிசை நடத்தன் மேயினான்.

49 தாயரு மருந்தவத் தவருந் தந்தையின்
ஆயமந் திரியரு மளவில் சுற்றமும்
தூயவந் தணர்களுந் தொடர்ந்து சூழ்வரப்
போயினன் றிருநகர்ப் புரிசை வாயிலே.

50 மந்தரைக் கூற்றமும் வழிச்செல் வாரொடும்
உந்தியே போதல்கண் டிளவ லோடியார்த்
தந்தரத் தெற்றுவா னழன்று பற்றலும்
சுந்தரத் தோளவன் விலக்கிச் சொல்லுவான்.

51 முன்னையர் முறைகெட முடித்த பாவியைச்
சின்னபின் னஞ்செய்தென் சினத்தைத் தீர்வெனேல்
என்னையின் றென்னையன் றுறக்கு மென்றலால்
அன்னையென் றுணர்ந்திலெ னய்ய நானென்றான்.

52 ஆதலான் முனியுமென் றய்ய னந்தமில்
வேதனைக் கூனியை வெகுண்டு மென்னினும்
கோதிலா வருமறை குலவு நூல்வலாய்
போதுநா மென்றுகொண் டரிதிற் போயினான்.

53 மொய்பெருஞ் சேனையு மூரி மாக்களும்
கய்பரந் தயலொரு கடலிற் சுற்றிட
அய்யனுந் தேவியு மிளைய வாளியும்
வய்கிய சோலையிற் றானும் வைகினான்.

54 அல்லணை நெடுங்கணீ ரருவி யாடினன்
கல்லணை கிழங்கொடு கனியு முண்டிலன்
வில்லணைத் துயர்ந்ததோள் வீரன் வைகிய
புல்லணை மருங்கிற்றான் பொடியின் வைகினான்.

55 ஆண்டுநின் றண்டகை யடியி னேகினான்
ஈண்டிய நெறியெனத் தானு மேகினான்
தூண்டிடு தேர்களுந் துரக ராசியும்
காண்டகு கரிகளுந் தொடரக் காலினே.

10-வது. ஆற்றுப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 59ல்-55.



## 11-வது. குகப்படலம்.



குகன் பரதனைச் சந்தித்ததனால் இப்படலத்துக்கு அப்பெயர் வந்தது. மறுநாட்காலையில் பரதர் எழுந்து தன் சேனையோடுகூடக் கங்கைக்கரைக்கு வர, சிருங்கிபேரபுரத்திலிருந்த குகன் என்பவன் சேனைவரும் ஆடம்பரத்தைக் கண்டு: ஓ! ஓ! பரதன் நம்முடைய சுவாமியான இராமனை இராச்சியத்தை ஆளவொட்டாமற் காட்டுக்குத் துரத்தினதுமன்றி அங்கும் இருக்கவொட்டாமல் துரத்தவருகிறான்போலிருக்கின்றது; பார்ப்போம் அவனுடைய

சாமர்த்தியத்தை; கங்கையைக் கடந்தல்லவோ எல்லாவல்லமையும் செல்ல வேண்டும்? நான் உயிரோடிருக்குமளவும் அவன் ஆட்டத்தை ஆடவொட்டேன் என்று மிகுந்த கோபத்தோடு தன் சேனைகளும் தானும் போர்க்குரிய கோலங்கொண்டிருக்க, அந்தக் குகனிடத்திலிருந்து ஒருவன் வந்து ஸ்ரீராமனுக்கு மித்திரனாகிய குகன் என்பான் உங்களைக் காணக் காத்திருக்கிறானென்ன, அப்படியாகில் நாமே முந்தி அவனைச் சென்று காண்போமென்று தன் தம்பியுடனே செல்ல, அந்தக் குகன் இவர் உடம்பிருக்கும் வாட்டத்தையும், புழுதியையும், அரையிற்கட்டிய சீரையையும் பார்த்து இரங்கி, நாம் தப்பெண்ணங்கொண்டோம் என்று தவித்து அவர் பாதங்களில் வீழ்ந்தான். அப்படி வீழ்ந்த அவனைப் பரதர் எழுப்பி, நீ இராமருக்கு நண்பனானதினால் எங்களுக்கு மிகவும் கொண்டாடத்தக்கவன் என்று பல சொல்லி, குகன் எதற்காக நீங்கள் இங்குவந்ததென்று பரதனை வினவ, பரதர், என் தந்தை பரமபதம் அடைந்தார்; அவரினும் மேலான என் அண்ணல் காடுசென்றார். அவரைத் திருப்பி எழுந்தருளப்பண்ணிக்கொண்டு போய் முடிசூட்டுவதற்காகப் புறப்பட்டுவந்தேன் என்று சொல்லக்கேட்டு, மறுத்தும் தரையில் வீழ்ந்து புரண்டெழுந்து, கைகூப்பி, ஆயிரம் இராமரும் உமக்கு நிகராகார் என்று துதித்து, நான் இராமர்சென்ற வழிகாட்டச் சித்தமாயிருக்கிறேன் என்று சொல்ல, இராமர் அவ்விராத்திரி எங்கே படுத்திருந்தார், இலக்குமணர் என்னசெய்தார் என்று பரதர் கேட்க, இவ்விடத்தில் ஸ்ரீராமர் தேவியோடு கண்வளர்ந்தாரென்றும் இலக்குமணர் ஆயுதபாணியாய் இரவெல்லாம் விழித்துக் காத்திருந்தாரென்றும் சொல்லக்கேட்டு மிக்க துயரத்தோடு பிரலாபித்தார். பின்பு குகன் பல படவுகளை அழைப்பித்துச் சேனைகளையும் கூடவந்தவர்களையும் அவற்றிலேற்றித் தானும் பரத சத்துருக்கனர்களோடு கரைசேர்ந்து, கோசலாதேவியை யாரென்று வினவ, எம் ஆண்டவனைப் பெற்றிழந்த பெருமகள் இவள்தான் என்று பரதர் சொல்ல அவள் பாதங்களில் வீழ்ந்து புலம்பிநின்றான். அத்தேவியும் அவனை மிக வாழ்த்தி முந்தி நால்வர் மக்களுடையவளாக இருந்தேன், இப்போது ஐந்துமக்களுடையவளானேன் என்று கூறியபின்னர், சுமித்திராதேவியை யாரென்று வினவ, இளையகாளையைப் பயந்த பெருமாட்டி என்ன, அவளையும் பணிந்து, பின்பு கைகேயியை இத்தேவி யாரென்ன, இவள் பழிபாவங்களைப் பூண்டு பாவியான என்னைப்பெற்றுக் கொடுமைகளிழைத்தவள் என்று கூற, அவளையும் தாய் என்கிற மரியாதையால் குகன் வணங்கிநின்றான். இவ்வாறு யாவரையும் வினவித் தெரிந்துகொண்டு பணிந்துசெல்லுகையில், பரத்துவாசமாமுனிவர் பல முனிவரோடுகூட எதிர்கொண்டுவந்து உபசரித்ததனால் பரதர் தம் படையோடுகூட அவர் ஆச்சிரமத்துக்குச் சென்றனர் என்பது இப்படலத்தின் கதை.

---

1 பூவிரி பொலன்கழல் பொருவில் தானையான்
காவிரி நாடன்ன கழனி நாடொரீஇத்
தாவர சங்கம மென்னுந் தன்மைய
யாவையு மிரங்கிடக் கங்கை யெய்தினான்.

2 எண்ணருஞ் சுரும்புத மினத்துக் கல்லது
கண்ணகன் பெரும்புனற் கங்கை யெங்கணும்
அண்ணல்வெங் கரிமதத் தருவி பாய்தலால்
உண்ணவுங் குடையவு முரித்தன் றுயதே.

3 அடிமிசைத் தூளிபுக் கடைந்த தேவர்தம்
முடியுறப் புலர்ந்ததோர் முறைமை தேர்ந்திலென்
நெடிதுயிர்த் துண்டவு நீந்த நின்றவும்
பொடிமிசைப் புரண்டவும் புரவி யீட்டமே.

4 பாலையேய் நிறத்தொடு பண்டு தான்படர்
ஓலையேய் நெடுங்கட லோடிற் றில்லையால்
மாலையேய் நெடுமுடி மன்னன் சேனையாம்
வேலையே மடுத்ததக் கங்கை வெள்ளமே.

5 கான்றலை நண்ணிய கானை பின்படர்
தோன்றலை யவ்வழி தொடர்ந்து சென்றன
ஆன்றவ ருணர்த்திய வக்கு ரோணிகள்
மூன்றுபத் தாயிரத் திரட்டி முற்றுமே.

6 அப்படை கங்கையை யடைந்த வாயிடை
துப்புடைக் கடலினீர் சுமந்த மேகத்தை
ஒப்புடை யண்ணலோ டுடற்ற வேகொலாம்
இப்படை யெடுத்ததென் றெடுத்த சீற்றத்தான்.

7 குகனெனப் பெயரிய கூற்றி னாற்றலான்
தொகைமுரட் சேனையைத் துகளி னோக்குவான்
நகைமிகக் கண்கடை நாற நாசியில்
புகையுறக் குனிப்புறும் புருவப் போர்விலான்.

8 மையுற வுயிரெலா மிறுதி வாங்குவான்
கையுறு கவரியிற் பிடித்த காலன்றன்
ஐயுறு முயிர முருவ மாயின
மெய்யுறு தானையான் வில்லின் கல்வியான்.

9 கட்டிய சுரிகையன் கடித்த வாயினன்
வெட்டிய மொழியினன் விழிக்குந் தீயினன்
கொட்டிய துடியினன் குறிக்குங் கொம்பினன்
கிட்டிய தமரெனக் கிளர்ந்த தோளினான்.

10 எலியெலா மிப்படை யரவம் யானென
ஒலியுலாஞ் சேனையை யுவந்து கூயினான்
வலியுலா முலகினில் வாழும் வள்ளுகிர்ப்
புலியெலா மொருவழி புகுந்த போலவே.

11 மருங்கடை தென்கரை வந்து தோன்றினான்
ஒருங்கடை நெடும்படை யொல்லை னார்ப்பினோ
டருங்கடை யுகந்தனி லசனி மாமழை
கருங்கடல் கிளர்ந்தெனக் கலந்து சூழவே.

12 தோன்றின புளினனை நோக்கிச் சூழ்ச்சியின்
ஊன்றிய சேனையை யும்ப ரேற்றுதற்
கேன்றனெ னென்னுயிர்த் துணைவற் கீகுவான்
ஆன்றபே ராசுரீ ரமைதி ராமென்றான்.

13 துடியெறி நெறிகளுந் துறையுஞ் சுற்றுற
ஒடியெறி யம்பிகள் யாது மோட்டலிர்
கடியெறி கங்கையின் கரைவந் தோர்களைப்
பிடியெறி படவெனுப் பெயர்த்துங் கூறுவான்.

வேறு.

14 அஞ்சன வண்ணனெ னாருயிர் நாயக னாளாமே
வஞ்சனை யாலர செய்திய மன்னரும் வந்தாரே
செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன செல்லாவோ
உஞ்சிவர் போய்விடி னாய்க்குக னென்றெனை யோதாரோ.

15 ஆழநெ டும்புனல் கங்கை கடந்திவர் போவாரோ
வேழநெ டும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ
தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ
ஏழைமை வேட னிறந்தில னென்றெனை யேசாரோ.

16 முன்னவ னென்றுநி னைந்திலன் மொய்புலி யன்னானோர்
பின்னவ னின்றன னென்றில னன்னவை பேசானேல்
என்னிவ னென்னை யிகழ்ந்ததிவ் வெல்லை கடந்தன்றோ
மன்னவர் நெஞ்சினில் வேடர் விடுஞ்சரம் வாயாவோ.

17 பாவமு நின்ற பெரும்பழி யும்பகை நண்போடும்
ஏவமு மென்பவை மண்ணுல காள்பவ ரெண்ணாரோ
ஆவது போகவெ னாருயிர்த் தோழமை தந்தான்மேல்
போவது சேனையு மாருயி ருங்கொடு போயன்றோ.

18 அருந்தவ மென்றுணை யாள விவன்புவி யாள்வானோ
மருந்தெனி னன்றுயிர் வண்புகழ் கொண்டுபின் மாயேனோ
பொருந்திய கேண்மையு கந்தவர் தம்மொடு போகாதே
இருந்தது நன்று கழிக்குவெ னென்கட னின்றோடே.

19 தும்பியு மாவு மிடைந்த பெரும்படை சூழ்வாரும்
வம்பிய ராரிவர் வாள்வலி கங்கை கடந்தன்றோ
வெம்பிய வேடரு ளீர்துறை யோடம் விலக்கீரோ
நம்பிமு னேயினி நம்முயிர் மாய்வது நன்றன்றோ.

20 போன படைத்தலை வீரர்த மக்கிளை போதாவிச்
சேனை கிடக்கிடு தேவர் வரிற்சிலை மாமேகம்
சோனை படக்குடர் சூறை படச்சுடர் வாளோடும்
தானை படத்தனி யானை படத்திரள் சாயேனோ.

21 நின்ற கொடைக்கையெ னன்ப னுடுக்க நெடுஞ்சீரை
அன்று கொடுத்தவண் மைந்தர் பலத்தையெ னம்பாலே
கொன்று குவித்த நிணங்கொள் பிணக்குவை கொண்டோடித்
துன்று திரைக்கடற் கங்கை மடுத்திடை தூராதோ.

22 ஆடு கொடிப்படை சாடி யறத்தவ ரேயாள
வேடு கொடுத்தது பாரெனு மிப்புகழ் மேவீரோ
நாடு கொடுத்தவெ னாயக னுக்கிவர் நாமாளும்
காடு கொடுக்கில ராகி யெடுத்தது காணீரோ.

மாமுனி வர்க்குற வாகி வனத்திடை யேவாழும்
கோமுனி யத்தகு மென்று மனத்திறை கொள்ளாதே
வமுனை யுற்றிடி லேழு கடற்படை யென்றாலும்
ஆமுனை யிற்சிறு கூழென விப்பொழு தாகாதோ.

24 என்பன சொல்லி யிரும்பன மேனிய ரேனோர்முன்
வன்பனை வில்லினன் மல்லுயர் தோளினன் வாள்வீரற்
கன்பனு நின்றன னின்றது கண்டரி யேறன்ன
முன்பினில் வந்து மொழிந்தனன் சூரிய தேர்வல்லான்.

வேறு.

25 கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
உங்கள்குலத் தனிநாதற் குயிர்த்துணைவ னுயர்தோளான்
வெங்கரியி னேறனையான் விற்பிடித்த வேலையினான்
கொங்கலரு நறுந்தண்டார்க் குகனென்னுங் குறியுடையான்.

26 கற்காணுந் திண்மையான் கரைகாணுக் காதலான்
அற்காணிற் கண்டனைய வழகமைந்த மேனியான்
மற்காணுந் திருநெடுந்தோண் மழைகாணு மணிநிறத்தாய்
நிற்காணு முள்ளத்தா னெறியெதிர்நின் றனனென்றான்.

27 தன்முன்னே யவன்றன்மை தன்றுணைவன் முந்துரைத்த
சொன்முன்னே யுவக்கின்ற துரிசிலாத் திருமனத்தான்
மன்முன்னே தழீஇக்கொண்ட மனக்கினிய துணைவனேல்
என்முன்னேயவற்காண்பென்யானேசென்றெனவெழுந்தான்.

28 என்றெழுந்த தம்பியொடு மெழுகின்ற காதலொடும்
குன்றெழுந்து சென்றதெனக் குளிர்கங்கைக் கரைகுறுகி
நின்றவனை நோக்கினான் றிருமேனி நிலைபுணர்ந்தான்
துன்றுகரு நறுங்குஞ்சி யெயினர்கோன் றுண்ணென்றான்.

29 வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்.

30 நம்பியுமென் ஞயகனை யொக்கின்ற னயினின்றன்
தம்பியையு மொக்கின்றன் றவவேடந் தலைநின்றன்
துன்பமொரு முடிவில்லை திசைநோக்கித் தொழுகின்றன்
எம்பெருமான் பின்பிறந்தா ரிழைப்பரோ பிழைப்பென்றன்.

31 உண்டிடுக்க ணொன்றுடையா னுலையாத வன்புடையான்
கொண்டதவ வேடமே கொண்டிருந்தான் குறிப்பெல்லாம்
கண்டுணர்ந்து பெயர்கின்றேன் காமின்க ணெறியென்ன
தண்டுறையோர் நாவாயி லொருதனியே தான்வந்தான்.

32 வந்தெதிரே தொழுதானை வணங்கினன் மலரிருந்த
அந்தணனுந் தனைவணங்கு மவனுமவ னடிவீழ்ந்தான்
தந்தையினுங் களிகூரத் தழுவினன் றகவுடையோர்
சிந்தையினுஞ் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்.

வேறு.

33 தழுவின புளினர் வேந்தன் றமைச் செங்க ணனை
எழுவினு முயர்ந்த தோளா யெய்திய தென்னை யென்ன
முழுதுல களித்த தந்தை முந்தையோர் முறையி னின்றும்
வழுவின னதனை நீக்க மன்னனைக் கொணர்வா னென்றன்.

34 கேட்டனன் கிராதர் வேந்தன் கிளர்ந்தெழு முயிர னாகி
மீட்டுமண் ணதனில் வீழ்ந்தான் விம்மின னுவகை வீங்கத்
தீட்டரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் பூவில்
பூட்டிய கையன் பொய்யி லுள்ளத்தன் புகல லுற்றன்.

35 தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னைத்
தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் றேக்கிப்
போயினை யென்ற போழ்து புகழினோய் தன்மை கண்டால்
ஆயிர மிராமர் நின்கே ளாவரோ தெரியி லம்மா.

36 என்புகழ் கின்ற தேழை யெயினனே னிரவி யென்பான்
தன்புகழ்க் கற்றை மற்றை யொளிகளைத் தவிர்க்கு மாபோல்
மன்புகழ் பெருமை நுங்கண் மரபினோர் புகழ்க ளெல்லாம்
உன்புக ழாக்கிக் கொண்டா யுயர்குணத் துரவுத் தோளாய்.

37 ஏனையிவை யனைய மாற்ற மினையவன பலவுங் கூறிப்
புனைகழற் புலவு வேற்கைப் புளிஞர்கோன் பொருவில் காதல்
அனையவற் கமைவிற் செய்தா னரவற் கன்பி லாதார்
நினைவருங் குணங்கொ டன்றோ விராமன்மே னிமிர்ந்த காதல்.

38 அவ்வழி யவனை நோக்கி யருடரு வாரி யன்ன
செவ்வழி யுள்ளத் தண்ண றென்றிசை செங்கை கூப்பி
எவ்வழி யுறைந்தா னம்மு னென்றலு மெயினர் வேந்தன்
இவ்வழி வீர யானே காட்டுவ லெழுக வென்றான்.

39 காரெனக் கடிது சென்றான் கல்லிடைப் படுத்த புல்லின்
வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய பள்ளி கண்டான்
பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான் பருவரற் பரவை புக்கான்
வார்மணிப் புனலான் மண்ணை மண்ணுநீ ராட்டுங் கண்ணான்.

40 இயன்றதென் பொருட்டி னாலிவ் விடருனக் கென்ற போழ்தும்
அயின்றனை கிழங்குங் காயு மமிர்தென வரிய புல்லில்
துயின்றனை யெனவு மாவி துறந்திலென் சுடருங் காசு
குயின்றுயர் மகுடஞ் சூடுஞ் செல்வமுங் கொள்வென் யானே.

41 தூண்டா நிவர்ந்த தோளான் பின்னருஞ் சொல்லு வானந்
நீண்டவன் றுயின்ற சூழ லிதுவெனி னிமிர்ந்த நேயம்
பூண்டவன் றொடர்ந்து பின்னே போந்தவன் பொழுது நீத்த
தியாண்டென வினிது கேட்டா னெயினர்கோ னிதனைச் சொன்
[னான்.

42 அல்லையாண் டமைந்த மேனி யழகனு மவளுந் துஞ்ச
வில்லையூன் றியகை யோடும் வெய்துயிர்ப் போடும் வீரன்
கல்லையாண் டுயர்ந்த தோளாய் கண்க ணீர் சொரியக் கங்குல்
எல்லைகாண் பளவு நின்றா னிமைப்பில னயன மென்றான்.

43 என்பதைக் கேட்ட மைந்த னிராமனுக் கிளையா ரென்று
முன்பொருத் தோற்றத் தேமில் யானென்று முடிவி லாத
துன்பத்துக் கேது வானே னவனது துடைக்க நின்றான்
அன்பத்துக் கெல்லை யுண்டோ வழகிதென் னடிமை யென்றான்.

44 அவ்விடை யண்ண ருனு மன்றரும் பொடியின் வைகித்
தெவ்விடை தாஙின் ருர்க்குஞ் செறிகழற் புளிஞர் கோமாஅன்
இவ்விடைக் கங்கை யாற்றி னேற்றினே யாயி னெம்மை
வெவ்விடர்க் கடனின் றேற்றி வேந்தன்பால் விடுத்த தென்ருன்.

45 நன்றெனப் புளிஞர் வேந்த னண்ணினன் றமரை நாவாய்
சென்றுநீர் தருதி ரென்ன வந்தன சிவன்சேர் வெள்ளிக்
குன்றெனக் குனிக்கு மம்பொற் குவடெனக் குபேரன் மானம்
ஒன்றென நாணிப் பல்வே றுருவுகொண் டனைய வான.

46 நங்கையர் நடையி னன்ன நானுறு செலவி னுவாய்
கங்கையு மிடமி லாமை மிடைந்தன கலந்த வெங்கும்
அங்கொடிங் கிழித்தி யேற்று மமைதியி னமரர் வையத்
திங்கொடங் கிழித்தி யேற்று மிருவினை யென்ன லான.

47 வந்தன வரம்பி னுவாய் வரிசிலைக் குரிசின் மைந்த
சிந்தனை யாவ தென்று சிருங்கிபே ரியர்கோன் செப்பச்
சுந்தர வரிவி லானுஞ் சுமந்திரன் றன்னை நோக்கி
எந்தையித் தானை தன்னை யேற்றுதி விரைவி னென்ருன்.

48 குரிசில தேவ லாலக் குரகதத் தேர்வ லானும்
வரிசையின் வழாமை நோக்கி மாபுளி வகையி னேற்ற
கரிபரி யிரதங் காலாள் கணக்கறு கரையில் வேலை
எரிமணித் திரையின் வீசுங் கங்கையா றேறிற் றன்றே.

49 இடிபடு முழக்கம் பொங்க வினமழை மகர நீரை
முடிவுற முகப்ப வூழி யிறுதியின் மொய்ப்ப போலக்
கொடியொடு வங்கம் வேலை கூம்பொடு படர்வ போல்
நெடியகை யெடுத்து நீட்டி நீந்தின நெடுங்கை வேழம்.

50 சங்கமு மகர மீனுந் தரளமு மணியுந் தள்ளி
வங்கநீர்க் கடலும் வந்து தன்வழிப் படா மானப்
பொங்குவெங் களிறு நூக்கக் கரையொரீஇப் போயிற் றம்மா
கங்கையு மிராமற் காணுங் காதல தென்ன மாதோ.

51 கொடிஞ்சொடு தட்டு மச்சு மாழியுங் கோத்த மொட்டும்
நெடுஞ்சுவர்க் கொடியும் யாவு நெறிவரு முறையி னீக்கி
விடுஞ்சுவற் புரவி யோடும் வேறுவே றேற்றிச் சென்ற
மடிஞ்சபி னுடம்பு கூட்டும் வினையென வயிரத் தேர்கள்.

52 நாலிரண் டாய கோடி நவையினு வாய்கண் மீதா
சேறிரண் டனைய வாய கதியொடு நதியிற் சென்ற
பாறிரண் டனைய மெய்ய பயந்திரண் டனைய நெஞ்சக்
காறிரண் டனைய கால கடுநடைக் கலினப் பாய்மா.

53 பொலன்குழை மகளிர் நாவாய் போக்கினன் றொன்று தாக்க
மலங்கின ரிரண்டு பாலு மறுகினர் வெருவி நோக்க
அலங்குநீர் வெள்ளந் தள்ளி யழிதரா வங்கு மிங்கும்
கலங்கலின் வெருவிப் பாயுங் கயற்குல நிகர்த்த கண்கள்.

* * * *

54 இக்கரை யிரைத்த சேனை யெறிகடன் முகந்த வெஃகி
அக்கரை யடைய வீசி வறியன வணுகு நாவாய்
புக்கலை யாழி நன்னீர் பொறுத்தன போக்கிப் போக்கி
அக்கணத் துவரி மீளு மகன்மழை நிகர்த்த வம்மா.

55 அகிலிடு தூப மன்ன வாய்மயிற் பீலி யார்த்த
முகுளிடு முரண்மாத் தண்டு கூம்பென முகிலின் வண்ணத்
துகிலொடு தொடுத்த செம்பொற் றகட்டிடை தொடுத்த முத்தம்
நகுகொடி நெடிய பாயி னவ்வெனச் சென்ற நாவாய்.

56 ஆனனங் கமலத் தன்ன மின்னன வமிர்தச் செவ்வாய்த்
தேனனை குழலா ரேறு மம்பிகள் சிந்து முத்தம்
மீனென விரிந்த கங்கை விண்ணெனப் பண்ணை முற்றி
வானவர் மகளி ரூரு மானமே நிகர்த்த மாதோ.

57 துளிபடத் துழாவு திண்கோற் றுடுப்பிரு காலிற் றோன்ற
நளிர்புனற் கங்கை யாற்றி னடந்தெனச் செல்லு நாவாய்
களியுடை மஞ்ஞை யன்ன கனங்குழை கயற்கண் மாதர்
ஒளிரடிக் குழலர் தீண்ட வுயிர்படைத் தனவே யொத்த.

58 மய்யறு விசும்பின் மண்ணின் மற்றுமோ ருலகின் முற்றும்
மெய்வினை தவமே யன்றி மேலுமொன் றுளதோ கீழோர்
செய்வினை நாவா யேறித் திண்டலர் மனத்திற் செல்லும்
மொய்விசும் போட மாகத் தேவரின் முனிவர் போனார்.

வேறு.

59 அறுபதி னாயிர மக்கு ரோணியென்
றிறுதிசெய் சேனையு மெல்லை தீர்நகர்
மறுவறு மாக்களு மகளிர் வெள்ளமும்
செறிதிரைக் கங்கையின் கிடக்கச் சென்றவே.

60 சுழித்துநீர் வருதுறை யாற்றைச் சூழ்படை
கழித்துநீங் கியதெனக் கள்ள வாசையை
அழித்துவே றவனிபண் டாண்ட வேந்தரை
இழித்துமே லேறினான் றானு மேறினான்.

61 தன்னன தம்பியுந் தாயர் மூவரும்
சொன்னதேர் வலவனுந் தூய தோழனும்
துன்னின ரேறலுந் துழாது டிப்பெனும்
நன்னயக் காலினா னடத்தன் மேயினான்.

வேறு.

62 சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற
கோசலையைத் தொழுது நோக்கி
வெற்றித்தார்க் குரிசிலிவ ராரென்று
குகன்வினவ வேந்தர் வைகும்
முற்றத்தான் முதற்றேவி மூன்றுலக
மீன்றானை முன்னீன் றானைப்
பெற்றத்தாற் பெறுஞ்செல்வம் யான்பிறத்த
லாற்றுறந்த பெரியா ளென்றான்.

63 என்றலுமே யடியின்மிசை நெடிதுவீழ்ந்
தழுவானை யிவன்யா ரென்று
கன்றுபிரி காராவின் றுயருடைய
கொடிவினவக் கழற்கான் மைந்தன்

இன்றுணைவ னிராகவனுக் கிலக்குவற்கு
மிளையவற்கு மெனக்கு மூத்தான்
குன்றனைய திருநெடுந்தோட் குகனென்பா
னிந்நின்ற குரிசி லென்றான்.

64 நைவீர லீர்மைந்தீ ரினித்துயரா
லுடிறந்து காடு நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவு நலமாயிற்
றாமன்றே விலங்க றிண்டோள்
கைவீரக் களிறனைய காளையிவன்
றன்னோடுங் கலந்து நீங்கள்
ஐவீரு மொருவீரா யகலிடத்தை
நெடுங்கால மளித்தி ரென்றாள்.

65 அறந்தானே யென்கின்ற வயனின்று
டனைநோக்கி யைய வன்பின்
நிறந்தானை யுரையென்ன நெறிதிறம்பாத்
தன்மெய்யை நிற்ப தாக்கி
இறந்தான்ற னிளந்தேவி யாவர்க்குந்
தொழுகுலமா மிராமன் பின்பு
பிறந்தானு முளனென்னப் பிரியாதான்
றனைப்பயந்த பெரியா ளென்றான்.

66 சுடுமயா னத்திடைதன் றுணையேகத்
தோன்றறுயர்க் கடலி னேகக்
கடுமையார் கானகத்துக் கருணையார்
கலியேகக் கழற்கான் மாயன்
நெடுமையா லன்றளந்த வுலகெல்லாந்
தன்மனத்தே நினைந்து செய்யும்
கொடுமையா லளந்தானை யாரிவரென்
றுரையென்னக் குரிசில் கூறும்.

67 படரெலாம் படைத்தானைப் பழிவளர்க்குஞ்
செவிலியைத்தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலங் கிடந்தேற்கு
முயிர்ப்பாரங் குறைந்து தேய

உடலொலா முயிரிலா வெனத்தோன்று
மூலகத்தே யொருத்தி யன்றே
இடரிலா முகத்தாளை யறிந்திலையே
லிந்நின்று ளென்னை யீன்றாள்.

வேறு.

68 என்னக் கேட்டவ் விரக்கமி லாளையும்
தன்னற் கையின் வணங்கினன் றுயென
அன்னப் பேடை சிறையில தாய்க்களை
துன்னிற் றென்னவும் வந்தது தோணியே.

69 இழிந்த தாயர் சிவிகையி னேறத்தான்
பொழிந்த கண்ணிற் புதுப்புனல் போயினான்
ஒழிந்தி லன்குக னும்முட னேகினான்
கழிந்த னன்பல காவதந் நாலினே.

70 பரத்தி னீங்கும் பரத்துவ னென்னும்பேர்
வரத்தின் மிக்குயர் மாதவன் வைகிடம்
அருந்தி கூர வணுகின னண்டவன்
விருத்தி வேதிய ரோடெதிர் மேவினான்.

11-வது. குகப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 73ல்-70.



## 12-வது. கிளைகண்டு நீங்குபடலம்.



அயோத்தியிலிருந்து தாய்மார் தம்பிமார் முதலான சுற்றத்தாரெல்லாம் வந்து இராமனைக்கண்டு திரும்பிப்போன கதையைச் சொல்லுதலால் இந்தப் படலத்துக்கு அந்தப் பெயர் வந்தது. (கிளை—சுற்றம்.)

இதின் கதையாவது: பரத்துவாசமாமுனிவராச்சிரமத்திற்குப் பரதர் சேர அம்முனிவர் இவரைச் சேனையோடு அழைத்துப்போய் ஒரு ஓமஞ்செய்து அதன் மகிமையால் தேவலோகத்தாரைக்கொண்டு இச்சேனைக்கெல்லாம் திவ்வியமான விருந்துசெய்வித்தார் பரதரோ காய்கிழங்கேயுண்டு தரை யிற்படுத்திருந்தார். மறுநாள் சூரியோதயமானபின்பு பரதர் சேனைசூழச் சித்திரகூடநோக்கிச் செல்லும்போது, இவ்வாரவாரத்தைக் கேட்டுச் சித்திர கூடத்திலிருந்த லக்ஷ்மணர் உயரத்திலேறிப்பார்த்துப் பரதர்சேனையுடன் இரா மர்மேல் சண்டைக்குவருவதாய் எண்ணி இராமரிடஞ்சென்று, பரதன்

இங்ஙனம் வருகிறான்; அவனையும் அவன் படையையும் நான் தொம்சஞ் செய்கிறேன், அடியேனுக்குக் கட்டளைதரவேண்டுமென்று பலவகை வீரவாதம்பண்ண, இராமர் அதுகேட்டு: தம்பி அவசரப்படாதே; பரதன் அப்படிப்பட்ட கருத்துள்ளவனல்லன்; நமக்கு இராச்சியங்கொடுக்க வருகிறானென்று தம்பியை அடக்கினின்றார். இவ்வளவிலே பரதர் தன் சேனையைப் பின்வைத்துத் தானுந்தம்பியு முந்துசென்று கண்ணுங்கண்ணீருமாய்க் கதறிக்கொண்டு ஸ்ரீராமர் பாதங்களில் வீழ்ந்தார். அவரை இராமர் எடுத்து அணைத்து லக்ஷ்மணருக்கு உண்டான சங்கையை நீக்க, அவரும் சங்கைநீங்கிக் கண்ணீருகுத்துக்கொண்டு தலையிறங்கினின்றார். பின்பு தந்தை இறந்தசெய்தியைப் பரதர் உரைக்கக்கேட்டு இராமர் விழுந்து புலம்பித் தம்பிமார் முதலியோரால் தாங்கப்பட்டுத் தம்பியுந்தானும் நீராடி வசிட்டர்சொற்படி பிதாவுக்குச் செய்யவேண்டிய கடமையைத் தீர்த்து வங்கியிருந்தார். சீதாதேவியும் அப்படியிருந்தாள். அதன் பின்பு ஸ்ரீராமர் தாய் முதலானோருக்கு வந்தனை வழிபாடுகளைச் செய்துநிற்கையில் பரதர் கைகூப்பிக்கொண்டு, சுவாமி திரும்பி அயோத்திக்கு எழுந்தருளி ராச்சியபரிபாலனம் செய்தருளவேண்டுமென்று வேண்ட, அவர் உன் தாயும் தந்தையும் உனக்களித்த நாட்டை நீயே ஆளவேண்டுமென்ன, பரதர், மூடத்தனத்தால் நடந்ததை நான் அங்கீகரிக்கமாட்டேன், நமது குலமுறைமைப்படி தேவரீரே அதை ஆளவேண்டும். தாய் தந்தைகள் கொடுத்ததனால் ராச்சியம் எனதென்று தேவரீர் எண்ணினால் அதை இப்போது நான் தேவரீருக்குச் சமர்ப்பிக்கிறேன், திருவுள்ளம்பற்றி ஆளவேண்டுமென்று பிரார்த்திக்க; தாய்தந்தைகளினும் மேலானவர் இல்லை, அதை மறுக்காதே; என் கட்டளைப்படி நட என்று இராமர் சொல்லக்கேட்டுப் பரதர் அதைத் தடுக்கமாட்டாமல் தலையிறங்கிநிற்க, அவரைநோக்கி, அப்பா தம்பி, பதினான்கு வருடங்கழிந்தபின் உன் இஷ்டப்படி நடக்கிறேன் என்று ராமர் அவரைத் தேற்றினார். ஆகில் அடியேனுக்குத் திருவடி நிலையையாவது அளிக்கவேண்டுமென்று கும்பிட்டுப் பிரார்த்தித்த தம்பிக்கு அவைகளை அளித்து விடைகொடுத்தனுப்பினார். அந்தப் பாதுகைகளைப் பரதர் அரசன் போல எண்ணித் தமது திருமுடியில் வைத்து வெகு விபவத்தோடு புறப்பட்டு அயோத்திக்குப் போகாமல் நந்திக்கிராமத்திலேயிறங்கி அவைகளைப் பூசித்துக்கொண்டு ராச்சியபரிபாலனஞ்செய்துவந்தார். குகனும் மற்றும் வந்தவர்களும் பரதர் உத்தரவினால் அவரவரிடஞ் சேர்ந்தார்கள் என்பதாம்.

1 வந்த மாதவத் தோனையம் மைந்தனும்
தந்தை யாமெனத் தாழ்ந்து வணங்கினான்
இந்து மௌலியன் னானு மிரங்கினான்
அந்த மில்குணத் தாசிகள் கூறினான்.

2 எடுத்த மாமுடி சூடிநின் பாலியைந்
தடுத்த பேரர சாண்டிலை யையநீ
முடித்த வார்சடைக் கற்றையை மூசுநா
சுடுத்து நண்ணுதற் கூற்றுள தியாதென்றான்.

3 சினக்கொ டுந்திறற் சீற்றவெங் தீயினுன்
மனக்க டுப்பினன் மாதவத் தோங்கலை
எனக்க டுத்த தியம்பிலை நீயென்முன்
உனக்க டுத்தது மன்றுர வோயென்முன்.

4 மறையின் கேள்வற்கு மன்னிளந் தோன்றல்பின்
முறையி னீங்கி முழுநிலங் கொள்கிலேன்
இறைவன் காக்கில னுமெனில் யாண்டெலாம்
உறைவென் கானத் தொருங்குட னேயென்முன்.

5 உரைத்த வாசகங் கேட்டலு முள்ளெழுந்
திரைத்த காத லிருந்தவத் தோர்க்கெலாம்
குரைத்த மேனியொ டுள்ளங் குளிர்ந்ததால்
அரைத்த சாந்துகொ டப்பிய தென்னவே.

6 ஆய காதலோ டையனைக் கொண்டுதன்
தூய சாலை யுறைவிடந் துன்னினுன்
மேய சேனைக் கமைப்பென் விருந்தெனத்
தீயி னுவுதி செங்கையி னீக்கினுன்.

7 துறந்த செல்வ னினையத் துறக்கந்தான்
பறந்து வந்து படிந்தது பல்சனர்
பிறந்து வேறோ ருலகுபெற் ருரென
மறந்து வைகினர் முன்னைத்தம் வாழ்வெலாம்.

8 நந்த வில்லற நந்தின ராமென
அந்த ரத்தி னரம்பைய ரன்பினர்
வந்து வந்தெதி ரேத்தினர் மைந்தரை
இந்து விற்சுடர் கோயில்கொண் டேகினர்.

9 ஞான நன்குரைத் தார்நளிர் வானிடை
ஆன கங்கை 'யருேம்புன லாட்டினர்
தான மாமணிக் கற்பகந் தாங்கிய
ஊன மின்மல ராடை யுடுத்தினர்.

10 கொம்பி னின்று நுடங்குறு கொள்கையார்
செம்பொ னின்கல ராசி திருத்தினார்
அம்ப ரத்தி னரம்பைய ரன்பொடும்
உம்பர் கோனுக ரின்னமிர் தூட்டினார்.

11 அஞ்ச டுத்த வமளி யலத்தகப்
பஞ்ச டுத்த பரிபுரப் பல்லவ
நஞ்ச டுத்த நயனியர் நவ்வியில்
துஞ்ச வத்தனை மைந்தருந் துஞ்சினார்.

12 ஏந்து செல்வத் திமையவ ராமெனக்
கூந்தற் றெய்வ மகளிர்கொண் டாடினார்
வேந்த ராதி சிவிகையின் வீங்குதோள்
மாந்தர் காறும் வரிசை வழாமலே.

13 மாதர் யாவரும் வானவர் தேவியர்
கோதில் செல்வத்து வைகினர் கொவ்வைவாய்த்
தீதில் செல்வ மடந்தையர் சேடியர்
தாதி மாரெனத் தம்பணி கேட்பவே.

14 நந்த நந்த வனங்களி னாண்மலர்
கந்த முந்திய கற்பகக் காவினின்
றந்தர் வந்தென வந்திதன் கைதர
மந்த மந்த மணந்தது வாடையே.

15 மான்ற ளிக்குல நன்மதம் வந்துணத்
தேன்ற ளிர்த்த கவளமுஞ் செங்கதிர்
கான்ற நெற்றழைக் கற்றையுங் கற்பகம்
ஈன்ற ளிக்க நுகர்ந்தன யானையே.

6 நாக தற்கற நல்கு நலத்தகீர்
கரக தக்கரி கானிமிர்த் துண்டன
மாக தத்தின் கொழுந்தென வார்ந்தபுல்
குரக தத்தின் குழாங்களுங் கொண்டவே.

17 இன்ன ரின்னணம் யாவரு மிந்திரன்
துன்னு போகங்க டெய்த்தனர் தோன்றுறன்
அன்ன காயுங் கிழங்குமுண் டப்பகல்
பொன்னின் மேனி பொடியுறப் போக்கினன்.

18 நீல வல்லிரு ணீங்கலு நீங்குமம்
மூல மில்கன விற்றிரு முற்றுற
ஏலு நல்வினை துய்ப்பவர்க் கீறுசெல்
கால மென்னக் கதிரவன் றேன்றினன்.

19 ஆறி நின்றற மாற்றலர் வாழ்வெனப்
பாறி வீய்ந்தது செல்வம் பரிந்திலர்
தேறி முந்தைத்தஞ் சிந்தைய ராயினர்
மாறி வந்து பிறந்தன்ன மாட்சியார்.

வேறு.

20 காலையன் றெழுந்தது கண்டு வானவர்
வேலையன் றனிகமே யென்று விம்மறச்
சோலையுங் கிரிகளுஞ் சுண்ண மாயெழுப்
பாலைசென் றடைந்தது பரதன் சேனையே.

21 எழுந்தது துகளதி னெரியும் வெய்யவன்
அழுந்தின னவிப்பரு வெம்மை யாறினன்
பொழிந்தன கரிமதம் பொடிவெங் கானகம்
இழிந்தன வடிநடந் தேறெ ளுமையே.

22 வடிவுடை யயிற்படை மன்னர் வெண்குடைச்
செடியுடை நெடுநிழல் செய்த தீப்பொதி
படியுடைப் பாலைப் பாலை மேலுயர்
கொடியுடைப் பந்தரிற் குளிர்ந்த தெங்குமே.

23 பெருகிய செல்வநீ பிடியென் றுள்வயின்
திருகிய சீற்றத்தாற் செம்மை யாய்நிறம்
கருகிய வண்ணலைக் கண்டு காதலின்
உருகிய தளிர்த்தன வுலவை யீட்டமே.

24 வன்றெறு பாலையை மருத மாமெனச்
சென்றது சித்திர கூடஞ் சேர்ந்ததால்
ஒன்றுணைத் துயிரினு மொழுக்க நன்றெனப்
பொன்றிய புரவலன் பொருவில் சேனையே.

25 தூளியின் படலையுந் துரகந் தேரொடு
மூளிருஞ் சினக்கரி முழங்கு மோதையும்
ஆளிருங் குழுவின ராா வாரமும்
கோளிரும் படையிதென் றுணாக் கூறவே.

26 எழுந்தன னிளையவ னேறி ஞனிலம்
கொழுந்துயர்ந் தனையதோர் நெடிய குன்றின்மேல்
செழுந்திரைப் பரவையைச் சிறுமை பேசிய
கழுந்துடை வரிசிலைக் கடலை நோக்கினான்.

27 பரதனிப் படைகொடு பார்கொண் டாள்மறம்
கருதியுட் கிடந்ததோர் கறுவு காதலால்
விரதமுற் றிருந்தவன் மேல்வந் தானிது
சரதமற் றிலதெனத் தழங்கு சீற்றத்தான்.

28 குதித்தனன் பாரிடைக் குவடு நீறெழ
மிதித்தன னிராமனை விரைவி னெய்தினான்
மதித்திலன் பாதனின் மேல்வந் தான்மதிட்
பதிப்பெருஞ் சேனையின் பரப்பி னைனென்றான்.

29 கட்டினன் சுரிகையுங் கழலும் பல்கணைப்
புட்டிலும் பொறுத்தனன் கவசம் பூட்டமைத்
திட்டன னெடுத்தனன் வரிவி லேந்தலைத்
தொட்டடி வணங்கினின் றினைய சொல்லினான்.

30 இருமையு மிழந்தவப் பாத னேந்துதோட்
பெருமையு மன்னவன் படைத்த சேனையின்
பெருமையு நின்னொரு பின்பு வந்தவென்
னொருமையுங் கண்டினி யுவத்தி யுள்ளமே.

31 படரெலாம் படப்படும் பருமயானையின்
திடரெலா முருட்டின தேரு மீர்த்தன
குடரெலாந் திரைத்தன குருதி யாறுகள்
கடரெலா மடுப்பன பலவுங் காண்டியால்.

32 கருவியுங் கைகளுங் கவச மார்பமும்
உருவின வுயிரினோ டுதிரந் தோய்வில
திரிவன சுடர்க்கணை திசைக்கை யானைகள்
வெருவரச் செய்வன காண்டி வீரநீ.

33 கோடகத் தேர்படு குதிரை தாவிய
ஆடகத் தட்டிடை யலகை யற்றுகு
கேடகத் தடக்கைகள் கவ்விக் கீதத்தின்
நாடக நடிப்பன காண்டி நாதநீ.

34 பண்முதிர் களிற்றொடு பாதன் சேனையின்
எண்முத லறுத்துநா னிமைப்பி னீக்கலால்
விண்முது குளுக்கவும் வேலை யாடையின்
மண்முது காற்றவுங் காண்டி வள்ளனீ.

35 நிவந்தவான் குருதியி னீத்த நீந்திமெய்
சிவந்தசா தகரொடு சிறுகட் கூளியும்
கவந்தமு முலகநின் கைய தாயதென்
றுவந்தன குனிப்பன காண்டி யும்பர்போல்.

36 சூழிவெங் கடகரி துரக ராசிகள்
பாழிவன் புயத்திகல் வயவர் பட்டற
வீழிவெங் குருதியா லலைந்த வேலைகள்
ஏழுமொன் றாகிநின் றிரைப்பக் காண்டியால்.

37 ஆளற வலங்குதே ரழிய வாடவர்
வாளற வரிசிலை துணிய மாக்கரி
தாளறத் தலையறப் புறவி தாளொடும்
தோளற வடிகணை தொலைப்பக் காண்டியால்.

38 தழைத்தவான் சிறையன தசையுங் கவ்வின
அழைத்தவான் பறவைக ளலங்கு பொன்வடிம்
பிழைத்தவான் பகழிபுக் கிருவர் மார்பிடை
புழைத்தவான் பெருவழி போவக் காண்டியால்.

39 ஒருமகள் காதலி னுலகை நோய்செய்த
பெருமக னேவலிற் பரதன் றன்பெறும்
இருநில மாள்கைவிட் டின்றெ னேவலால்
அருநர காள்வது காண்டி யாழியாய்.

40 வையகந் துறந்துவந் தடவி வைகுதல்
எய்திய துனக்கென நின்னை யீன்றவள்
நைதல்கண் டுவந்தவ ணவையி னோங்கிய
கைகயன் மகள்விழுந் தரற்றக் காண்டியால்.

41 அரஞ்சுட வழனிமி ரலங்கல் வேலினாய்
விரஞ்சொரு நொடியிலிவ் வனிக வேலையை
உரஞ்சுடு வடிக்கணை யொன்றில் வென்றுழப்
புரஞ்சுடு மொருவனிற் பொலிவென் யானென்றான்.

42 இலக்குவ வுலகமோ ரேழு மேழுநீ
கலக்குவ னென்பது கருதி னாலது
விலக்குவ தரிதது விளம்பல் வேண்டுமோ
புலக்குரித் தொருபொருள் புகலக் கேட்டியால்.

43 நங்குலத் துதித்தவர் நவையு ணீங்கினர்
எங்குலப் புறுவர்க ளெண்ணில் யாவரே
தங்குலத் தொருவருந் தரும நீங்கினர்
பொங்குலத் திரளொடும் பொருத தோளினாய்.

44 எனைத்துள மறையவை யியம்பற் பாலன
பனைத்திரள் காக்கரிப் பரதன் செய்கையே
அனைத்திற மல்லன வல்ல வன்னது
நினைத்திலை யுன்வயி னேய நெஞ்சினால்.

45 பெருமக னென்வயிற் பிறந்த காதலின்
வருமென நினைகையு மண்ணை யென்வயின்
தருமென நினைகையுந் தவிரத் தானையால்
பொருமென நினைகையும் புலமைப் பாலதோ.

46 பொன்னொடும் பொருகழற் பரதன் போந்தனன்
நன்னெடும் பெரும்படை நல்க லன்றியே
என்னொடும் பொருமென வியம்பற் பாலதோ
மின்னொடும் பொருவுற விளங்கும் வேலினாய்.

47 சேணுயர் தருமத்தின் றேவைச் செம்மையின்
ஆணியை யன்னது நினைக்க லாகுமே
பூணியன் மொய்ம்பினாய் போந்த தீண்டெனைக்
காணிய நீயிது பின்னுங் காண்டியால்.

48 என்றன னிளவலை நோக்கி யேந்தலும்
நின்றனன் பரதனு நிமிர்ந்த சேனையைப்
பின்றரு கென்றுதன் பிரிவில் காதலில்
தன்றுணைத் தம்பியுந் தானு முந்தினான்.

49 தொழுதுயர் கையினன் றுவண்ட மேனியன்
அழுதழி கண்ணின னவல மீதென
எழுதிய படிவமொத் தெய்து வான்றனை
முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினான்.

50 கார்ப்பொரு மேனியக் கண்ணன் காட்டினான்
ஆர்ப்புறு வரிசிலை யிளைய வையநீ
தேர்ப்பெருந் தானையாற் பரதன் சீறிய
போர்ப்பெருங் கோலத்தைப் பொருந்த நோக்கென

51 எல்லொடுங் கியமுகத் திளவ னின்றனன்
மல்லொடுங் கியபுயத் தவனை வைதெழும்
சொல்லொடுஞ் சினத்தொடு முணர்வு சோர்தர
வில்லொடுங் கண்ணநீர் நிலத்து வீழவே.

52 கோதறத் தவஞ்செய்து குறிப்பி னெய்திய
நாதனைப் பிரிந்தன னலத்து நீங்கினாள்
வேதனைத் திருமகண் மெலிகின் றாள்விடு
தூதெனப் பரதனுந் தொழுது தோன்றினான்.

53 அறந்தனை நினைந்திலை யருளை நீத்தனை
துறந்தனை முறைமையை யென்னுஞ் சொல்லினான்
மறந்தனன் மலரடி வந்து வீழ்ந்தனன்
இறந்தனன் றாதையை யெதிர்கண் டென்னவே.

54 உண்டுகொ லுயிரென வொடுங்கி னானுருக்
கண்டன னின்றனன் கண்ணன் கண்ணெனும்
புண்டரீ கம்பொழி புனல வன்சடா
மண்டல நிறைந்துபோய் வழிந்து சோரவே.

55 அயாவுயிர்த் தழுகணி யருவி மார்பிடை
உயாவுறத் திருவுள முருகப் புல்லினான்
நியாயமத் தனைக்குமோர் நிலய மாகினான்
தயாமுத லறத்தினைத் தழுவி யென்னவே.

56 புல்லின னின்றவன் புனைந்த வேடத்தை
பல்முறை நோக்கினான் பலவு முன்னினான்
அல்லலி னழுங்கினை யைய வாளுடை
மல்லுயர் தோளினான் வலிய னோவென்றான்.

57 அரியவ னுரைசெயப் பரத னையநின்
பிரிவெனும் பிணியினா லென்னைப் பெற்றவக்
கரியவள் வரமெனுங் கால னாறனக்
குரியமெய் நிறுவிபோ யும்ப ரானென்றான்.

58 விண்ணிடை யடைந்தன னென்ற வெய்யசொல்
புண்ணிடை யயிலெனச் செவிபு காமுனம்
கண்ணொடு மனஞ்சுழல் கறங்கு போலவாய்
மண்ணிடை விழுந்தனன் வானி னும்பரான்.

59 இருநிலஞ் சேர்ந்தன னிறையு யிர்த்திலன்
உருமினை யரவென வுணர்வி னீங்கினான்
அருமையி னுயிர்வர வயா வுயிர்த்தகம்
பொருமினன் பன்முறை புலம்பி னானரோ.

வேறு.

60 நந்தா விளக்கனைய நாயகனே நானிலத்தோர்
தந்தாய் தனியறத்தின் றாயே தயாநிலையே
எந்தா யிகல்வேந்த ரேறே யிறந்தனையே
அந்தோ வினிவாய்மைக் காருளரே மற்றென்றான்.

61 சொற்பெற்ற நோன்பின் றுறையோ னருள்வேண்டி
நற்பெற்ற வேள்வி நவைநீங்க நீயியற்றி
எற்பெற்று நீபெற்ற வின்னுயிர்போய் நீங்கலோ
கொற்பெற்ற வெற்றிக் கொலைபெற்ற கூர்வேலோய்.

62 மன்னுயிர்க்கு நல்குரிமை மண்பார நான்சுமக்க
பொன்னுயிர்க்குந் தாரோய் பொறையுயிர்த்த வாறிதுவோ
உன்னுயிர்க்குங் கூற்று யுலகாள வுற்றேனோ
மின்னுயிர்க்குந் தீவாய் வெயிலுயிர்க்கும் வெள்வேலோய்.

63 என்பரத்த தாக்கி யரசுரிமை யிந்தியங்கள்
வெம்பவத்தின் வீயத் தவம்விளைத்த வாறிதுவோ
சம்பரப்பேர்த் தானவனைத் தள்ளிச் சுரமகன்றன்
அம்பரத்தி னீங்கா வரசளித்த வாழியாய்.

64 வேண்டி திறந்தாரும் வேண்டா வரசாட்சி
பூண்டிவ் வுலகுக் கிடர்கொடுத்த புல்லனேன்
மாண்டு முடிவதல்லான் மாயா வுடம்பிதுகொண்
டாண்டு வருவதினி யார்முகத்தே நோக்கவோ.

65 தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டு
கானடைந்தே னென்னத் தரியாது காவலநீ
வானடைந்தா யின்ன மிருந்தேனான் வாழ்வுகந்தே
ஊனடைந்த தெவ்வ ருயிரடைந்த வொள்வேலோய்.

66 வண்மைஇயு மானமுமேல் வானவர்க்கும் பேர்க்ககிலாத்
திண்மைஇயுஞ் செங்கோ னெறியுந் திறம்பாத
உண்மைஇயு மெல்லா முடனேகொண் டேகினையே
தண்மைஇ தகைமதிக்கு மீந்த தனிக்குடையோய்.

67 என்றெடுத்துப் பற்பலவும் பன்னி யிடருழக்கும்
குன்றெடுத்த வொக்குங் குவவுத்தோட் கோளரியை
வன்றடக்கைத் தம்பியரு மற்றுள்ள மன்னவரும்
சென்றெடுத்துத் தாங்கினார் மாவதிட்டன் றேற்றினான்.

68 பன்னரிய நோன்பின் பரத்துவனே யாதியாம்
பின்னு சடையோரும் பேருலக மோரேழின்
மன்னவரு மந்திரிய ரெல்லாரும் வந்தடைந்தார்
தன்னுரிமைச் சேனைத் தலைவோருந் தாயடைந்தார்.

69 மற்றும் வரற்பால ரெல்லாரும் வந்தடைந்தார்
சுற்று மிருந்த வமைதியினிற் றுன்புழக்கும்
கொற்றக் குரிசின் முகநோக்கிக் கோமலரோன்
பெற்ற பெருமைத் தவமுனிவன் பேசுவான்.

வேறு.

70 துறத்தலு நல்லறத் துறையு மல்லது
புறத்தொரு துணையிலை பொருந்து மன்னுயிர்க்
கிறத்தலும் பிறத்தலு மியற்கை யென்பதை
மறத்தியோ மறைகளின் வரம்பு கண்டநீ.

71 உண்மையில் பிறவிக ளுலப்பில் கோடிகள்
தண்மையில் வெம்மையி றழுவி னவ்வெனும்
வண்மையை நோக்கிய வரிய கூற்றின்பால்
கண்மையு முளதெனக் கருத லாகுமோ.

72 பெறுவதன் முன்னுயிர் பிரிதல் காண்டியால்
மறுவறு கற்பினில் வையம் யாவையும்
அறுபதி னாயிர மாண்டு மாண்டவன்
இறுவது கண்டவற் கிரங்கல் வேண்டுமோ.

73 சீலமுந் தருமமுஞ் சிதைவில் செய்கையும்
சூலமுந் திகிரியுஞ் சொல்லுந் தாங்கிய
மூலம்வந் துதவிய மூவர்க் காயினும்
காலமென் றொருவலை கடக்க லாகுமோ.

74 கண்முதற் காட்சிய கரையி னீளத்த
உண்முதற் பொருட்கெலா மூற்ற மாவன
மண்முதற் பூதங்கள் மாயு மென்றபோ
தெண்முத லுயிர்க்குநீ யிரங்கல் வேண்டுமோ.

75 புண்ணிய நறுநெயில் பொருவில் காலமாம்
திண்ணிய திரியினில் விதியென் றீயினில்
எண்ணிய விளக்கவை யிரண்டு மெஞ்சினால்
அண்ணலே யவிவதற் கைய மாவதோ.

76 இவ்வுல கத்தினு மிடரி னேகிடந்
தவ்வுல கத்தினு நரகி னாழ்ந்துபின்
வெவ்வினை துய்ப்பன விரிந்த யோனிகள்
எவ்வள விற்செல வெண்ண லாகுமே.

77 உண்டுகொ லிதுவல துதவி நீசெய்வ
தெண்டகு குணத்தினாய் தாதை யென்றலால்
புண்டரீ கத்தனி முதற்கும் போக்கரு
விண்டுவி னுலகிடை விளங்கி னானரோ.

78 ஐயநீ யாதொன்று மவலிப் பாயலை
உய்திற மவற்கினி யிதனி னுங்குண்டோ
செய்வன வான்முறை திருந்திச் சேந்தநின்
கையினா லொழுக்குதி கடனை லாமென்றான்.

79 விண்ணுநீர் மொக்குளின் விளியும் யாக்கையை
எண்ணிநீ யழுங்குத லிழுதைப் பாலதால்
கண்ணினீ ருகுத்தலிற் கண்ட தில்லைபோய்
மண்ணுநீ ருகுத்திதா மனக்கை யாலென்றான்.

80 என்றபி னேந்தலை யேந்தி வேந்தரும்
பொன்றிணிந் தனசடைப் புனித ரோடும்போய்ச்
சென்றனர் செறிதிரைப் புனலிற் செய்கென
நின்றன னிராமனு நெறியை நோக்கினான்.

81 புக்கனன் புனலினின் முழுகிப் போந்தனன்
தக்கநன் மறையவன் சடங்கு காட்டத்தான்
மூக்கையி னீர்விதி முறையி னீந்தனன்
ஒக்கநின் றுயிர்தொறு முணர்வு நல்குவான்.

82 ஆனவன் பிறவுள யாவு மாற்றிப்பின்
மானமந் திரத்தவர் மன்னர் மாதவர்
ஏனையர் பிறர்களுஞ் சுற்ற வேகினன்
சானகி யிருந்தவச் சாலை யெய்தினான்.

83 எய்திய வேலையிற் றமிய ளெய்திய
தய்யலை நோக்கினன் சாலை நோக்கினான்
கய்களில் கண்மலர் புடைத்துக் கான்மிசை
அய்யனப் பாதன்வீழ்ந் தரற்றி னானரோ.

84 வெந்துயர் தொடர்தர விம்மல் விம்மநீர்
உந்திய நிரந்தர மூற்று மாற்றில
சிந்திய குரிசிலச் செம்மல் சேந்தகண்
இந்தியங் களிலெறி கடலுண் டென்னவே.

85 அந்நெடுந் துயருறு மரிய வீரனைத்
தன்னெடுந் தடக்கையா லிராமன் றங்கினான்
நன்னெடுங் கூந்தலை நோக்கி நாயகன்
என்னெடும் பிரிவினி லிறந்திட் டானென்றான்.

86 துன்னெனு நெஞ்சினு ளேங்கி னடிணைக்
கண்ணெனுங் கடனெடுங் கலுழி கான்றிட
மண்ணெனுஞ் செவிலிமேல் வைத்த கையினாள்
பண்ணெனுங் கிளவியாற் பன்னி யேங்கினாள்.

87 கன்னகு திரள்புயக் கணவன் பின்செல
நன்னக ரொத்தது நடந்த கானமும்
மன்னவன் றுஞ்சின னென்ற மாற்றத்தால்
அன்னமுந் துயர்க்கட லடிவைத் தாளரோ.

88 ஆயவ டன்னைநேர்ந் தங்கை யெந்தினர்
தாயரின் முனிவர்தந் தருமப் பன்னியர்
தூயநீ ராட்டினர் துயர நீக்கினர்
நாயகற் சேர்த்தினர் நவையு ணீங்கினார்.

89 தேன்றருந் தெரியலச் செம்ம லூல்வனை
ஈன்றவர் மூவரோ டிருமை நோக்குறும்
சான்றவர் குழாத்தொடுந் தரும நோக்குறும்
தோன்றல்பாற் சுமந்திரன் றெழுது தோன்றினன்.

வேறு.

90 எந்தை யாண்டையா னியம்பு வீரென
வந்த தாயர்தம் வயங்கு சேவடி
சிந்தி நின்றனன் சேந்த கண்ணநீர்
முந்தை நான்முகத் தவற்கு முந்தையான்.

91 தாய ருந்தலைப் பெய்து தாந்தழீஇ
ஓய்வி லன்பினு ளூற லோங்கினர்
ஆய சேனையு மணங்க ளூர்களும்
தீயில் வீழ்ந்துகீ ழெழுகிற் றேய்பினர்.

92 பின்னவ் வீரனைப் பெற்ற பெற்றியப்
பொன்ன னூர்களுஞ் சனகன் பூவையைத்
துன்னி மார்புறத் தொடர்ந்து புல்லினர்
இன்னல் வேலைபுக் கிழிந்த மூழ்குவார்.

93 சேனை வீரருந் திருநகன் மாநகர்
மானை மாந்தரு மீற்று ளோர்களும்
ஏனை வேந்தரும் பிறரும் யாவரும்
கோனை யெய்தினர் குறையுஞ் சிந்தையார்.

94 படஞ்செய் நாகணைப் பள்ளி நீங்கினான்
இடஞ்செய் தொல்குலத் திறைவ னாதலால்
தடஞ்செய் தேரினான் றானு நீரினால்
கடஞ்செய் வானெனக் கடலின் மூழ்கினான்.

95 அன்று தீர்ந்தபி னரச வேலையும்
துன்று செஞ்சடைத் தவருஞ் சுற்றமும்
தன்று ணைத்திருத் தம்பி மார்களும்
சென்று சூழவாண் டிருந்த செம்மலான்.

96 வரதன் றுஞ்சினான் வைய மாணையால்
சரத நின்னதே மகுடந் தாங்கலாய்
விரத வேடநீ யென்கொல் வேண்டுவான்
பரத கூறெனாப் பரிந்து கூறினான்.

97 என்ற லும்பதைத் தெழுந்து கைதொழா
நின்று தோன்றலை நெடிது நோக்கிநீ
அன்றி யாவரே யறத்து ளோரதற்
பின்று வாய்கொலா மென்னப் பேசுவான்.

98 மனக்கொ ளன்றுதன வரத்தி னின்னையும்
நினக்கொன் றுனிலை நிறுவி நேமியான்
தனக்கொன் றடருந் தனைய னாதலால்
எனக்கொன் றுதவ மடுப்ப தெண்ணினால்.

99 நோவ தாகவிவ் வுலகை நோய்செய்த
பாவ காரியிற் பிறந்த பாவியேன்
சாவ தோர்கிலேன் றவஞ்செய் வேனலேன்
யாவ னாகியிப் பழிநின் றேறுவேன்.

100 நிறையி னீங்கிய மகளிர் நீர்மையும்
பொறையி னீங்கிய தவமும் பொங்கருள்
துறையி னீங்கிய வறமுந் தொல்லையோர்
முறையி னீங்கிய வரசின் முந்துமோ.

101 பிறந்து நீயுடைப் பிரிவி ருெல்பதம்
துறந்த மாதவர் தொடங்கு வாயென்ருல்
மறந்து நீதியிற் றிறம்பி வாளிற்கொன்
றறந்தின் ருலென வரச தாள்வெனே.

102 தொகையி லன்பிஞ விறைவன் ருஞ்சநீ
புகையும் வெஞ்சுரம் புகுநப் புந்தியால்
வகையில் வஞ்சஞ யரசு வவ்வயான்
பகைவ னேகொலா மிறவு பார்க்கின்றேன்.

103 உந்தை தீமையு முலகு ருதநோய்
தந்த தீவினைத் தாய்செய் தீமையும்
எந்தை நீங்கமீண் டரசு செய்கெனச்
சிந்தை யாவதுந் தெரியக் கூறினன்.

104 சொற்ற வாசகத் துணிவு ணர்ந்தபின்
இற்ற தோவிவன் மனமென் றெண்ணுவான்
வெற்றி வீரயான் விளம்பக் கேளெனு
முற்ற நோக்கினன் மொழிதன் மேயினன்.

105 முறையும் வாய்மையு முயலு நீதியும்
அறையு மேன்மையோ டறனு மாதியாம்
துறையுள் யாவையுஞ் சுருதி நூல்விடா
இறைவ ரேவலா லியைவ தாணையா.

106 பரவு கேள்வியும் பழுதில் ஞானமும்
விரவு சீலமும் வினையின் மேன்மையும்
உரவி லோய்தொழற் குரிய தேவரும்
குரவ ரேயெனப் பெரிது கோடியால்.

107 அந்த நற்பெருங் குரவ ராரெனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினல்
தந்தை தாயரென் றிவர்க டாமலால்
எந்தை கூறவே றெவரு மில்லையால்.

108 தாய்வ ரங்கொளத் தந்தை யேவலால்
மேய நங்குலத் தரும மேவினேன்
நீய்வ ரங்கொளத் தவிர்த வீர்மையோ
ஆய்வ ரும்புலத் தறிவு மேவினாய்.

109 தனைய ராயினார் தந்தை தாயரை
வினையி னல்லதோ ரிசையை வேய்தலோ
நினைய லோவிடா நெடிய வன்பழி
புனைத லோவைய புதல்வ ராதரான்.

110 இம்மை பொய்யுரைத் திவறி யெந்தையார்
அம்மை வெம்மைசேர் நரக மாளயான்
கொம்மை வெம்முலைக் குவையின் வைகிவாழ்
செம்மை சேர்நிலத் தரசு செய்வெனோ.

111 வாணி லுந்தைசொல் மாபி னாலுடைத்
தாணி நின்னதென் றியைந்த தன்மையால்
ஊணி னீபிறந் துரிமை யாதலால்
அரசு நின்னதே யாள்க வென்னவே.

112 முன்னர் வந்துதித் துலக மூன்றினும்
நின்னை யொப்பிலா நீபி றந்தபார்
என்ன தாகில்யா னின்று தந்தனென்
மன்ன போந்துநீ மகுடஞ் சூடெனா.

113 மலங்கி வையகம் வருந்து வைகனீ
உலங்கொ டோளனக் குறுவ செய்தியோ
கலங்கு றுவணங் காத்தி போந்தெனா
பொலங்கு லாவுதாள் பூண்டு வேண்டினான்.

114 பசைந்த சிந்தைநீ பரிவின் வையமென்
வசைஞ்செய் தாலது முறைமை யோவசைக்
கசைந்த வெந்தையா ரருள வன்றுநான்
இசைந்த வாண்டலோ மின்றொ டேறுமோ.

115 வாய்மை யென்னுமீ தன்றி வையகம்
தூய்மை யென்றுமொன் றுண்மை சொல்லுமோ
தீய்மை தானதிற் றீர்த லன்றியே
ஆய்மெ யாகவே றறைய லாவதே.

116 எந்தை யேவவாண் டேழொ டேழெனா
வந்த காலநான் வனத்துள் வைகநீ
தந்த பாரகந் தன்னை மெய்மையால்
அந்த நாளெலா மாளென் னாணையால்.

வேறு.

117 மன்னவ னிருக்க வேயு மணியணி மகுடஞ் சூடு
கென்னயா னியைந்த தன்னா னேயது மறுக்க வஞ்சி
அன்னது நினைந்து நீயென் னாணையை மறுக்க லாமோ
சொன்னது செய்தி யைய துயருழந் தயர லென்றான்.

118 ஒள்ளியோ னினைய வெல்லா முரைத்தலு முரைக்க லுற்ற
பள்ளநீர் வெள்ள மன்ன பரதனை விலக்கிப் பண்டு
தெள்ளிய குலத்தோர் செய்கை சிக்கறச் சிந்தை நோக்கி [ன்.
வள்ளியோய் கேட்டி யென்னா வசிட்டமா முனிவன் சொன்னா

வேறு.

119 கிளரகன் புனலுணின் றரியோர் கேழலாய்
இளையெனுந் திருவினை யேந்தி னானரோ
உளைவரும் பெருமையோ ரெயிற்றி னுட்புரை
வளரிளம் பிறையிடை மறுவிற் றோன்றவே.

120 ஆதிய வமைதியி னிறுதி யைம்பெரும்
பூதமும் வெளியொழித் தெவையும் புக்கபின்
நாதனவ் வகன்புன லல்கி நண்ணருஞ்
சோதியாந் தன்மையிற் றுயிறன் மேயினான்.

121 ஏற்றவித் தன்மையி னமரர்க் கின்னமு
தூற்றுடைக் கடல்வண னுந்தி யுந்திய
நூற்றிதழ்க் கமலத்தி னெய்தின் யாவையும்
தோற்றுவித் ததவிட முதல்வன் றோன்றினான்.

122 அன்றவ னுலகினை யளிக்க வாகிய
துன்றணிக் குலமுத லுள்ள வேந்தர்கள்
இன்றள வினுமுறை யிகந்து ளாரிலை
ஒன்றுள துரையின முணரக் கேட்டியால்.

123 இதவிய லியற்றிய குரவர் யாரினும்
மதவியல் களிற்றினாய் மறுவில் விஞ்சைகள்
பதவிய விருமையும் பயக்கப் பண்பினால்
உதவிய வொருவனே யுயரு மென்பரால்.

124 என்றலால் யானுனை யெடுத்து விஞ்சைகள்
ஒன்றலா தனபல வுதவிற் றுண்மையால்
அன்றெனு தின்றென தாணை யையநீ
நன்றுபோந் தளியுனக் குரிய நாடென்றான்.

125 கூறிய முனிவனைக் குவிந்த தாமரை
சீறிய கைகளாற் றொழுது செங்கணான்
ஆறிய சிந்தனை யறிஞ வொன்றுளது
கூறுவ துளதெனக் கூறன் மேயினான்.

126 சான்றவ ராகதன் குரவ ராகதாய்
போன்றவ ராகமெய்ப் புதல்வ ராகதான்
தேன்றரு மலருளான் சிறுவ செய்வெனென்
றேன்றபி னவ்வுரை மறுக்கு மீட்டதோ.

தாய்பணித் துவந்தன தந்தை செய்கென
ஏயவெப் பொருள்களு மிறைஞ்சி மேற்கொளா
தீயவப் புலையனிற் செய்கை தேர்கிலா
நாயெனத் திரிவது நல்ல தல்லதோ.

128 முன்னுறப் பணித்தவர் மொழியை யானென
சென்னியிற் கொண்டது செய்வெ னென்றதின்
பின்னுறப் பணித்தனை பெருமை யோயெனக்
கென்னினிச் செய்வதை யுரைசெ யீங்கென்றான்.

129 முனிவனு முரைப்பதோர் முறைமை கண்டிலெம்
இனியென விருந்தன னிளைய மைந்தனும்
அனையதே லாள்பவ ராள்க நாடுநான்
பணிபடர் காடுடன் படர்தன் மெய்யென்றான்.

130 அவ்வழி யிமையவ ரறிந்து கூடினார்
இவ்வழி யிராமனை யிவன்கொண் டேகுமேல்
செவ்வழித் தன்றுநஞ் செயலென் றெண்ணினார்
கவ்வையர் விசும்பிடைக் கழறன் மேயினார்.

131 ஏத்தரும் பெருங்குணத் திராம னிவ்வழி
போத்தருந் தாதைசொல் புரக்கும் பூட்சியான்
ஆத்தவாண் டேழினோ டேழு மந்நிலம்
காத்தலுன் கடனிவை கடமை யென்றனர்.

132 வானவ ருரைத்தலு மறுக்கற் பாலதன்
றியானுனை யிரந்தன னினியெ னாணையால்
ஆனதோ ரமைதியி னளித்தி பாரெனா
தானவன் றுணைமலர்த் தடக்கை பற்றினான்.

133 ஆமெனி லேழிரண் டாண்டி லையநீ
நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலம்
கோமுறை புரிகிலை யென்னிற் கூரெரி
சாமிது சரதநின் னாணை சாற்றினேன்.

134 என்பது சொல்லிய பரதன் யாதுமோர்
துன்பில னவனது துணிவை நோக்கினான்
அன்பின னுருகின னன்ன தாகென்றான்
தன்புகழ் தன்னினும் பெரிய தன்மையான்.

135 விம்மினன் பரதனும் வேறு செய்வதொன்
றின்மையி னரிதென வெண்ணி யேங்குவான்
செம்மையின் றிருவடித் தலந்தந் தீகென
எம்மையுந் தருவன விரண்டு நல்கினான்.

136 அடித்தல மிரண்டையு மழுத கண்ணினன்
முடித்தல மிவையென முறையிற் சூடினன்
படித்தலத் திறைஞ்சினன் பரதன் போயினன்
பொடித்தல மிலங்குறு பொலங்கொள் மேனியான்.

137 என்றவர் முதலிய வெண்ணில் சுற்றமும்
சான்றவர் குழுவொடு தவத்து ளோர்களும்
வான்றரு சேனையு மற்றுஞ் சுற்றுற
மூன்றுநூல் கிடந்ததோண் முனியும் போயினன்.

138 பண்டைநூற் றெரிபரத் துவனும் போயினன்
மண்டுநீர் நெடுநகர் மாந்தர் போயினர்
விண்டுறை தேவரும் விலகிப் போயினர்
கொண்டற ஞானையால் குகனும் போயினன்.

139 பாதுகந் தலைக்கொடு பரதன் பைம்புனல்
மோதுகங் கையின்கரை கடந்து முந்தினன்
போதுகுங் கடிபொழி லயோத்தி புக்கிலன்
ஓதுகங் குலினெடி துறக்க நீங்கினன்.

140 நந்தியம் பதியிடை நாதன் பாதுகம்
செந்தனிக் கோன்முறை செலுத்தச் சிந்தையான்
இந்தியங் களையவித் திருந்தன் மேயினன்
அந்தியும் பகலுநீ ரசூத கண்ணினன்.

141 குன்றினி விருந்தன னென்னுங் கொள்கையான்
நின்றவர் நலிவரா னேயத் தாலெனு
தன்றுணைத் தம்பியுந் தானுந் தையலும்
தென்றிசை நெறியினைச் சேறன் மேயினன்.

12-வது. கிளைகண்டுநீங்குபடலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம். 141.

அயோத்தியாகாண்டம்

முற்றும்.